தா கயால் அப்பதிப் ப நாம் இம்மொழிபெயர்ப்புக்கு முக்கிய மாக உபயோகப்படுத்திக் கொள்ளநேர்ந்தது.) சுமார் 40 வருஷ ' களுக்கு முன்பு வெளியான ஆநந்தாச்ரமப் பதிப்பில் அவர்கள் வெளியிட்ட மூலக் கிரந்தத்திற்கு ஆதாரமான எட்டுப் பிரதிகள் மிக ]ம் புராதநமானவை யென்றும் அவற்றில் அத்தியாயங்களின் முடிவில் ஸ்ரீ வத்யபதி ஸிஹ்மகுப்தனுடைய புத்திரனுன வாக் படாசார்யர் இயற்றிய இரஸரத்னஸமுச்சயம் என்று எழுத ப்பட்டிருக்கிறதென்றும் அந்த ஸம்ஸ்கிருத ரஸரத்ன ஸமுச்சயத்தின் முகவுரையில் மொழிந்துள்ள விஷயமும் குறிப்பி டத் தகுந்தது.

மேலும் அஷ்டாங்க ஹ்ருதயத்தில் அதன் ஆசிரியர் எங்கும் தம் பெயரை தாம் குறிப்பிடவில்லை. இரஸரத்ன ஸமுச்சயத்திலா வது தம்மை ஸிஹ்மகுப்தனுடைய புத்திரன் எனக் குறிப்பிட்டிருக் கிருர். அப்படிக்கிருந்தும் அஷ்டாங்க ஹ்ருதயமானது அஷ்டா' ஸங்கிரஹம் இயற்றிய வாக்படராலேயே எழுதப்பட்டதாகப் பெரும்பாலும் அனைவரும் ஆக்ஷேபமின்றியே வழங்கு‍ருர்கள். ஆத்ரேய ஸு‍ச்ருத அக்னிவேசாதி முனிவர்கள் இயற்றிய ஆயுர் வேதக் கிரந்தங்களைப் பரிசீலனை செய்து எட்டு அங்க ' களடங்கிய ஆயுர்வேத சாஸ்திரத்தைத் திரட்டி ஒரு ஸங்கிரஹக்கிரந்தமான அஷ்டாங்கஹ்ருதயத்தை இயற்றிய வாக்படர் பதஞ்ஜலி நாகார்ஜு‍ன ஸோமதேவாதி ஸித்தர்கள் இயற்றிய பலவித இரஸக் கிரந்தங்களைப் பரிசீலனை செய்து விஷய ' களை ஒழுங்காகத் தொகு த்து இரஸரத்ன ஸமுச்சயம் என்கிற இரஸக்கிரந்தத்தையும் இயற்றினதாக நமது தீர்மானம். ஸிஹ்மகுப்தனுடைய புத்திர னை வேறொரு வாக்படனுடைய பெயர் சரித்திரத்திலேயே ‍டை யாது.[2] இரண்டொருவர் இந்நூலின் ஆசிரியரைப்பற்றிய விஷயத் திற் சிறிது ஸந்தேஹத் தக் கிளப்ப ப வேறு சிலர் இரஸரத் தின ஸமுச்சயத்திற்கு அச்விநீகுமாரர்களையும் நித்யந தனையும் ஆசிரியராகக் குறிப்பிட்டுத் தோன்றியவாறு அபிப்பிராயம் கூற முயல்கிருர்கள். ஆதாரமில்லாத அவ்வீண் கூற்று ளைப்பற்றி நாம் கவனி ' கப்பே வதில்லை.

## வாக்படரு டய காலமும மதமும்.

வாக்படருடைய காலத்தைப்பற்றியும் பலவிதமான அபிப் பிராய பேதங்கள் உ ' டு. அவர் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில்

1. ' ஸ்ரீ வத்யபதிஸிஹ்மகுப்தஸ்ய ‍ரோர் ரக்படா சார்யஸ்ய க்ருதௌ ரஸரத் ஸமுச்சயெ * * ' ஸம்ஸ் 'ருத இரஸ ரத்ன ஸமுச்சயம்.

2. வ 'படால ' ரம் இயற்றிய ர்படன் ே ரொரு ன் உ ' டு' அ ' ' பிதாவு 'கு ஸோ ' எ ' று பெயர் ற்ற வி ரங் ளு 'கு ஜி விஷ மா ' மதி அஷ்டா ' ஹ்ருதய மு வு ரபார் ' .

இருந்ததாகத் தான் நாம் தீர்மானிக்கிறோம். சிலர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாக்படர் இருந்ததாகக் கருதுகிறார்கள். ஜயஸிம்ஹ ராஜன் காச்மீரத்தை ஆண்ட காலத்தில் வாக்படர் இருந்ததாக அவர்களது கருத்து. ஜயஸிம்ஹன் காலம் கி.பி. 12 ம் நூற்றாண்டு தான். இதற்கு ஆதாரம் இராஜதரங்கிணியிலும் (8 ம் தரங்கம்) அதற்கு ஸ்டீன் (Stein) என்பவர் எழுதியுள்ள இங்கிலீஷ் முகவுரை முதலியதிலும் பார்க்கலாம். வாக்படரைப்பற்றி இரா தரங்கிணி யில் ஆதாரம் இருப்பதாகவும் வைத்யகசப்தஸிந்துவின் முகவுரை யிற் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இராஜதர கிணியில் வா படரைப்பற்றிய பிரஸ்தாவமே காணப்படவில்லை ஒருக்கால் அவ்விஷயம் வாக்படாலங் ாரம் இயற்றிய வாக்படனைப் பற்றியதா யிருக்கக் கூடுமேயன்றி வைத்திய நூல்களியற்றிய வா படனுக்குப் பொருந்தாதென்பது நிச்சயம். சரக ஸுச்ருதர்களுக்கும் சரக ம் ஹிதையைப் பூர்த்தி செய்த த்ருடபலனுக்கும் பிற்காலத்தில் இருந்த மிகப் பெரிய அறிவாளி இவ்வாக்படன் வாக்படாசாரியர் அஷ்டா. க ஸங்கிரஹத்தில் கல்பஸ்த்தானத்தில் சரகஸம்ஹிதையின் கல்பஸ்த்தானத்திலுள்ள சில விஷயங்களை கத்யரூபமாக அப்படியே கிரஹித்து உபயோகித்திருக்கிறார். த்ருடபலன் என்பவன் பஞ்சநதம் என்னுமிடத்தில் வஸித்து வந்த மிகப் பண்டைக் காலத்திய வத்தியர்[1]. மாதவநிதானம் ஸித்தயோகம் சக்ரதத்த ஸ. கிரஹம் முதலிய நூல்களில் அஷ்டாங்கஹ்ருதயாதிகளிலுள்ள சில விஷயங்கள் எடுத்து உபயோகிக்கப் பட்டிருப்பதோடு வாக்படனுடைய பெயரும் ஆங்காங்கு குறிக்கப் பட்டிருக்கின்றன. ஆயுர்வேதநூல்களைப் படித்தவருக்கு இவ்விஷயம் நன்றாகத் தெரியுமாகையால் இதற்கு மேற்கோள்களை நாம் இங்கு எடுத்து எழுதவில்லை. ஆகவே த்ருடபலனுக்குப் பிந்தியும் மாதவகர ப்ருந்தமாதவாதிகளுக்கு முந்தியும் வாக்படருடைய ஜீவித காலம் எனக் கூறவேண்டும். வங் தேசத்தில் நயபாலன் என்கிற அரசனுக்கு ஆப்த வைத்யராகவும் பாகசாலைக்கு அதிகாரியாக வும் இருந்த ச ரபாணி[2] வாக்படருடைய வைத்தியக் கிரந்தங் ளை அநுஸரித்து நூல் எழுதியிருப்பதால் டத்தாம் நூற்

1. "இத ந்யூ சப்தார்த்த த த்ர தோஷவி ர்ஜித . அ ண்டார்த்த த்ருடபே ர ஜாத: பஞ்ச தே புரே. ருத் ர ** . ர௯. ஸித்தி. அத்தி. 1 . ச்லே . 78.

2. 'கௌடாதிநாதரஸவத்யதி ாரிபாத்ர ாராயணஸ்ய தநயஸ் ஸுநயோந்தரங ாத். பாநோரநு ப்ரதிதலோத்ரபலீகுலீ : ஸ்ரீ சக்ரபாணி ரிஹ கர்த்ருபதாதிகாரீ" சக்ரதத்த . [கௌடாதி ாதன் என்றால் வ கதேசத்து அரசன். இப்போ தய வ காளத்து கு கௌடதேச என்று மூற் ாலத்தி பெயர்: ஸ்டீ இங்கிலீஷ் ராஜத ங்கிணி.]

ரு டுக்குப் பிறகு வாக்படர் காலத் தக் குறிப்பதற்கில்லை. னெனில் நயபாலன் 1040 முதல் 1060 வரையில் அரசு செலுத்தி யிருக்கிருன்.[1] இதற்கு முன் நாம் எழுதியுள்ளபடி வாக்படம் கலிபாவி உத்தரவுப்படி அவர் ளது பாஷையில் மொழி பெயர்க் கப்பட்டிருப்பதையும், ஜியார்ஜ் ஹூத் (Huth) என்பவர் தம் ஆராய்ச்சியில் வாக்படர் ாலம் கி. பி. 8 ம் நூற்றுண்டு குப் பிந்தியதாயிருக்க முடியாதென்று கூறியிருப்ப தயும் ஆலோசிப் போமானல் வாக்படர் காலம் ஐந்தாம் நூற்றுண்டென்கிற நம் அபிப் பிராயத்திற்குச் சிறிது நெரு கிய அத்தாட்சிகள் கிரயமா ணப்படுகின்றன. டாக் ர் மோரேச்வர குண்டே 2200 வரு ஷ களுக்கு (கி. மு. 200 ஆம் ஆண்டு) முன்பட்டவர் வாக்படர் என்று வாக்படக் கிரந்தத்திலட கிய விஷயங்களின் தன் மகளைக் கொண்டு அபிப்பிராயப்படுகிருர். அப்படியானல் வாக்படன் ஸ ச்ருதருக்குச் சமான ாலத்தியவராகப் போவதுடன் சர ரு கு முந்தியவராகவும் இருந்ததாகும் அது முற்றிலும் ஏற் கூடாத அபிப்பிராயம். சர ஸுச்ருத பேளாதிகளின் பெயர் ளை யும் அ ர் ளது கிரந்த விஷய களையும் வாக்படர் கிரஹித்திரு கும்போது குண்டே அவர் ள் அவ்வளவு ஸந்தேஹமின்றி வாக் படர் காலத்தை அவ்விதம் கூறுவது எங்ஙனமென்று விள வில்லை. சீனதேசத்து யாத்ரிகன் இத் ஸி எ பவன் இ னம் கூறியிருப் பது சரித்திர ாருக்குத் தெரிந்திருக்கும்: ஆயுர்வேதம் எட்டு அ ள் அடங்கியது. ஒவ்வொன்றுக்கும் பல ஆசிரியர்கள் தனித் தனி நூல் ள் எழுதியிருந்தனர் பிறகு அவ்வெ ட்டு அ க ளும் ஒன்று த் தொகுக்கப்பட்டு அஷ்டா ங்களட கிய ஒரு ஸ கிரஹநூல் ஒருவனல் எழுதப்பட்டது. எ கிற இதிலிருந்து அச் சீன தேசத்து யாத்ரிகன் குறிப்பிடும் கிரந்தம் அஷ்டா க ஸ கிர றம் அல்லது அஷ்டா ஹ்ரு யமாக இருக் வேண்டுமென்று விள குகிறது. திருச்சூரிலிருந்து வெளியாயுள்ள அஷ்டா ஸ கிரஹத்திற்கு முகவுரை இயற்றியிருப்பவர் இரண்டாம் நூற்றுண் டில் வாக்படர் இருந்திருக்கலாம் என்கிருர் அப்படியானல் நாகார் ஜுனன் அவனுக்கும் பிந்திய ாமதேவன் முதலியவர்களைப் பற்றிய குறிப்புகள் வாக்பட நூல் ளில் கா பதற்கு ஹேதுவில்லை. சீனயாத்ரிகன் தான் யாத்திரை செய்த காலத்திய கல்விமா முதலியவர்களுடைய வரிசையில் வாக்படரைப்பற்றிய விஷயத் தைக் குறித்திருக் வும் அவசிய மேற்பட்டிரு ாது. ஆகவே

1. டா டர் பி. ஸி. ராய். ஹி து மெஸ்ட்ரி. இர டாம் பதிப்பு V . I.P. IV. 4)

2. அஷ்டாங் ஹ்ருதயத்தி இங்கிலீஷ் மு வு ர திர் ய ஸாகர பிரஸ் பதிப்பு பார்க்க.

3. I'T : " R c rd h B dd R l i ' by T kk k u. P. 12 .

நாம் பாக்படர் கி. பி. ஐந்தாம் நூற்றூண்டில் இருந், ார் எ ' கிற முடிவுக்கு வருகிறோம்.

ாக்படர் வட இந்தியாவில் ஸிந்துதேசத்தில் பிறந்து வளர்ந் தவரென்பது அவர் எழுதிய ச்லோகத்தினுலேயே பிரஸித்தம் ஜெஜ்ஜடன் யாதாஸன் இந்து முதலிய பல வைத்திய சாஸ்திரப் பிரமுகர்கள் அவருடைய சீடர்களென்று கூறப்படுகிறது.² அஷ்டா ' ஹ்ருதயாதிகளில் வேதமந்திர ' களைப் பிரஸ்தாபிப்ப தாலும் பிராம்மணர்களேயும் இருஷி ளேயும் பூஜிக்கும் முறைகளை மொழிவதாலும் வா ' படர் பிராம்மணர் என்று சிலரது எண்ணம். வேறு சிலர் அவர் முதலில் பிராம்மணராயிருந்து பிறகு புத்தமதத் தத் தழுவியவர் என்று கூறுகிறார்கள். ஆனால் அவர் சுத்த புத்த ரென்பது நமது கொள் க. அக்காலத்தில் பௌத்தர்கள் சாஸ்திர விஷய ' களைக் கூறுவதில் மதபேதக் கொள் ககளை மனதில் வக் ாமல் அவசியமான விஷய ' ளை நிஷ்கபடமாய் வெளியிடுப ரா வே இருந்தனர். ஹிந்து ' ளும் முற்காலத்தில் அவ்விதமே இரு ந்ததாகவும் தெரியவருகிறது. உதாரணமா அமரஸிஹ்மன் (கி.பி. 1 ம் நூற்று ' டில்) இயற்றிய நிக ' டுவில் ஹிந்துக்களுடைய ஏற்பாடுகளை அனுஸரித்து இந்துதைவ ' ளைப்பற்றியும் வர்ணு ச்ரமதர்ம ' ளை அநுஸரித்த விஷய ' களைப்பற்றியும் தான் ஐ னன் என்பதைப் பாராட்டாமல் , னித் தனி ர்க்க ' களமைத்து நூல் இயற்றியதும் ஹிந்து ' ளும் தாராளமா கொள் யுடன் புத்த தே ன் அஸாதார மான குண ' ளேயும் மஹி ம யயும் பெற்றிருந்ததை ' டு அவ ர விஷ்ணுவின் ஓர் அம் ா தார மா ' ெ ா ' டு முதலில் கௌரவித்ததும் இதற்குச் சான்றும். அமரஸிஹ்மன் மதக்கொள் க ளைக் காட்டாம ' நிஷ்பக்ஷபாத மாக நி ண்டு இயற்றியது போலவே ஆசாரியவாக்படனும் பௌத் தனுயிருந்தும் தம் மத ' ே ாட்பாடுகளைப் பாராட்டாமல் அக்காலத் திலிருந்த வத்தியஸம்பந்தமான அநுஷ்டாந ' களேயும் விஷய ' ளேயும் தமது நூலில் விளக்கவேண்டியதையே தம் கடமையெ க் கருதியதாகக் ெ ாள்ளவேண்டும். நாம் வாக்படனை முற்றிலும் பௌத்தனென்றுதான் தீர்மானிக்கி ன்றோம். நமது இத்தீர்மானத் திற்கு ஆதாரமா வேறு பல பிரமாண ' களைக் குறிப்பிட்டு நமது அஷ்டா ' ஹ்ருதய மொழி பெயர்ப்பின் முகவுரையில் விஸ், ார மாகவும் விள ' வும் எழுதியிருப்பதால் அவ்விஷயங் ளே

1. பிஷ ' ரோ வா ' பட இத்யபூ 'மே பிதா ஹா ாமத ரோஸ்மி யஸ்ய. ஸூதோப த்தஸ்ய ச ஸிஹ்மகுப்தஸ் த ' ாப்யஹ ' ஸி ' துஷூ ாத ந்மா '- அஷ்டாங் ஸங்கிரஹம்.

2. லம்பச்மச்ரு லாபமம்பு நிபச்சாயேக்ஷணம் த்ய ா ' அ ' தேவ ஸி இந்து ஜெஜ் டமு ாங் அத்யா பய ' தம் தா * * * * த் ாயே த்ருடம் வா 'படம்.

மீண்டும் இங்கு விவரிக்கக் கருதவில்லை. ஆசார்யவாக்படன் ஆயுர்வேத சாஸ்திரத்தில் மிகப் பிரவீணனாயிருந்து சரகாதிகளுக்குப் பிறகு சரகாதிஸம்ஹிதைகளினும் பல சீர்பாடுகளமைந்த மிகச் சிறந்த அஷ்டா ்க முறைகளை வெளியிட்டார். அவர் சிகித்ஸா சாஸ்திரத்தையே முக்கியமாக இரஸ மூலிகா முறைகளைப் புதுப்பித்து உலகத்துக்கு உபகரித்ததால் அவருடைய பெயரைக் கொண்டே தமிழ்நாட்டில் ஏற்பட்ட சிகித்ஸா கிரந்தங்கள் வா ட நூல் ள் என்றும் வழங்கப்படுகின்றன. வாக்பட ர் விவரித்துள்ள இரஸசாஸ்திரஸம்பந்தமான பரிபா ஷைகளின் பெரிய வரிசைளைப் படிப்பவர் தமிழில் அவ்வித இரஸ வைத்தியநூல் ஏதும் கிடையாதென்பதையும் பண்டைக் காலத்தில் இர சாஸ்திரம் ஸம்ஸ்க்ருதத்தில் மிகவும் மேன்மையடைந்திருந்ததென்பதையும் உணருவர் என்பது உண்மை. வாக்படர் வைத்திய சாஸ்திரத்தில் மிகப் பெருமை வாய்ந்தவராயிருந்ததோடு இதரசாஸ்திரங்களிலும் அவர் வல்லவராயிருந்ததாகத் தெரிகிறது. அவர் எழுதியுள்ள வத்திய நூல்களிற் பல பாகங்கள் சாஸ்திர விஷய ்களை அழகிய காவ்ய ்களாகச் செய்தது போலவே இரஸிகரான வைத்தியர் ளுக்குப் புலப்படும். வாக்கு வன்மையில் பெரும் கியாதியடைந்ததற்கு முற்றிலும் ஏற்ற வகையில் அவருக்கு வாக்படன் என்னும் பெயர் வழங்கப்படுகிறது சரக ஸ ச்ருதர் ளுக்குப் பிறகு வைத்திய சா ் திரத்திற்குப் பிரமா புருஷனு க் ருதப்படுபவர் இவ் வாக்படரே. முற் ாலத்தில் வெவ்வேறு ஆசிரியர்கள் இயற்றிய பலவேறு ்வத்தியக் கிரந்த ்களில் சிதறிக் கிடந்த சிறந்த விஷய ் ளைத் தொகுத்துச் சீர்திருத்தி அவசியமான அகில அம்ச ்களும் அட ்கிய ஆயுர்வேத நூல்களையும் அதேவிதமாகச் சிறந்த இரஸக் கிரந்தத்தையும் இயற்றிய வாக்படனைச் சரக ஸுச்ருதாதிகளினும் உயர் ாக உரைத்திடும் வித்வான்களும் உளர். அது காரணம் பற்றியே நாம் முன்பு சரகாதிக் கிரந்த ்கள் இருக்கையில் வாக்படருடைய அஷ்டாங்க ஹ்ருதயத் தத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டோ ாம். அக்காரணத்தினாலேயே வேறு பல இரஸக் கிரந்தங்கள் வடமொழியில் இருக்க வாக்படருடைய அரிய இரஸ வத்தியநூலான இக்கிரந்தத்தையும் இங்ஙனம் மொழிபெயர்த்துப் பிரசுரம் செய்யலானோம்.

## ெ ாழி பெய ்ப்பு முறை.

அஷ்டா ்கஹ்ருதயாதி ம்ஸ்க்ருதக் கிரந்தங்களை மொழிபெயர்த்த முறையையே இதிலும் அநுஸரித்திருக்கிறோம். ஆனால்

1. வாக்படரை ஆ ்திரதேசத்திலும் வேறு இடங்களிலும் ப ஹட ் எ ்றும் ழங்குவதோடு அவர் இயற்றிய நூலும் பாஹடம என்றே மொழியப்பட்டு வ ்ததால் பிற்காலத்திலேற்பட்ட ஔஷத முறை ஸம்பந்தமான வைத்தியநூல்களும் தமிழரால் ட (Ph rm copœia) என்னும் பெயரால் வழங்க ேரிட்ட .

முதல் அத்தியாயத்தில் ஹிமாலயவர்ணனையிலும மூன்றாம அத்தியாயத்தில் கந்தக உற்பத்தி வர்ணனையிலும் வேறு இரண்டோரிடத்திலும் வத்தியசாஸ்திரத்திற்குச் சம்பந்தமில்லாத சில வர்ணனைகளின் அம்சம் இம்மொழி பெயர்ப்பில் சேர்க்கப்படவில்லை. நாம் ஆநந்தாச்ரம ஸம்ஸ்க்ருதக் கிரந்தாவளியில் வெளியான இரஸரத்தின ஸமுச்சயத்தை முக்கியமாகவும் கல்கத்தாவிலும் பம்பாயிலும் வெளியான இரண்டு மூன்று வேறு பதிப்புகளைச் சிறிது உதவியாகவும் வைத்துக்கொண்டு இத்தமிழ்மொழி பெயர்ப்பை நிறைவேற்றினோம். சாஸ்த்ரீயமான பாரிபாஷிகச் சொற்களைத் தமிழிலும் (அவ்விதச் சொற்கள் தமிழில் கிடையாவாகையால்) அவ்வவ்வாறே எழுதி அவ்வருஞ் சொற்களுக்கும் வேறு அரிய விஷயங்களுக்கும் விஸ்தாரமாக டிப்பணியும் எழுதியிரு க்கின்றோம். ஒவ்வோர் அத்தியாயத்திலுமுள்ள விஷயங்களை ஏற்றவாறு பகுத்து அவ்விதம் பகுக் ப்பட்ட பாகங்களுக்குப் பக்க களில் அவ்வவ்விஷய ளைக் குறிப்பிடுபவையான தலைய க களும் எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விஷய அகராதிகள் அட்டவணை முதலிய வகளும் நாம் மற்ற நூல்களுக்குச் செய்தது போலவே இதற்கும் ஒழு குபட எழுதிச் சேர்த்திருக்கிறோம். இப்பொழுது வெளியிட்டுள்ளது இர ரத்தின ஸமுச்சயத்தின் முதற்பாகம். இதில் இரஸ லோஹ தாதுப் பொருட்களின் பல வேறு வகுப்புகள் அவற்றின் குணபாட ள் அவற் றச் த்தி பஸ்ம திராவ ஸத்துவாதிகளாகச் செய்யும் அநே அரிய முறை ள் அவற்றின் உபயோ கிரம ள் அம்முறைளை நிறைவேற்றுவதற்கான மூ ஷ ள் ய திரங்கள் ே ஷ்டி ள் ஆிய சாஸ்த்ரீய விஷய கள் பதினோர் அத்தியாய களில் விளக் ப்பட்டிருக்கின்றன. நாம் முதலிற் கோரியபடி இரண்டாம் பா த்தையும் தொடர்ந்து வெளியிட தற்காலம் நமக்கு இயலவில்லையென்பதைக் குறிப்பிட வருந்துகிறோம். மொழிபெயர்த்தல் முதலிய பெரும் சிரமத் தப் பொது ங களின் ம்மாறின்றி நாம் ஏற்றுக்கொண்டதோடு அம்மொழிபெயர்ப்பை வெளியிடுவதற்கான பெருஞ் செலவையும் நாமே சுமரவேண்டி யிருக்கின்றது. அவ்விதம் செய்தும் நூல்களை விலைக்காவது வா க முன்வரும் வத்தியர் ளும் அபிமானிகளும் அரிதாயிருப்பது வருந்தக்கூடிய விஷயமல்லவா? அத்துடன் பிராசீனமான அரிய சாஸ்திர விஷயங் ளி விருத்தியிற் கருத்தின்றி வீணிற் பொழு ம பொதிந்த மனத்தினரான இக்காலத்திய தமிழ்நாட்டு வைத்தியர்களு கிடையே நாம் இவ்வளவு பெரு காரியத்தைச் செய்து தமிழ்நாட்டுக்கு எம்மாலான ஊழியம் செய்வதை உவக்கும் உத்தமபுருஷர் சிலரேனும் உலகில் தோன்றக்கூடுமென்கிற ஓர் ஆற்றலே இச்செலவு பெருிய வைத்தியப் பிரசுரத்தில் நமக்குத் தூண்டுதலாயிருந்தது.

மே. ரை வாமி ஐய ா

# பொருளடக்கம்

## முதல் அத்தியாயம்.

(இரஸோத்பத்தி)

பக்கங்கள். 1 ൵



## இரண் ாம அத்தியாயம்.

(மஹா ரஸங்கள்)

ப ் கங்கள். 5 24

## ஆறும அத்தியாயம.

(சிஷ்யோப ய ம்)

ப ˙ ங்கள் 84 91.

## பதினோராம் அத்தியாயம்.

(இரஸ ஸம்ஸ் ாராதிகள்)

பக் ங்கள் 136 152.

# இரஸ ரத்தின ஸமுச்சயம்

## பூர்வ கண்டம்.

## முதல் அத்தியாயம்.

### இரஸோத்பத்தி.

கடவுள் வழி பாடு.

மங்களத்திற்குக் காரணமான கலையெனக் கருதப்படுவதும், ஆனந்தப் பெருக்கினால் தோன்றியதும் பேரொளி வீசுவதும் ஸித்தர் செய்யும் இரஸ ஸித்திகளுக்கு அமுதமெனக் கூடியதுமான எவரது கருணைகடாக்ஷமாகும் அம்ருதக்கடலால் பக்தர்களுடைய பிறப்பு இறப்பு மூப்பு விருப்பு முதலான எல்லாப்பிணிகளும்[1] நொடிப் பொழுதில் விலகிப் போகின்றனவோ உலகத்திற்குப் பிரதான வைத்தியரான அப் பரம புருடனைப் பணிவேனாக. 1.

இருபத்தேழு ஸித்தர்கள்.

ஆதிமர்[3] சந்திரஸேனர் லங்கேசர் விசாரதர் கபாலி, மத்தர் மாண்டவ்யர் பாஸ்கரர் சூரஸேனர் இரத்தின கோஷர்[4] சம்பு ஸாத்விகர், நரவாஹனர் இந்திரர் கோமுகர் கபிலர்[5] வியாடி நாகார்ஜுனர் ஸுராநந்தர் நாகபோதி யசோதனர் கண்டர் கபாலிகர் பிரஹ்மா கோவிந்தர் லம்பகர் ஹரி என்கிற இருபத்தேழு ஸித்தர்கள் இரஸஸித்தியளித்தவராவர். 2 4½.

---

1. பிறப்பு இறப்பு முதலிய ஸஹஜ வியாதிகளும், விருப்பு வெறுப்பு (ராக-த்வேஷாதிகள்) முதலிய மனவியாதிகளும் குறிக்கப் படுவதால் மற்றச் சாரீர வியாதிகள் தீருவதைப்பற்றி ஐயமில்லையென்பது கருத்து.

2. இதனால் ஸ்ரீமந்நாராயணன் குறிக்கப்படுதாய் அறிக. அக் கருத்தைக் கொண்டே "வைத்யோ நாராயணோ ஹரி:" என்று ஆன்றோர் கூறுவர். ஸ்ரீமஹா விஷ்ணுவின் அபரமூர்த்தியான ஸ்ரீதன்வந்தரியைக் குறிப்பிடுதாகவும் கருதலாம். அல்லது கருணையே உருவெடுத்து வந்ததாகச் சொல்லப்படும் பகவதவதாரங்களில் ஒருவராகிய புத்ததேவனைக் குறிப்பிடுவதாகக் கருதுவதும் பொருந்தும்.

3. இரஸஸித்தியை முதலிற் கண்டறிந்ததனால் 'ஆதிமர்' என்றே அந்த ஸித்தர் வழங்கப்பட்டதாகத் தோன்றுகிறது. மஹேச்வரருக்கு ஆதிமன் என்று பெயர் வழங்கப்பட்டதாகவும், சிலர். ஆகமர் என்றும் வேறுபாடம் வழங்குவதுண்டு.

4. இரத்தினகோசர் என்றும் பாடமுண்டு.

5. கபிலர் என்பதற்குப் பதிலாய் 'கம்பலி' என்கிற பாடமுமுண்டு.

இ நூலுக்கு ஆதாரமான ஆதி இரஸ கிரந்தங்கள்.

இரஸாங்குசர் பைரவர் நந்தி ஸ்வச்சந்தபைரவர் மந்தாந பைரவர் காக சண்டீச்வரர் வாமதேவர் ருச்யச் ருங்கர் க்ரியா தந்த்ர ஸமுச்சயீ இரஸேந்திர திலக யோகி பாலுகி மைதிலர் மஹாதேவர் நரேந்தி ரர் வாஸுதேவர்[1] ஹரீச்வரர் ஆகிய இவர்க ளுடையவும் மற்றும் பலருடையவும் இரஸக் கிரந்தங்களை ஆராய்ந்தெடுத்து சிகித்ஸா விஷயத்தில் முற் றிலு முபயோகமாயுள்ள இரஸவர்க்கங்களாலாகிய ஸித்தௌ ஷதமுறைகளைத் தொகுத்து விளக்குவதற்காக ஸிஹ்மகுப்த புத்திரரால்[2] இந்த இரஸ ரத்தின ஸமுச் சயம் என்னும் நூல் இயற்றப் படுகிறது. 5 8½.

இ நூலின் பெயரும் ஆசி ரியரும்.

இந் நூலில் வழங்கப்படும் விஷயங்கள்.

இரஸங்கள் உபரஸங்கள் லோஹங்கள் அவற்றின் சுத்தி முதலியதற்கான யந்திரமுறைகள் சுத்தி முத லியதற்கான பலவேறு உபாயங்கள் ஸத்துவபாத நம் த்ருதிகள் பஸ்மங்கள் ஆகிய முறைகளைப்பற் றிய விஷயங்கள்[4] இதில் விளங்கக் கூறப்படும். 9 10.

இரஸத்தின் உற்பத்தியும் மஹிமையும்.

வடதிசையிற் பனிக்கு உறைவிடமாக மிகப் பிரஸித்தமாய் அமைந்துள்ள எல்லாப் பர்வதங்களுக்கும் அரச னெனக் கூடிய ஹிமாலயத்தில் வீற்றிருக்கும் சிவ பெருமானிடமிருந்து உலகத்தைக் காப்பதற் கென் றுற்பவித்தது மஹாரஸமாம். இரஸலிங் கம் செய்து ஒருவன் அதை பக்தியோடு போற்றி வந்தால் மூவுலகிலுமுள்ள லிங்கங்களைப் பூஜிப்பதாலான பலனை அவன் அடைவான். இரஸத்தை உண்பது பரிசிப்பது தானம் செய்வது தியானிப்பது அர்ச்சிப்பது ஆகிய வகைகளில் இரஸ பூஜை ஐந்து விதமென்றும் அப்பூஜை கள் மஹாபாதகங்களையும் நிவர்த்திக்க வல்லவை யென்றும் கூறப்படுகிறது. முறைப்படி சுத்தி செய்து பஸ்

ஐந்து வித இர ஸ பூஜைகள்.

1. வாஸுதேவர் என்பதற்குப் பதிலாய் இரத்நாகரர் என் று பாடமுண்டு.

2. ஆசார்ய வாக்படர் என்று பொருள்.

3. இரஸப் பிரதானமான ஔஷதமுறைகள், இரஸ-லோஹாதி கனிஜச் சரக்குகளின் சுத்திமாரணாதி முறைகள் ஆகியவற்றுள் ஒரு சிரேஷ்டமான அம்சங்களை மாத்திரம் பொறுக்கித் திரட்டியியற்றிய ஸங்கிரஹக்கிரந்தம் என்பது 'இரஸரத்தின ஸமுச்சய' என்பதன் கருத்து.

4. இரஸோபரஸாதிகளைப் பற்றியும், அவற்றின் சுத்தி பஸ்ம ஸத்துவ பாதநாதி கிரமங்களையும்பற்றிய எல்லா விஷயங்களையும் இனி வரும் அந்தந்த விஷயங்கள் அடங்கிய அத்தியாயங்களில் பார்க்க.

மாதி முறைகளிற் பக்குவம் செய்த இரஸத்தை ஏற்ற ரோகங்களில் பிணியாளிக்குக் கொடுப்பவன் அச்வமேதயாகாதிகளைச் செய்வதாலான பலனைப் பெறுவான். இரஸமானது தான் மூர்ச்சித்து நோயைப் போக்கும்; தான் பந்தமடைந்து முத்தியளிக்கும்; ம்ருதியடைந்து அமரத்வத்தைக் கொடுக்கும்.[1] ஆகவே அவ்வித இரஸத்தினும் கருணை மேலிட்டவர் வேறெவர் உளர்? குருஹத்தி கோஹத்தி பிரஹ்மஹத்தி முதலிய ஹிம்ஸாகரமான மஹாபாபங்களைச் செய்வதன் பலனுய் உண்டாகும் ச்வித்ரம் என்கிற நோயையும் போக்கக் கூடியதானால் அவ்வித இரஸத்தினும் மேலான புனித வஸ்து வேறொன்றுமுண்டோ? ஈச்வரனிடமிருந்து நழுவி அக்னி முகத்தில் வீழ்ந்த அளவற்ற வீர்யமானது நூறு யோஜனை ஆழமும் விஸ்தீர்ணமுமுள்ள ஐந்து பிரதேசங்களில் ஆழ்ந்து வியாபித்தது. அதுமுதலாக அவ்வீர்யம் அப்பூமிகளின் குணங்களுக்கேற்றவாறு ஐந்து விதமான தன்மைகளைப் பெற்றன; அவை இரஸம் இரஸேந்திரம் ஸூதம் பாரதம் மிச்ரகம் என்பனவாம்.

ஐந்து வித ரஸங்கள்.

அவற்றுள் (1) இரஸம் என்பது சென்னிறமானது; எவ்வித தோஷக்கலப்பும் அதற்கு இராது; இரஸாயநம் என்னும் விசேஷ குணமுள்ளது; அதனாலே தேவர்கள் நோயற்றவராகவும் மூப்பு இறப்பில்லாதவராகவும் ஆயினர். (2) இரஸேந்திரம் என்பதும் தோஷம் நீங்கிய கலப்பற்ற சரக்காகவே இருக்கும்; அது ஒருவித கபில நிறமானது; ரூக்ஷமாகவும் அதிக நிர்மலமாகவும் இருக்கும்; நாகர்களென்னும் தேவஜாதிகள் அதை இரஸாயநமாக உட்கொண்டு முதுமையும் மரணமும் அற்றவராய்விட்டனர். அவ்விரு இரஸங்களையும் பிறருக்குக் கிடைக்காவண்ணம் தேவர்களும் நாகர்களும் பின்னர் மறைத்துப் போட்டனர். (3) ஸூதம் என்கிற இரஸம் சிறிது மஞ்சள் நிறமுள்ளதாய் பரிசிப்பதற்கு ரூக்ஷமாயிருக்கும்; அது தோஷங்கலந்த சரக்கு; பதினெண்வகையான ஸம்ஸ்காரங்களால் பக்குவம் செய்யப்படுமானால் இந்த ரஸம் தேஹத்தை லோஹம்போல வன்மையுள்ளதாகச் செய்யும். (4) மற்றொரு ஆழ்ந்த பூமியில் தங்கியிருந்த இரஸம் வெண்மையானது; அது பாரதம் என வழங்கப்படுகிறது; அநேகவிதமான ஔஷதமுறைகளில் உபயோகிக்கப்படுவதும் பெரும்பாலான பிணிகளையும் போக்கவல்லதும் இதுதான். (5) மயிற் றேகைக்குச் சமானமான நிறங்களைப் பெற்ற இரஸம் மிச்ரகம் எனப்படுகிறது; அதுவும் அஷ்டாதச ஸம்ஸ்காரங்கள் என்கிற பதினெட்டு விதமான சுத்திமுறைகளைக் கொண்டு பதன் செய்யப்படு

---

1. மூலிகை முதலியதால் கஞ்சுகமென்கிற லோஹாதி ஆவரணங்களை அல்லது லப்புகளைப் போக்கி இரஸத்தைச் சுத்தப்படுத்தி நயப்பிப்பது மூர்ச்சநம் எனப்படுகிறது. பந்தமென்பது கட்டுவது. ம்ருதியென்றால் பஸ்மமாக்குவது.

மாலுல் பலவிதமான ஸித்திகளைத் தரும். (1) எல்லா தாதுக்களையும் கிரஹிக்கும் தன்மையுடையதாகையால் ரஸம என்று கூறப்படுகிறது; அல்லது கிழத்தனம் பிணி மரணம் இவற்றைப் போக்குவதற்கு உபயோகமாகிறதென்கிற காரணத்தினுல் ரஸம் எனப்படுகிறது. (2) இரஸங்கள் உபரஸங்கள் இவற்றிற்கு அரசன் எனக்கூடியதா யிருப்பதால் இரஸேந்திரம என்று வழங்கப்படுகிறது. (3) தேஹஸித்தியையும் லோஹஸித்தியையும் உண்டு பண்ணுவதால் [1] ஸூதம் எனப்படுகிறது. (4)) ரோகங்களாகும் ஆழ்கடலில் அமிழ்பவரைக் கரைசேர்ப்பதால் பாரதம என்று பெயர் வந்தது. (5) ஸகலதாதுக்களுக்குமுள்ள தேஜோரூபமான குணங்கள் எதில் மிச்ரமா யிருக்கிறதோ அந்த இரஸம், மிச்ரகம எனப்படுகிறது· அது பலவிதமான பலன்களைத் தரும். 11 S1½.

மானிடருக்கு இயல்பான மிருத்யுவையும் பிணிகளையும் பரிஹரிக்கும் இயல்புள்ள இத்தகைய இரஸத்தின் பிரபாவத்தினுல் மனிதரும் தேவர்களுக் கொப்பான வலிமையையும் ஆயுளையும் பெறுவதைப் பார்த்து தேவேந்திரன் கவலையுற்று ஈசனைப் பிரார்த்திக்க அப்பால் கஞ்சுகாதி தோஷங்களை அதில் சேர்ப்பித்தார்· அதுமுதலாக இரஸமானது சுத்தி முதலிய ஸம்ஸ்காரங்களை முறைப்படி நிறைவேற்றினு லன்றி சிறிதும் பயன் படுவதில்லை.

இரஸத்தின் கஞ்சுகாதி தோஷங்கள்.

(1) ஜல ரூபமாகப் பெருகுவதால் ஜல தியையும (2) அன்னம் போன்று அசைவதாலே ஹமஸ தியையும் (3) மலின வஸ்துக்களுடன் சேர்ந்து மாலிந்யமடைவதால் மல தியையும் (4) அக்னிஸம்பந்தத்தினுல் புகை யுருவ கொள்வதால் தூமகதியையும பெறுவது இரஸத்திற்கு இயல்பு. (5) ஜீவ தி யென்பது இரஸத்தின் ஓர் அபூர்வமான சக்தி; அது தேவர்களுக்கே புலனுகும்· அண்டத்திலிருந்து ஓர் ஜீவன் கிளம்புவதுபோல இரஸத்தில் இச்சக்தி தோன்றுகிறது. அவ்விசேஷ குணம் ஜீவராசிகளை உஜ்ஜீவிக்கச் செய்கிறது· ஆகவே இரஸம் ஜீவன் எனப்படுகிறது· இவற்றுள் முதல் நான்கு கதிகளும் பார்க்கக் கூடியவை· ஐந்தாவது கதி காணக் கூடாதது· அதன் ஐந்தாம் கதி மந்திரம் முதலியவற்றுலே தகையக் கூடியதாப். இரஸத்தின் கதிகள் இவ்விதம் பலவாறு பேதமடைவதால் அதை நன்றுக ஸம்ஸ்கரிப்பது அரிதான காரியம்· மிகத் திறமை வாய்ந்தவர்களே அதை ஸம்ஸ்கரிக்க வல்லவர். (1) பூமியை வெட்டிச் சில விடங்களிலிருந்து இர

இரஸத்திற்குப் பஞ்ச கதிகள்

1. ஸூதே (தேஹ லோஹ ஸித்திகளை) உண்டுபண்ணுகிறது என்று 'ஸூதம்' எனப் பெயர் வந்தது.

2. பாரஸ்ய தாரத் (வியாதிகளின் கரை சேர்க்கு மியல்புடையதால்) 'பாரதம்' என்று வழங்கப்படுகிறது

ஸத்தை எடுப்பார்கள். (2) தாத தேசத்தில்[1] அக்னி முகத்திலிருந்து குருத்தன்மையினால் சிதறி வீழ்ந்த இரஸம் பூமியில் மண்ணோடு மறைந்திருக்கும் அந்த மிருத்திகையை[2] அவ்வப் பிரதேசங்களில் வஸிப்பவர் கிரஹித்து பாதநயந்திரத்தில்[3] போட்டு அதிலிருந்தும் இரஸத்தை கிரஹிக்கிறார்கள். 89 90.

இரஸத் த கிரஹித்தல்

## இர டாம அத்தியாயம்.

### மஹா ரஸங் ள்.

அப்ரகம், வைக்ராந்தம் மாக்ஷிகம் விமலம் சிலாஜது ஸஸ்யகம் சபலம் ரஸகம் என்பவை எட்டு மஹா ரஸங்கள். இவற்றைப் பகுத்தறிந்து கிரஹித்து வைத்துகொள்ளவும்.[4] 1.

மஹா ரஸங்கள் எட்டு.

### அப்ர ம.

அப்ரகம் கௌரியின் இரே ாதாது வெனப்படுகிறது. அமிருதத்தைப்போன்று மிக சிலாக்யமான குணங் தரத்தக்கது. வாத பித்தக் கோளாறுகளையும் க்ஷய ரோகத்தையும் ஹரிக்கும். அறிவைத் தூண்டி விருத்தி செய்யும். பொதுவாகப் பெரும்பான்மையான முக்கிய ரோகங்களைத் தணிக்கும். வ்ருஷ்யம் ஆயுஷ்யம் என்கிற குணங்களிற் சிறந்தது. பல்யம் ருசிகரம்[5] கபஹரம் தீபநம் என்னும் குணங்களை யுடையது. ஸ்நிக்த்தம் சீதவீர்யம் என்னும் தன்மைகளைப பெற்றது. மேலும் அந்தந்த பிரயோக முறைகளுக்கேற்ப ஸகல ரோக களையும் நிவர்த்தி செய்யவல்லது. பாரதத்தைக் கட்டுவதற்குமுப யோகமானது. 2.

அப்ரகத்தி பொது குணங்கள்.

1. தாத தேசம் ஹிமாலயத்தற்கு அருகில் காச்மீரத் தச்சார்ந்த சில பூபிரதேசம் தாதம் என்று வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. அல்லது தாதம் என்னும் மிருத்திகையைப் பெற்ற பிரதேசம் என்றும் கூறு ர்.

2. ஹிங்குளம் எ கிற இரஸம் நிரம்பிய ம்ருத்தி க.

3. பாத யந்திரம் ஊர்த் பாதநம், திர்ய பாத ம் என்கிற ய திரங்கள். (யந்திரங்களின் விவர ம் பிறகு ஒன்பதாம் அத்தியாயத்தில் பார்க்க.)

4 இ த மஹாரஸ களின் விவரணம் கிரமமாக இனி ரும். [மாக்ஷீ ம், விமலம், சிலாஜது, சபலம், இரஸகம், தாதம் (இ குளம்) ஸ்ரோதோஞ் ஜநம், அப்ரகம் ஆகியவை மஹாரஸ கள் எ று இர ார் ணவம் கூறுகிறது.]

5. வ்ருஷ்யம் ஆண்மையை விருத்தி செய் து. ஆயுஷ்யம் ஆயுளை விருத்தி செய்வது. பல்யம் தேஹவன் மயை விருத்தி செய் து. ருசி ரம் அரோசகத்தைப் போக்கி நாக்கில் சு வயை விருத்தி செய்வது.

அப்ரகத்தை யெடுக்கவேண்டிய ஸ்தலத்தின் ஆழம்.

ஓர் இராஜஹஸ்தம்[1] அளவான ஆழத்திற்குக் கீழே கனியிலிருந்து யாதொருவர் அப்ரகம் வெட்டியெடுக்கப்படுகிறதோ அதுவே சாஸ்திரத்திற் கூறிய பலனைத் தரும்; மற்றது ஸத்துவ ஹீனமாகவும் பயனற்றதாகவும் இருக்கும். 3.

நான்கு வித அப்ரகங்களும் அவற்றின் குணாகுணங்களும்.

அப்ரகமானது பிநாகம் நாகம் மண்டூகம் வஜ்ரம் என்று நான்கு வகைப்படும். அவற்றுள் ஒவ்வொன்றும் வெளுப்பு சிவப்பு பசுமை கறுப்பு என்று மீண்டும் நாலு வகைப்படும். அவற்றுள் (1) பிநாகம் என்னும் அப்ரகத்தை அக்னியிற் காய்ச்சினால் செதிள் செதிளாகப் பலவாறு பிரியும்; அதை உட்கொள்ளப்படுமானால் மலங்களைக் கட்டி[2] மனிதனுயிரை மாய்க்கும். (2) நாகம் என்னும் அப்ரகத்தை நெருப்பிலிட பாம்பு சீறுவதுபோலச் சப்திக்கும்; அதையுட்கொண்டால் மண்டல குஷ்டம் உண்டாகும். (3) மண்டூகம் என்னும் அப்ரகத்தை அக்னியிலிட்டு ஊதினால் அது தவளையைப்போல் குதித்து விழும்; அது புஜிக்கப்படுமானால் சஸ்திரத்தினாலன்றி வேறு வகையில் நிவர்த்திக்கக் கூடாத அச்மரீ ரோகத்தையுண்டாக்குகிறது. (4) வஜ்ராப்ர மானது அக்னியிற் காய்ச்சப்படுமானால் அதிலடங்கிய அழுக்குகள் நீங்கி எவ்வித விகாரமுமடையாமலிருக்கும். இது தேஹத்திற்கு இரஸாயநமாகவும் லோஹங்களைப் பஸ்மம் செய்வதற்கும் எல்லாப் பிணிகளைத் தீர்ப்பதற்கும் உபயோகமானது. மேலும் நிறத்திலும் நான்கு வகைப்பட்ட அப்ரகங்களுள் ச்வேதாப்ர மானது வெண்மையான முறைகளிலும் ரக்தாப்ரம் சிவப்பு நிறமுள்ள முறைகளிலும் பீதாப்ரகம் பசுமையான முறைகளிலும் சிறப்பாக உபயோகமாகின்றன. இந்த நான்கு நிறமுள்ள அப்ரகங்கள் யாவும் இரஸாயநமாக உபயோகமாவதாய் சாஸ்திரத்திற் கூறப்படினும் கிருஷ்ணாப்ரகம் என்னும் கருநிறமான அப்ரகமே அவ்விஷயத்தில் கோடி மடங்கு குணத்திற் சிறந்ததாம். 4 11.

---

1. 'இராஜஹஸ்தம்' என்பது நீண்ட $1\frac{1}{4}$ கை கொண்டது (ஸபாதகர:) என்று ஆயுர்வேதப்ரகாசத்திலும், 36 அங்குலங் கொண்ட அளவென்று பாரத ஸம்ஹிதையிலும் கூறப்படுகிறது.

2. மலங்கள் என்பதால் ஜலம், மலம், வியர்வை முதலிய கழிவுகள் குறிக்கப்படுகின்றன.

3. வெள்ளி ஸிந்தூராதி சிவப்பு ஔஷத தாதுக்கள், மஞ்சளான பொன்வேலை ஆகிய முறைகளில் பீதாப்ரகம் முதலியவை முறையே பிரயோகிக்கப் படுவதாகக் கருத்து. [சிவப்பும் பசுமையுமான இரண்டு அப்ரகங்களும் ஸ்வர்ணம் செய் முறையிலும், கறுப்பான அப்ரகம் பொன் செய்முறை வெள்ளி செய் முறையிலும் உபயோகப்படுகின்றன. கிட்டரூபமான அப்ரகத்தை எதற்கும் உபயோகிக்கக் கூடாது என்று இரஸார்ணவம் கூறுகிறது.]

அப்ரகத்தின் குண தோஷங்கள்.

(1) ஸ்நிக்த்தமாகவும்[1] அகன்ற தளங்களையுடையதாகவும் இயற்கையான சிறந்த நிறமுள்ளதாகவும் பாரமுள்ளதாகவும் எளிதிற் பிரிக்கக்கூடிய செதிள்களையுடையதுமான அப்ரகம் சிறந்ததாகும். (2) சந்த்ரிகைகளுள்ளதும்[2] கட்டங்கட்டியதுமான அப்ரகம் சிறந்ததல்ல; அவ்விதமான அப்ரகத்தை இரஸம் கிரஹிப்பதில்லை.[3] இரஸ ராஸத்திற்கேற்ற அப்ரகமே லோஹ முறைகளிலும் இரஸாயன முறையிலும் உபயோகிக்கக் கூடியதாம். சந்த்ரிகை யொழிந்ததும் மாரணம் செய்யப்பட்டதுமான[4] அப்ரகமே எல்லா வியாதிகளிலும் உபயோகிக்கத் தகுந்தது. சந்த்ரிகையோடு

சந்த்ரிகையென்னும் தோஷம்.

கூடிய அப்ரகம் உட்கொள்ளப்படுமானால் மேஹ ரோகத்தையும் அக்னிமாந்த்யத்தையும் உண்டு பண்ணும். பத்ராப்ரகம்[5] இரஸாயனமாகுமென்று கூறுபவர் காலகூடவிஷம் உயிரளிக்கவல்லதென்பார்கள். ஆகவே ஸத்துவமெடுப்பதற்கும் உட்கொள்ளும் ஔஷதத்திற்கும் சுத்தி செய்த அப்ரகத்தையே உபயோகிக்கவேண்டும்; அன்றேல் துர்க்குண முண்டுபண்ணி பல கோளாறுகளைக் காட்டுவது திண்ணம். 12 16.

அப்ரக சுத்தி முறைகள்.

(1) அப்ரகத்தை ஏழுமுறை நெருப்பில் காய்ச்சிக் காய்ச்சிக் காஞ்சிகமென்னும் காடியில் போட்டு எடுக்கவும்; இப்படிச்செய்ய அது சுத்தமாகும். (2) அவ்விதமே பசுமூத்திரத்திலாவது (3) த்ரிபலா கஷாயத்திலாவது, (4) முககியமாகப் பாலிலாவது ஏழு முறை தோய்த்து எடுத்தாலும் தோஷம் நீங்கியதாகும். 17 17½.

தான்யாப்ரகம்.

சுத்திசெய்து, பிறகு சூர்ணமாகச் செய்யப்பட்ட அப்ரகத்தை ஒரு வஸ்திரத்தில் சேர்த்து, அதைக் காடியில் வைத்துப் பிசைய அவ்வஸ்திரத்தின் கண்ணறைகளினூடே காடியில் வந்து வழவழப்பாகப் படியும்

---

1. ஸ்நிக்த்தம் — ணெய்ப்பசை அல்லது அது போன்ற தன்மை.

2. சந்த்ரிக — அப்ரகத்திற்கு இயல்பாயுள்ள கண்ணாடியைப் போன்று மினுமினுக்கும் தன்மை

3. கிரஹித்தல் — தன்னுள் ஐக்யப்படுத்திக் கொள்ளுதல். இது இரஸ ... என்று வழங்கப்படும்.

4. மாரணம் — பஸ்மமாகச் செய்தல். [உலோஹங்களுக்கு இயல்பான நிலைமையைப் பற்றறவே போக்கி, தேஹதாதுக்கள் அவற்றை ஏற்று ஜீர்ணம் செய்து கொள்ளக்கூடிய வகையில் பஸ்மமாகவோ ஸிந்தூரமாகவோ பக்குவம் செய்யப்பட்ட முறை மாரணம், ம்ருதி என்று வழங்கப்படும். இதையே அபுநர்ப்பவம் என்றும் வழங்குவர்.]

5. பத்ராப்ரகம் — சுத்தி செய்யப்படாமல் இதழிதழாயுள்ள அப்ரகம்.

நுண்ணிய அப்ரகத்துள் தான்யாப்ரகம் எனப் படுகிறது. 18½.[1]

அப்ரக பஸ்ம முறைகள்.

(1) அதை தான்யாப்ரகமாகச் செய்த பிறகு கையாந்தகரைச்சாற்றால் ஆட்டி சக்கிரங்களைப்போல வட்டமாகத் தட்டி யுலர்த்தி அரை கஜபுடத்தில் எரித்தெடுக்கவும். அவ்விதமே வெள்ளைச் சாறடைச்சாற்றால் அரைத்து அரைத்து ஆறு முறை புடமிடவும். பிறகு அவ்வப்ரகத்தை நாலிலொரு பங்கு வெண்காரம் கூட்டி சிறிது ஜலம் விட்டு அரைத்து, சக்கிரங்களைப்போல அடைதட்டி யுலர்த்தி அங்ஙனமே ஏழு முறை அரை கஜபுடமிட்டு எரிக்கவேண்டும். முற்கூறிய வகையில் ஆடாதோடை ச் சாற்றால் ஆட்டி ஏழு முறையும் முள்ளுக்கீரைச் சாற்றால் ஆட்டி ஏழு முறையும் புடம் போடவேண்டும். இவ்விதமாகப் பக்குவம் செய்யப்பட்டுள்ள அப்ரகம் ஸகல முறைகளிலும் உபயோகிக்கத் தகுந்ததாம். (2) தான்யாப்ரகத்தைத் தகரயிலைச் சாற்றால் ஆட்டியாட்டி பத்துமுறை புடம்போட நிச்சயமாய் பஸ்மமாகும். (3) அதேவிதமாய் கோரைக் கிழங்கு ரஸத்தாலாவது (4) முள்ளுக்கீரைச் சாற்றாலாவது அப்ரகத்தைப் புடமிடலாம். 19 24½.

அப்ர ஸிந்தூர முறைகள்.

மஞ்சள் நெல்லிக்கனி முருங்கைப்பட்டை இவற்றின் இரஸங்களால் தனித்தனியே அப்ரகத்தை ஆட்டி அடைதட்டியுலர்த்தி புடமிடவும். இவ்விதம் அறுபது புடங்களில் எரிக்க அப்ரகம் ஸிந்தூரமாகும். அந்தந்த ரோகங்களுக்கு ஏற்ற அநுபானத்துடன் உபயோகிக்க அது க்ஷயம் முதலிய அநேக ரோகங்களைப் போக்கவல்லது. (2) ஆலம் வேரின் பட்டையைக் கஷாயமிட்டு அதனாலாவது (3) வெற்றிலையின் சாற்றாலாவது (4) ஆடாதோடை கையாந்தகரை இவற்றின் சாற்றாலாவது (5) கரிசிலாங்கண்ணி பாகலிலை இவற்றின் ஸ்வரஸத்தினாலாவது (6) ஆலம்பாலாலாவது அப்ரகத்தை அரைத்து இருபது முறை புடமிடலாம். அது மிகச் சிவப்பான ஸிந்தூரமாகும். 25 28.

அப்ரக ஸத்துவ பாதநமுறைகள்.

(1) அப்ரகத்தை அதற்கு நாலிலொரு பங்கு வெங்காரம் சேர்த்து நிலப்பனங்கிழங்குச் சாற்றால் ஆட்டியெடுத்து கோஷ்டியென்னும் கும்மட்டியில் வைத்து பலமாக ஊதினால் அது ஸத்துவரூப

1. தான்யாப்ரகத்தைப்பற்றிய மூலச்லோகம் ஸம்ஸ்க்ருத நூலில் பலவித அப்ரகபஸ்மமுறைகளுக் கிடையே 23-வது ச்லோகமாக் கூறப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்பில் ஒழுங்காக அமையும் பொருட்டு இது 18½ என்று மாற்றப்பட்டிருக்கிறது.

மாக[1] ஆய்விடும். (2) தகரவிதை கோரைக்கிழங்கு கொத்தமல்லி ஆடாதோடை சாறணை கரிசிலாங்கண்ணி பாகல் செருப்படை இவற்றின் சாற்றால் தனித்தனியே அரைத்து, வெயிலில் உலர்த்தியெடுக்கவும்; அவ்விதம் அரைக்கும்போது கோதுமையின் சூர்ணம் சிறுமீன் வெண்காரம் இவற்றை அப்ரகத்துக்கு எட்டில் ஒரு பாகம் வீதம் சேர்த்துக் கூட்டவும். அப்பால் பஞ்சாஜம் பஞ்ச கவ்யம், பஞ்ச மாஹிஷம்[2] இம்மூன்று வர்க்கங்களில் எதையேனும் ஒன்றைக் கூட்டி அரைத்து பெரிய கோலிகளாக உருட்டி அதம்பாதக கோஷ்டத்தில்[3] அவற்றைப் போட்டு தீயிட்டு ஊதி ஸத்துவத்தை இறக்கவேண்டும்; பிறகு கோஷ்டியென்கிற அந்த வாலையைத் திறந்து அதிற் படிந்துள்ள கிட்டங்களைப் பொடித்து அவற்றிலடங்கிய ரவைகளைப் போன்றுள்ள ஸத்துவத்தைப் பிரித்தெடுக்கவும். மிகுந்துள்ள கிட்டத்தைச் சிறிது வெண்காரம் கூட்டிப் பசு மூத்திரத்திஞல் ஆட்டி, கோலிகள் செய்து உலர்த்தி மீண்டும் முன்போலவே தீயிட்டு எரித்து ஸத்துவமெடுக்கவும். அப்பால் ரவை போன்ற அந்த ஸத்துவங்களைக் காடியில் சேர்த்துக் காய்ச்சி சோதநீய கணச்சரக்குகளைக் கூட்டி மூஷையில் அடைத்து அக்னியில் வைத்தூதி நன்றாக உருகியபிறகு எடுக்கவும்; இவ்விதம் இரண்டு முறை உருக்க ஸத்துவம் வெகு சுத்தமாயிருக்கும். அந்த ஸத்துவத்தை இரஸௌஷத முறைகளிலும் இரஸாயந முறைகளிலும் உபயோகிக்கலாம். 29 38.

அப்ரகத்தை நயப்படுத்தல்.

அப்ரகஸத்துவத்தை உருக்கி தேன் தைலம் நெய் இவற்றில் பத்து முறை ஊற்றவும்; இவ்விதம் பத்து முறை செய்தால் கடினமான உலோஹாதிகளைப்போலவே அப்ரகஸத்துவம் மிருதுத்தன்மையடையும். 59.

(1) மிருதுவாகச் செய்த ஸத்வாப்ரகத்தை நுண்மையாகப் பொடித்து ஒரு கொப்பரையில் நெய் ஊற்றி அதில் சேர்த்து அடுப்பிலேற்றி சிவக்க வறுக்கவும்; அல்லது அதில் துரும்பைப்

1. ஸத்துவம் ஒவ்வொரு உலோஹம் அல்லது தாதுவும் மனிததேஹத்தில் ஊறி வியாதிகளைப் போக்கவோ, சரீரத்தைப் பலப்படுத்தவோ உபயோகமாகும்; அப்படிப்பட்ட லோஹ தாதுக்களுடைய ஸூக்ஷ்மமான ஸாராம்சம் ஸத்துவம் எனப்படுகிறது.

2. பஞ்ஜம் வெள்ளாட்டைச்சேர்ந்த ஐந்து அம்சங்கள். பஞ்ச கவ்ய பசுவைச் சேர்ந்த ஐந்து வஸ்துக்கள். பஞ்ச மாஹிஷம் எருமையின் ஐந்து வஸ்துக்கள்; அவையாவன: வெள்ளாடு, பசு எருமை இவற்றின் பால், தயிர், நெய், சிறுநீர் சாணம் ஆகியவையாம்.

3 கோஷ்டம் குடம் அல்லது வாலை. கோஷ்டீ என்றும் கூறப்படும்.

போட அது எரியுமளவுமாவது வறுத்து அதைச் சூர்ணம்செய்து கொள்ளவும். இவ்விதமே ஏழு தடவை பக்குவம் செய்யவும். அப்பால் ஸமபாகம் கந்தகம் சேர்த்து ஆலம்வேரின் கஷாயத்தினால் ஆட்டி வராஹபுடமிடவும். இவ்விதமாக இருபது முறை புடமிட வேண்டும். அதன் பிறகு த்ரிபலா கஷாயத்தினால் ஆட்டி இருபது தடவை புடமிடவேண்டும். பிறகு த்ரிபலா கஷாயம் கொட்டைக்கரந்தைச் சாறு கையாந்தகரைச் சாறு கடுக்காய் கஷாயம் தான்றிக்காய் கஷாயம் குறுவேர் கஷாயம் இவற்றில் தனித் தனியே பாவனை செய்து எடுக்கவும். அளவறிந்து எல்லா ரோகங்களிலும் இதை யுபயோகிக்கலாம். இது ஸத்வாப்ரகத்தினும் சிரேஷ்டமானது. தோஷம் நீங்கி குணத்தில் மேன்மை யுற்றது. இதே விதமாக நூறு தடவை புடமிட்டு பக்குவம் செய்தால் ஸர்வோத்க்ருஷ்டமான குணமுள்ளதாகும். பாசந-தீபனத் தன்மைகளிலும் சிறந்ததாகும்.

ஸத்வாப்ரக ரஸாயந முறைகள்.

(2) அப்ரகத்தை வெல்லம் கரைத்த ஆமணக்கிலைச் சாற்றில் பாவனை செய்து மேலும் கீழும் ஆலிலைகளால் மூடி புடமிடவும். இவ்விதம் மூன்று புடங்க ளிட்டால் அப்ரகத்தினுள்ள சந்த்ரிகைகள் நீங்கிப்போம். இதை அரை குஞ்ஜாபிரமாண முபயோகித்தால் நன்கு பசியுத்தீபநமாகும். அந்தந்த ரோகத்திற்குத் தகுந்த அநுபானங்களோடு உபயோகிக்க எல்லா வியாதிகளையும் தீர்க்க வல்லது.

சந்த்ரிகையைப் போக்குதல்.

(3) அப்ரக ஸத்துவத்தின் கோலியை உருக்கி மயில்துத்தம் கரைத்த காடியில் ஊற்றி யெடுத்து அந்த க்ஷணத்திலேயே சம்மட்டியால் அடிக்கவும். அடித்துப் பெரும்படியான அதன் பொடிகளை மீண்டும் காய்ச்சி காடியில் சேர்த்து எடுத்து முன்போலவே சம்மட்டி ளால் அடித்துப் பொடியாக்கவும் அச்சூர்ணத்தை முன் போலவே பசுவின் நெய்யில் சேர்த்து வறுத்து நெல்லிக் ரிச் சாற்றையாவது நெல்லியிலைச் சாற் றயாவது கூட்டி கல்வத்தில் நன்றாக அரைக்க வேண்டும். இவ்வாறு மூன்று முறை செய்ய வேண்டும். பிறகு சாறடை ஆடாதோடை இவற்றின் சாற்றோடு காடியையும் கூட்டி அதனால் உடனே அரைக்கவும். இவ்விதம் அரைத்தரைத்து பத்து புடங்களிடவும். பிறகு கந்தகம் கூட்டி அரைத்து பத்து புட கள் போடவும். இவ்விதம் சுத்தமாய் பக்குவம் செய்யப்பட்ட அப்ர ம் குணத்தில் மிகச் சிறந்தது. இதை ஜாரணமுறைகளிலும் இரஸாயனமுறைகளிலும் இஷ்டப்படி யுபயோகி க லாம். 40 52.

அப்ரகத் தத் திரவமாகச் செய்யலாமென்று சில நூல்களில் கூறப்பட்டிருப்பினும் அவ்வாறு செய்வது சிவனருளன்றி ஸித்

அப்ரகத்ருதி அஸாத்யம். திப்பதில்லை யாகையால் அம்முறை அஸாத்ய மென்று நிச்சயித்து இங்கு கூறப்படவில்லை. 53.

முற்கூறியவாறு பக்குவம் செய்த திவ்யாப்ரகத்தை இரண்டு குஞ்ஜா பிரமாணத்தில் வாய்விடங்கம் த்ரிகடுகு இவற்றுடன் கலந்து நெய் கூட்டி யுட்கொள்ளலாம். இதனால் க்ஷயம் பாண்டு கிரஹணி வயிற்றுவலி ஆமதோஷம் மற்றுமுள்ள குடலைப்பற்றிய பிணிகள் ஊர்த்வ ச்வாஸம் பிரமேஹம் அரோசகம் பலமான காஸம் அக்னிமாந்த்யம், ஜலோதரம் ஆகிய வியாதிகள் தீரும். மேலும் அந்தந்த அநுபான முறைகளோடு சேர்த்து உபயோகிக்க மற்றும் ஸகலமான நோய்களும் நிவாரணமாம். 54.

திவ்யாப்ரக குணங்கள்.

## வைக்ராந்தம். [1]

எட்டு மூலைகளையும் எட்டு பட்டைகளையும் ஆறு கோணங்களையும் உடையதாய் மழமழப்பாகவும் கனமாகவும் சுத்தமான வர்ணமுள்ளதாய் அல்லது பலவேறு நிறங்களின் கலப்புள்ளதாகவும் இருப்பது வைக்ராந்தம் என்று கூறப்படுகிறது. இதில் வெளுப்பு சிவப்பு பசுமை நீலம் மாடப்புறா நிறம் மேகவர்ணம் கறுப்பு சித்திரவர்ணம் ஆக நிறத்தில் எட்டுவித பேதங்களுண்டு. 55 56.

வைக்ராந்த லக்ஷணம்.

வைக்ராந்தமானது ஆயுளை விருத்தி செய்யும். தேஹத்திற்கு பலத்தையும் நிறத்தையும் கொடுக்கும். விருஷ்ய குணத்திற் சிறந்தது. அறிவைக் கொடுக்கும். ஸந்நிபாத ஸம்பந்தமான வியாதிகளை ஹரிக்கும். அக்னியை உத்தீபனம் செய்யும். உலோஹங்களின் பக்குவ முறைகளிலும் உபயோகமானது. வஜ்ரம் என்கிற இரத்தினத்திற்குச் சமானமான மற்ற குணங்களும் இதற்குண்டு. வெகு கடினமானது. மேலும் வைக்ராந்தம் இரஸாயனச் சரக்குகளுள் முதலில் எண்ணக் கூடிய சிறந்த வீர்யமுள்ளது. கோளாறடைந்த ஸர்வ தோஷங்களையும் போக்கும். வஜ்ரத்திற்குப் பதிலாகவும் உபயோகிக்கத் தகுந்தது. 57 58.

வைக்ராந்தத்தின் பொது குணங்கள்.

---

1. வைக்ராந்தம் என்பது படிகக் கல்லைப் போன்றதோர் தாதுப் பொருள், ஸாதாரணமாய் வெண்மையாகவும், வெகு கடினமாகவும் பட்டைகளுள்ளதாகவும், பளுவாகவும் இருக்கும். "விக்ருதா வஜ்ர கண்டயே வைக்ராந்தாக்யாம் பஜந்தி தே. ஜாதயச் சோதநம் ஹிம்ஸா குணைஸ் தேஷாந்து வஜ்ரவத்" விகாரமடைந்த வஜ்ரத் துண்டுகளே வைக்ராந்தமாகின்றன; அதன் பேதங்களும் சுத்தி முறையும், பஸ்ம முறையும் குணங்களும் வஜ்ரகத்திற்கு இருப்பது போலவேயாம் என்று கூறப்படுவதுண்டு.

வைக்ராந்தத்தின் தைவீக வரலாறு.

முன்னால் துர்க்கா தேவியானவள் தேவர்களைத் துன்புறுத்திய மஹிஷாஸுரனைச் சூலத்தினால் ஸம்ஹரித்தாள். அவனுடைய இரத்தம் பூமியில் விழுந்து எவ்வெவ்விடத்தில் தங்கிற்றோ அவ்வவ்விடத்தில் வஜ்ரத்திற்கொப்பான வைக்ராந்தம் என்னும் மஹாரஸம் உண்டாயிற்று. இது விந்தியபர்வதத்திற்குத் தெற்கேயும் வடக்கேயும் விசேஷமாயுண்டு. 59 60½.

வைக்ராந்தத்தைப்பற்றி வேறு சிலரது கொள்கை.

(1) உலோகங்களை அறுக்கக்கூடிய வகையில் வெகு கடினமாயிருப்பதாலே இது வைக்ராந்தம் என்று கருதப்படுகிறது. (2) இதில் வெளுப்பு, மஞ்சள் நிறம் சிவப்பு கறுப்பு மேகவர்ணம், மயிலின் கழுத்து போன்ற நிறம் மரகதப்பச்சை நிறம் ஆக ஏழு வகையுண்டு. (3) அவற்றுள் கறுப்பு வைக்ராந்தம் தேஹஸித்தி யுண்டுபண்ணும். மஞ்சள்நிறமுள்ளது பொன் வேலைக்கும் வெண்மையானது வெள்ளிவேலைக்கும்உபயோகமானது. சிவப்பும் பச்சையுமான இரண்டு வைக்ராந்தங்களும் எல்லா முறைகளிலும் வெகு உபயோகமானவை. மற்ற இரண்டு வைக்ராந்தங்களும் உபயோகமற்றவையாகையால் விலக்கத்தகுந்தவையாம். இவ்வாறு வைக்ராந்தம் ஏழுவிதமென்று சிலரது கருத்து. 61 64.

வைக்ராந்தத்தை கிரஹிக்கும் விதி.

எங்கே வைக்ராந்தம் இருக்கின்றதோ அவ்விடத்தில் பைரவனையும், விநாயகரையும் முறைப்படி பூஜித்துவிட்டு நிர்மலமான மனத்துடன் அதை கிரஹிக்க வேண்டும். அப்பொழுதுதான் அது குணத்தில் வஜ்ரத்திற்குச் சமானமாகவும் தேஹபலத்தை விருத்தி செய்வதாகவும், உலோஹங்களைப் பக்குவம் செய்வதற்கு ஏற்றதாகவும் விஷஹரம் முதலிய குணங்களையுடையதாகவும் இருக்கும். அது ஜ்வரம் குஷ்டம் க்ஷயம் இவைகளைப் போக்கும் மஹா ரஸமாகவும் கருதப்படும். 65 66.

வைக்ராந்த சுத்தி.

வைக்ராந்தச் சில்லகளோடு க்ஷாரங்களையும் இலவணங்களையும் கூட்டி காடிகளுடையவாவது மூத்திரங்களுடையவாவது கொள்ளுக் கஷாயத்தினுடையவாவது வாழைச் சாற்றினுடையவாவது ஆவிநீரில் மூன்று நாள் பக்குவம் செய்ய சுத்தமாகும். வரகு தானியக் கஷாயத்தில் பக்குவம் செய்தாலும் சுத்தமாகும். கொள்ளுக்கஷாய ஆவியில் மாத்திரம பக்குவம் செய்தாலும் சுத்தமாகும். 67 67½

வைக்ராந்த பஸ்ம முறைகள்.

(1) கந்தகத்தை வைக்ராந்தத்தோடு கூட்டி எலுமிச்சம்பழ ரஸத்தினால் ஆட்டி புடம்போடவும். இவ்விதம எட்டுத்தடவை புடம்போட வைக்ராந்தம பஸ்மமாகும. (2) அல்லது வைக்ராந்தத்தைக் காய்ச்சிக் காய்ச்சி அநேகமுறை குதிரையின் மூத்திரத்தில் போட்டு எடுத்து பிறகு புடம்போட்டாலும் பஸ்மமாம். இவ்

வாறு பஸ்மமாக்கிய வைக்ராந்தத்தை வஜ்ரத்திற்குப் பதிலாய் உபயோகிக்கலாம். 68 69½.

வைக்ராந்த ஸத்துவம்.

(1) நீரடிமுத்து அழிஞ்சில் பலாசு இவற்றின் பட்டைகளின் க்ஷாரங்களைப் பசுவின் மூத்திரத்திற் கலந்து அந்த நீரில் வைக்ராந்தத்தின் பொடியை பாவனை செய்யவும்; அவ்வைக்ராந்தத்தைக் காட்டுக்கருணைக்கிழங்கு மஞ்சள் இவற்றின் கல்கத்தோடும் த்ரிபலா சூர்ணத்தோடும் கலக்கவும்; அத்தோடு வெண்காரம் கொம்பரக்குப்பொடி நவாசாரம் இவற்றையும் கூட்டி ஆடுதீண்டாப்பாளையின் ஸ்வாஸம் சேர்த்து பிண்டமாகச்செய்து மூசையில் அடைத்து காடாக்னியிட்டு ஊதினால் வைக்ராந்தத்தின் ஸத்துவம் அம்மூசையிலே விழும். (2) ஸத்துவபாதன்முறைப்படி வைக்ராந்தத்தை நன்றாக அரைத்து கோளமாகச்செய்து மூசையிலிட்டு அதை ஒரு பாண்டத்தில் வைத்து அவ்விதமே காடாக்னியில் ஊதினாலும் ஸத்துவம் வெளிவரும். 70 73.

வைக்ராந்த ரஸாயன முறையும் குணங்களும்.

(1) வைக்ராந்தம பஸ்மமான பிறகு அதில் ஒரு குஞ்ஜா பிரமாணம் எடுத்து அதற்குக் கால்பங்கு ஸ்வர்ண பஸ்மத்தைக் கூட்டி சிறிது திப்பிலி வாய்விடங்கம் நெய் இவற்றையும் ஒருமிக்கச் சேர்த்து உட்கொள்ளலாம். இது க்ஷயம் உதரரோகம் பாண்டு அர்சஸ் ச்வாஸம காஸம் கடுமையான கிரஹணீ உரக்ஷதம் முதலிய ரோகங்களைத் தீர்க்க வல்லது; தேஹத்திற்குப் புஷ்டியையும் தரும். (2) கருநிறமான வைக்ராந்தத்தின் பஸ்மம் ஒரு பங்கு இரஸ பஸ்மம் அரைப் பங்கு அப்ரக ஸத்துவம் அவ்விரண்டுக்கும் ஸம அளவு; ஆக இவ்வனைத்தையும் கூட்டி அரைத்து வைத்துக் கொள்ளவும். இக்கூட்டுமருந்தில் ஒரு குஞ்ஜாபிரமாணம் எடுத்து நெய் அல்லது தேன் கூட்டி விடியற்காலையில் உட்கொண்டு வர இதர ஔஷதங்களால் நிவர்த்திக்கக் கூடாத ரோகங்களனைத்தையும் கொடிய பாவங்களை கங்காஜலம்போல மூன்று வாரத்தில் தீர்க்கும். 74 76.

## மாக்ஷிகம். [1]

மாக்ஷிகத்தின் உற்பத்தி.

மாக்ஷிகமென்கிற பொன்னுருவமான இந்த ரஸம் ஸ்வர்ணமுண்டாகும் மலையில் விஷ்ணுவினால் உண்டாக்கப் பட்டது. தாபி அல்லது தபதீ என்னும் தேசத்திலும் நதியிலும கிராத தேசங்களிலும் சீன தேசத்திலும் யவநதேசத்திலுங்கூட உண்டாகிறது. ஸாதாரணமாய் மாக்ஷிக தாதுவானது வைகாசி மாஸத்தில் கடும் வெயிலால் உருகப்பட்டு வெளியாவதைக் காணலாம். 77 77½.

1. மாக்ஷிகம் நிமிளையென்று தமிழில் வழங்கப் படுகிறது.

(1) ஹேம மாக்ஷிகம [1] தாரமாக்ஷிகம் [2] என்று மாக்ஷிகம் இருகைப்படும். அவற்றுள் முதலாவதான காங்யகுப்ஜ தேசத்தில் உண்டாகும் ஹேம மாக்ஷிகமானது ஸ்வர்ணம்போல் காணப்படும் தபதீ நதியின் கரையில் உண்டாவது பஞ்சவர்ணங் கலந்து பொன் போன்றதா யிருக்கும். இரண்டாவதான தார மாக்ஷிகமானது விசேஷமாகப் பாஷாணம் கலந்ததாய் குணத்திற் குறைவானதா யிருக்கும். பொன் நிறமான மாக்ஷிகம் சுவையில் இனிப்பானது ' வெள்ளியைப் போன்ற மாக்ஷிகம் சுவையில் அம்லமாகவும் சிறிது துவர்ப்பும் இனிப்புமு கலந்ததாகவும் இருக்கும் ' இது சீதவீர்யமும் இளகுகுணமும் கடுபாகமும் உள்ளது. (2) மாக்ஷிகமென்னும் இந்த தாதுப்பொருள் ஸகல வியாதிகளையும் பரிஹரிக்கவல்லது ' வ்ருஷ்யகுணத்திற் சிறந்தது ' இரஸாயநமான ஔஷதங்களுக்குள் மிகவும் சிரேஷ்டமானது ' இரஸேந்திரத்திற்குப் பிராணன் போன்றது ' [4] ஒன்றொடொன்று சேர ' கூடாத இரண்டு உலோஹ ' களைச் சேர்க்கவல்லது. இது மிகவும் சிலாக்யமான ஔஷதச் சரக்கு. 78 82.

மாக்ஷிகத்தின் பேதமும், குணங்களும்.

(1) ஆமணக் கெண்ணெயிலாவது (2) கொடிமாதுளைச் சாற்றிலாவது மாக்ஷிகத்தைப் போட்டுக் காய்ச்சினுல் அது சுத்தமாகும். (3) வாழையின் கிழங்கினுடைய சாற்றில் போட்டு இரண்டு நாழிகைக் காய்ச்சியெடுத்தாலும் சுத்தியடைகிறது. (4) மாக்ஷிகத்தைக் காய்ச்சி த்ரிபலாகஷாயத்தில் தோய்த்தெடுத்தாலும் சுத்தமாகும். 83 83½.

மாக்ஷி சுத்தி.

(1) மாக்ஷிகத்தை கந்தகத்தோடு சேர்த்து கொடிமாதளைச் சாற்றுல் ஆட்டி மூஷையினுள் அடைத்து ஐந்து வராஹபுடங்களிட்டு [5] எரிக்க அது பஸ்மமாகும். (2) ஆமணக் கெண்ணெயிலும் பசுவின் நெய்யிலும் சேர்த்துக் காய்ச்சினுலும் (3) கொடிமாதுளஞ் சாற்றுல் ஆட்டி காடாக்னியிட்டு பக்குவம் செய்தாலும் அப்பஸ்மம் ஸிந்தூரம் போல் ஆய்விடும். இவ்வாறு பக்குவம் செய்த மாக்ஷிக பஸ்மத்தை இரஸௌஷத முறையிலும் இரஸாயன விதியிலும் உபயோகிக்கலாம். 84 86.

மாக்ஷி பஸ்மம்.

. ஹேம மாக்ஷிகம் ஸ்வர்ண மாக்ஷிகம் பொன் நிமிளை.

2. தார மாக்ஷிகம் ச்வேத மாக்ஷிகம், வெண்ணிமிளை.

3. "பங்கே ஸுவர்ண ஸங்காசோ மநாக் க்ருஷ்ணோ பஹிச்சவி:
ப்ருஹத்வர்ண இதி க்யாதோ மாக்ஷிக: ச்ரேஷ்ட உச்யதே"
உடைத்துப் பார்க்க உட்புறம் பொன்போ ' றதாகவும் வெளிப் புறம் ஒரு சிறிது கறுநிறமாகவு முள்ள சரக்கு ப்ருஹத் ° க்ஷி ° (ஸ்வா மாக்ஷிகம்) எனப்படும்; இது ஔஷத முறைக்குச் சிறந்தது. இரஸரத்நாகரம்.

4. இரஸத்தைக் கொண்டு செய்யப்படும் ஔஷதங் ளில் இது அதி உபயோகமானது எ ' று கருத்து.

. ராஹபுடம் பத்தாவது அத்தியாயத்தில் வி ரம் காண்க.

மாக்ஷிக ஸத்துவம்.

(1) மாக்ஷிகத்தோடு அதற்கு முப்பதில் ஒரு பங்கு நாகம் சேர்த்து [1] க்ஷாரங்களும் அம்லங்களும் கூட்டி அரைத்து மஹா மூஷையில்[2] அடைத்து அக்னியில் ஊத ஸத்துவம் வெளியாகும் பிறகு அச்சத்துவத்தை உருக்கி, கருநொச்சிலைச் சாற்றில் ஊற்றவும். இவ்விதமாக ஏழுமுறை உருக்கி அச்சாற்றில் ஊற்ற, மாக்ஷிகஸத்துவத்துடன் கலந்திருந்த நாகம் விலகிப் போகும். (2) தேன் ஆமணக்கெண்ணெய் நெய் இவற்றால் மாக்ஷிகத்தை ஆட்டி பிறகு பசுமூத்திரத்திலும் வாழைக்கிழங்கின் சாற்றிலும் பலமுறை பாவனை செய்து மூசையில் அடைத்து அக்னியிட்டு ஊதினால் நிறத்தில் தாம்ரம் போன்றதாய் மிருதுவான ஸத்துவம் வெளியாகும். அதை உருக்கி ஆற்றியெடுத்தால் குன்றுமணிக்குச் சமானமான நிறமுள்ளதாயிருக்கும் இவ்விதம் பக்குவமான மாக்ஷிகஸத்துவம் மிகவும் சுத்தமானதும் தேஹத்திற்கு அதிக வன்மைதரக் கூடியது [3]. 87 91.

மாக்ஷி ஸத்துவ ரஸாயந முறையும் குணமும்.

மாக்ஷிக ஸத்துவத்தை உருக்கி இரஸேந்திரத்துடன் சேர்த்து அவ்விரண்டும் ஒருமிக்கக் கலந்ததும் கந்தகமும் அப்ரக ஸத்துவத்ருதியும்[4] கூட்டி கல்வத்திலிட்டு அரைக்கவும். அதை ஒரு கோளமாகச் செய்து இலவண யந்திரத்தில்[5] மிருதுவாக அக்னியிட்டு அரை நாள் எரிக்கவும். பிறகு அது தானாகவே ஆறியபின்பு எடுத்து நன்றாகச் சூர்ணம் செய்து வைத்துக் கொள்ளவும். இதில் இரண்டு குஞ்ஜா பிரமாணம் எடுத்து த்ரிகடு,[6] வாய்விடங்கம் இவற்றின் சூர்ணத்தோடு கூட்டி தேனிற் கலந்து உட்கொள்ளலாம். இதனால் அகாலத்தில் தேஹம் சிதைந்துண்டாகும் மிருத்யுவும் கிழத்தனத்தினாலான பலக்குறைவும் தீரும். ஏழு நாட்கள் உபயோகித்தால் கஷ்டஸாத்யமான வியாதிகளும் குணமடையும். அமுதங் கூட இதற்கிணையாகாது. 92 94.

---

1. நாகம் ஸீஸம், கருவங்கம் அல்லது காரீயம்.

2. மஹாமூஷை பத்தாவது அத்தியாயத்தில் மூஷைகளின் விவரங்களைப் பார்க்க.

3. கோமூத்ரைச் சஸ்நுஹீக்ஷீரைர்பாவ்ய மேரண்டதைல: மாக்ஷிகம் திநமேகந்து மர்திதம் வடகீக்ருதம்; அப்ரவத் தமயேத் ஸத்வம் மாக்ஷிகத்தைப் பசுவின் மூத்திரத்திலும் கள்ளிப்பாலிலும் பாவனை செய்து ஆமணக்கெண்ணெயினால் ஒரு நாள் அரைத்து வடகம்போல் செய்து அக்னியிலிட்டு ஊத அப்ரகத்தைப்போல் ஸத்துவம் வேளிப்படும். இரஸார்ணவம்.

4. அப்ரக ஸத்துவத்ருதி திரவமாக்கிய அப்ரகஸத்துவம்.

5. இலவணயந்திரம் ஒன்பதாவது அத்தியாயம் பார்க்க.

6. த்ரிகடு சுக்கு, திப்பிலி மிளகு இவற்றின் கூட்டு. இக்கூட்டுக்கு த்ரியூஷணம் என்றும் பெயர்.

குண்றுமணி வெங்காரம் இவற்றை ஆமணக்கெண்ணெயும் தேனும் சேர்த்து அரைத்துக் குழம்பாகச் செய்யவும். இதில் மாக்ஷிகஸத்துவத்தை உருக்கிச்சேர்க்க அதிக திரவமாய்விடும். 95.

மாக்ஷிக த்ருதி.

விமலம [1]

விமலம் மூன்று விதம் : அவற்றுள் ஒன்று ஹேமவிமலம் ; மற்றொன்று தாரவிமலம் ; மூன்றுவது காம்ஸ்ய விமலமாம். அந்தந்த லோஹத்திற்குள்ள காந்தியைக் கொண்டு ஒவ்வொரு விமலதாதுவுக்குமுள்ள பேதங்களை அறிய வேண்டும். [2] இது உருண்டை வடிவத்துடன் பட்டை தீர்க்கப்பட்டது போலவும், சில கோணங்களோடு கூடியதாகவும் ஸ்நிக்த்தமாகவும் இருக்கும். விமலமானது பொதுவில் வாதஹரம், பித்தஹரம் வ்ருஷ்யம் என்னும் குணங்களுள்ளது ; இரஸாயந குணம் இதற்கு விசேஷம். இவற்றுள் முதலாவது ஸ்வர்ணவேலைகளுக்கும் இரண்டாவது வெள்ளிவேலைகளுக்கும் மூன்றுவது ஔஷத முறைகளுக்கும் உபயோகமானது. காம்ஸ்ய விமலத்திலும் தார விமலமும், அதைவிட ஹேமவிமலமும் குணத்தில் முறையே சிறந்தவை. 96 98.

விமல பேதங்ள்.

விமலத்தி உருவமும் குணமும்.

(1) ஆடாதோடையின் சாற்றில் விமலத்தைப் போட்டு பக்குவம் செய்தெடுக்க அது சுத்தமாகும். (2) அல்லது எலுமிச்சம்பழச் சாற்றிலாவது (3) ஆடுதீண்டாப் பாளையின் ஸ்வரஸத்திலாவது பக்குவம் செய்தாலும் மற்ற தாதுப் பொருட்களையும் போலவே விமலமும் சுத்தமாகிறது. விமலத்தோடு கந்தகமும் மனச்சிலையும் சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றுல் ஆட்டி புடமிடவும் இவ்வாறு பத்துமுறை புடமபோட்டால் விமலதாது பஸ்மமாகும். 99 100.

விமல சுத்தி.

விமல பஸ்மம்.

வெ ங்காரத்தையும் விமல பஸ்மத்தையும் ஆடுதீண்டாப்பாளையின் சாற்றுலும் எலுமிச்சம்பழச் சாற்றுலும் அரைத்து மஹாமூஷையி உட்புறத்தில் அதைத் தடவி உலர்த்தியெடுத்து ஆறுபடி கட்டைக் கரியினுள் அம்மூஷையை அடக்கம் செய்து அக்னியிட்டு ஊதிஞல் ஈயம்போன்றதாய் விமல ஸத்துவம் வெளியாகும். இத்துடன் இரஸ பஸ்மமும் கலந்துபிரயோகிக்கஇது இரஸாயநமாக உபயோகமாகும்.

விமல ஸத்துவம்.

1. விமலம் எ பதும் வக்ராந்தம் போன்றதோர் தாதுப் பொருள். விமலமும் வக்ராந்தமும் ஒருவித கந்தக ஸம்பந்த மான (Pyrit ) தாதுப்பொருட்கள் எ று கருதப்படுகிறது.

2. பொ போன்று தளதளப்பாயுள்ளது ஹேமவிமலம் ; வெள்ளியைப்போல வெ மையாயிருப்பது தாரவிமலம் ; வெ கலம் போ ற நிறமுள்ளது காம்ஸ்ய விமலம். (ஹேமம் பொன் · தாரம் வெள்ளி · காம்ஸ்யம் வெ கலம்.)

(2) விமலத்தோடு படிக்காரம் அன்னபேதி வெங்காரம் காட்டுக் கருணைக் கிழங்கு இவற்றைக் கூட்டி மூருங்கைப்பட்டையின் சாற்ருல் ஆட்டி யுலர்த்தி அதை வாழையின் சாற்றில் பாவனை செய்யவும். பிறகு நீரடிமுத்து மரப்பட்டையின் க்ஷாரத்தை அத்துடன் கலந்து மூஷையிலடைத்து அதை நெருப்பிலிட்டு ஊதிஞல் சந்திரன் அல்லது ஸூர்யன்போல் பிரகாசமுள்ள ஸத்துவம் உண்டாகும். 101 104

விமல ரஸாயநம்.

விமல ஸத்துவத்தோடு ஸம அளவு இரஸம் கலந்து நன்ருகக் கல்வத்திலாட்டி மெழுகுபோலச் செய்யவும்' கந்தகத்தை உருக வைத்து அதில் அம்மெழுகைச் சேர்த்து மூன்று பங்கு சுத்ததாளகத்தையும் கூட்டிக்கொள்ளவும். பிறகு ஐந்து மடங்கு மனச்சிலையையும் பத்திலொரு பங்கு இரஜதபஸ்மத்தையும் சேர்த்து அனைத்தையும் ஒருமிக்கக் கல்வத்தில் அரைத்து வஸ்திரகாளநம் செய்து காசிக்குப்பியில் போட்டு நிரப்பி வாலுகாயந்திரத்தில் பக்குவம் செய்தெடுக்கவும். இதை வாய்விடங்கம் த்ரிகடு த்ரிபலை இவற்ருேடு கலந்து நெய்கூட்டி யுட்கொள்ளலாம். இது பகந்தரம் இருதயரோகம் ஜ்வரம் சோதை ான்னும் நீர்க்கோவை பாண்டு ரோகம் பிரமேஹம் அரோசகம் அர்சோரோகம் கிரஹணீ கடுமையான சூலநோய் க்ஷயரோகம் காமாலை இவற்றையும் பித்த வாதங்களா லுண்டாகும் ஸகல ரோகங்களையும் தீர்க்கும்' மேலும் வெவ்வேறு அநுபான முறைகளோடு உட்கொள்ளப்படுமாஞல் ஸமஸ்த ரோகங்களும் தீரும். 105 108.

## சிலாஜது [1].

சிலா து பேதங் ள்.

சிலாதாது இருவகைப்படும்' அவற்றுள் ஒன்று **கோமூத்ர சிலாஜது**' இது இரஸாயநகுணமுள்ளது. மற்ருென்று **கர்ப்பூரசிலாஜது**. இவ்விரண்டில் கோமூத்ர சிலாஜது ஸத்துவமுள்ளது [2] ஸத்துவமில்லாதது என்று மீண்டும் இருவகைப்படும்' இவற்றுள் ஸத்துவமுள்ள சிலாஜது குணத்தில் மேலானது. கிரீஷ்மருதுவில் ஸூர்யனுடைய டும் வெயிலால் சூ ாக்கப்பெற்றவையும், பொன் வெள்ளி செம்புக்கனிகளுள்ளவையுமான இமயமலையின் அடிவாரங்களிலிருந்து கசிந்து சிலாஜது வெளியாகின்றது. (1) பொன் கனிகளடங்கிய மலைப்பிராந்தத்திலிருந்து உண்டான சிலாஜது ஜபாபுஷ்பம் போன்ற நிறமுடையதாய் பாரமுள்ளதாகவும் இருக்

1. சிலாஜது இது சில த து வென்றும் வழங்கப்படுகிறது. [ஜதுவென்ருல் அரக்கு; சிலையிலிருந்து வருகிற அரக்குபோன்ற வஸ்துவாகை யால் சிலாஜது எனப்படுகிறது.]

2. ஸத்துவமுள்ளது ஸ ஸத் சில ஜ எனப்படுகிறது.

3. ஸத்துவமில்லாதது நிஸ்ஸத சி ஜ எ ப்படுகிறது

கும்' அது சிறிது கசப்பும் விசேஷ இனிப்புமுள்ளது' இர ஸாயந குணத்திற் சிறந்தது. (2) வெள்ளிக்கனிகளுள்ள மலை யிலிருந்து உண்டாகும் சிலாஜது மதுர ரஸமுள்ளது' வெண் மையானது' குருகுணமுடையது' பித்த 'ம்பந்தமான ரோகங்களைத் தீர்க்கக்கூடியது' விசேஷமாகப் பாண்டுரோகத் தைப் போக்கும் (3) செம்புக் கனிகளடங்கிய மலைப்பிராந்தத்தி லுண்டானது கருநிறமாகவும் திரள் திரளாகவும் பாரமுள்ள தாகவும் இருக்கும்' சுவையிற் கசப்பு' வீர்யத்தில் உஷ்ணமானது' இது கபதோஷ வாததோஷங்களை ஹரிக்கும்' க்ஷயரோகத்...தையும் போக்கும். 109 113½.

(1) அக்னியிற்போட்டால் எது புகையாமலே லிங்க வுருவமடை கிறதோ தண்ணீரிற் போட்டால் கரைந்து விடுகிறதோ அது சுத்த மான சிலாஜது என்றறிக. (2) சிலாஜதுவானது ஜ்வரம் பாண்டு

சிலாஜது லக்ஷணம்.

சோபை யென்னும் வீக்கம் இவற்றைத் தணிக்கும்' மேஹரோகம் அக்னி மாந்தம் இவற்றைப் போக் கும்' தேஹத்தில் அமிதமாகச் சேர்ந்துள்ள கொழுப்பைக் கரைக்கும்' க்ஷயரோகத்தைத் தணிக்கும்' சூல மென்கிற வயிற்றுநோயைத் தீர்க்கும்' குல்மம் ப்லீஹ வீக்கம்

சிலாஜதுவின் பொதுவான குணங்கள்.

மஹோதரம் இருதயத்தைப் பற்றிய வலி ஆம தோஷம், ஸகல விதமான சர்மரோகங்கள் ஆகிய வற்றைப் பரிஹரிக்கும். ருங் ச்சொல்லுமிடத்து இது தேஹத்தைப் பலப்படுத்தவும் லோஹ முறைகளைச் செய்யவும் மி கு உபயோகமானது. மேலும் இரஸங்கள் உபரஸங்கள் இரஸேந்திரம் இரத்தினங்கள் லோஹங்கள் இவற்றில் எ' குணங்கள் உண்டோ அவ்வனைத்தும் சிலாதாதுவில் அடங்கியிருக்கின்றன' ஆகவே இது கிழத்தன மும் மரணமும் சீக்கிரம் நேரிடாவ' ணம் செய்யக் கூடியது. 114 116

(1) க்ஷாரங்கள்[1] அம்லங்கள்[2] கோமூத்திரம் இவற்றால் கழு விஞல் சிலாஜது சுத்தியாகும். (2) சிலாஜதுவைப் பாலிற் கரைத்

சிலாஜது சுத்தி.

தாகிலும் சுத்திசெய்யலாம். (3) த்ரிபலாகஷா யத்தையாவது கையாந்தகரைச் சாற்றையாவது இரும்புப் பாத்திரத்தில் ஊற்றி அதில் சிலாஜது வைப் போட்டு நன்கு சுத்தி செய்யலாம். (4) க்ஷாரங்கள் காடிகள் மஹிஷாக்ஷிருக்குலு இவற்றை ஸ்வேதந யந்திரத்தில் சேர்த்து அதில் சிலாதாதுவைச் சேர்த்து ஒரு நாழிகை காலம் ஆவியிற் பக்கு வம் செய்ய சிலாஜது சுத்தமாகும். 117 118½.

---

1. யவக்ஷாரம் ஸர்ஜக்ஷார' முதலியவை க்ஷார' ள்.

2 அம் ' ள் ரஞ்ஜி ' என்னும் ாடி, எலுமிச் ச முதலிய அம்ல வகை ள்

மனச்சிலை கந்தகம் தாளகம்[1] இவற்றை எலுமிச்சய் பழச் சாற்றால் ஆட்டி, அதில் சிலாஜதுவை கூட்டி எட்டு வறட்டிகளைக் கொண்டு புடமிட நன்கு பஸ்மமாகும். 119 120.

சிலாது பஸ்மம்.

பஸ்மமாகச் செய்த சிலாஜதுவுக்குச் சமநிறையா காந்த பஸ்மமும் வைக்ராந்த பஸ்மமும் கூட்டி த்ரிபலை த்ரிடு இவற்றின் சூர்ணமும் அவ்விதம் கூட்டி நெய் விட்டு ஆட்டி ஒரு வல்லப்பிரமாணம்[2] அதை உட்கொள்ளலாம். பாண்டு க்ஷயம், அக்னிமாந்தியம் மேஹரோகங்கள் மூலரோகம் குல்மம் ப்லீஹோதரம் மஹோதரம் பலவிதமான சூலைகள் என்கிற வயிற்று நோய்கள், யோனியைப்பற்றிய நோய்கள் ஆகியவற்றில் இது உபயோகமானது. ஆறு மாஸங்கள் இதை இரஸாயந முறைப்படி உபயோகித்து வந்தால் கிழத்தனம் தோன்றாமல் ஆரோக்கியமாக நூறாண்டு வாழலாம் 121 122.

சிலாஜது ரஸாயநம்.

திராவணவர்க்கச் சரக்குகளாலும் அம்லவர்க்கச் சரக்குகளாலும்[4] சிலாஜதுவை ஆட்டி மூஷைக்குள் வைத்து மூடி கரிகளைக்கொண்டு கடுந்தீயிட்டு எரிக்க அதிலிருந்து அயத்திற்கொப்பான ஸத்துவம் உண்டாகும். $123\frac{1}{2}$.

சிலாஜது ஸத்துவம்.

(1) ர்ப்பூரசிலாஜது என்பது வெண்மையாகவும், உருவத்தில் மணல் மணலாகவும் இருக்கும். (2) மூத்ரக்ருச்ச்ரம் அச்மரீ மேஹரோகம் காமாலை பாண்டு ஆகியவற்றை நிவ்ருத்தி செய்யும். (3) இது ஏலக்காய் கஷாயத்தில் ஊறவைப்பதனால் சுத்தியடையும். (4) இதற்கு பஸ்மமுறையாவது த்துவ மெடுக்கும் முறையாவது இவ்விஷய மறிந்தவர்களால் கூறப்படவில்லை. 124 125.

ர்ப்பூர சிலாஜது.

## துத்தம்[5].

முன்னால் கருடன் அமுதத்துடன் விஷத்தையும் ஒருமிக்கப் பருகி மரகத பர்வதத்தில் அவற்றை கக்கிவிட அவ்விதம் கக்கிய வஸ்து உறைந்து ஸஸ்யகம் என்னும் துரிசாக ஆயிற்று அதில் மயிலின் கழுத்துக்குச் சமானமான நிறமுள்ளதும் அதிக கனமாயி

துத்த வுற்பத்திமுதலிய விசேஷம்.

---

. மனச்சிலை முதலியவற் றச் த்தி செய்தே உபயோகிக்கே டும்.

2. இர டு குஞ்ஜா (குன்றுமணி) எடை ஒரு வல்லம்.

3. திரா வர்க்கம் 10-ம் அத்தியாயம் பார்க்க.

4. அம்லவர்க்கம் 10 ம் அத்தியாயம் பார்க்க

5. துத்தம் ஸஸ்யகம், மயூரதுத்தம் என்றும் ஸம்ஸ்க்ருதப் பெயர்கள் துரிசு என்றும் தமிழில் வழங்குவர்.

6. மயிலின் கழுத்துக்குச் சமான நிறமுள்ளதாலே மயில்துத்தம் என்று வழங்கப்படுகிறது.

ருப்பதுமான துரிசு மிகச் சிறந்தது. ஒரு சரக்கு விஷம் கலந்ததாயிருந்தால் அச்சரக்கின் வீர்யம் இயற்கையினும் அதிகப்படுகிறது. அவ்விதமே அமுதம் கலந்த விஷமும் குணத்தில் அமுதத்தினும் மேலானதாகும். 126 128.

துத்தத்தின் குணங்கள்.

மயில் துத்தமானது கோளாறடைந்த மூன்று தோஷங்களையும் சமனம் செய்யும்; விஷம் இருதய ரோகம் சூலம் மூலம் குஷ்டம் அம்லபித்தம் மலபந்தம் இவற்றைப் போக்கும்; சிறந்த இரஸாயநமுமாகும்; வாந்தியையும் விரேசனத்தையும் உண்டுபண்ணும்; கரமென்னும் விஷத்தாலான கோளாறையும் நிவ்ருத்திசெய்யும்; வெண்குஷ்டத்தையும் நீக்கும். 129

துத்த சுத்தி.

(1) துத்தத்தை இரக்தவர்க்கத்தில்[1] ஏழுதடவை பாவனை செய்து அவ்விதமே ஸ்நேஹவர்க்கத்தில்[2] நனைத்து எடுக்க அது நன்கு சுத்தியடையும். (2) பசு எருமை வெள்ளாடு இவற்றின் சிறுநீர்களில் ஏதேனும் ஒன்றில் சிறிது கர்ப்பரமும் கலந்து அதில் டோலாயந்திர முறையில் பக்குவம் செய்தாலும் துத்தம் சுத்தமாகும் 130 131.

துத்த பஸ்மம்.

எலுமிச்சம்பழச்சாறு, கந்தகம் மனச்சிலை வெங்காரம் இவற்றுடன் துத்தத்தைக் கூட்டி மூஷையில் வைத்து குக்குட புடமிட்டால்[4] அது பஸ்மமாகும்.[5] 132

துத்த ஸத்துவம்.

(1) மயில்துத்தத்தைப் பொடிசெய்து அதற்கு நாலிலொரு பங்கு வெங்காரம் கூட்டி புங்கயெண்ணெய்க்குள் ஒரு நாள் வைத்திருக்கவும்; பிறகு அதை அந்தமூஷைக்குள்ளே[6] வைத்து கரிகளிட்டு எரிக்கவும்; இவ்வாறு மூன்று புடங்களிட பட்டுப்பூச்சிநிறமான வெகு சிறந்த ஸத்துவம் அதிலிருந்து வெளியாகும். (2) துத்தத்தைச் சிறிதளவு வெங்காரத்துடன் கூட்டி வேப்பஞ்சாற்றால் ஆட்டி மூஷைக்குள் வைத்து சீலைசெய்து நெருப்பிலிட்டு நன்கு ஊதினால் தாம்ரம் போன்றதான ஸத்துவம் வெளியாகும். (3) சுத்திசெய்த துத்தத்தை முற்கூறிய சரக்குளோடு[7] கூட்டியும் வேறுபல முறைகளைக் கொண்

1. இரக்தவர்க்கம் 10 வது அத்தியாயம் பார்க்க.
2. ஸ்நேஹவர்க்கம் பத்தாம் அத்தியாயத்தில் விவர காண்க.
3. கர்ப்பரம் இ தப்பற்றி இரஸ த்தின் கீழ் பார்க் .
4. கு குடப்புடம் 10-வது அத்தியாயத்தில் விவரம் பார்க் .
5. மயில்துத்த த மோர்விட்டு அ ரத்து மூ ஷயிலிட்டு சீலை செய்து, ஏழு புடங்களிட பஸ்மமாகும். (இரஸப்ரதீபம்.)
6. அந்தமூஷை பத்தாவது அத்தியாயத்தில் வஜ்ரமூஷை யென்பதைப் பார்க்க.
7. வெ காரம் புங்கயெண்ணெய் ே ப்பஞ்சாறு முதலிய வ முற்கூறிய சரக்கு ள்.

நிம்[1] அக்னியிற் பக்குவம் செய்ய நிச்சயமாக ஸத்துவம் வெளியாகும். 133 136.

துத்தஸத்துவமோதிரமும் அதன் உபயோகமும்.

துத்த ஸத்வத்தை யெடுத்து அத்துடன் வன்மையான பூநாகத்தின்[2] ஸத்துவத்தைக் கூட்டி அவற்றைக்கொண்டு மோதிரம் செய்யவும். இம்மோதிரத்தால் பரிசித்தால் சீக்கிரம் வயிற்றுவலி தீரும். இம்மோதிரத்தைக் கைகளில் தொட்டால் ஜங்கம ஸ்த்தாவரவிஷங்களையும் பூதங்களையும் டாகினி முதலி பிசாசுகளையும் நிவாரணம் செய்யலாம். இந்த மோதிரத்தின் குணம் நம்பிக்கையாக பலன் தருகிறது. இம்மோதிரத்தை எண்ணெயில் போட்டுக் காய்ச்சி வயிற்றில் வலியுள்ளவிடத்தில் தேய்க்க உடனே வலிதணியடையும்; பிரஸவிக்கும் ஸ்த்ரீகளுக்கு உபயோகித்தால் உடனே ஸுகப்பிரஸவ முண்டாம். நேத்திர வியாதிகளில் உபயோகித்தால் அந்த வியாதி சீக்கிரம் குணமடையும். 13 142

சபலம்[4].

சபல பேதங்களும் அவற்றின் தன்மைகளும்.

சபலம் என்னும் இரஸச்சரக்கு மஞ்சள் வெண்மை சிவப்பு கறுப்பு என்று நிறங்களைக்கொண்டு நான்குவிதமாகப் பிரிக்கப்படுகின்றது. அவற்றுள் பொன்னிறமானதும் வெள்ளி நிறமானதும் விசேஷமாக இரஸத்தைக் கட்டும் சுபாவ முடையன. மற்றவிரண்டும் மத்திமமானவை. அரக்கைப் போலே எளிதில் உருகக்கூடியவை உபயோகமில்லாதவை. வங்கத்தைப்போலே அக்னி ஸம்பந்தத்தால் எளிதில் உருகுந் தன்மையதாகையால் சபலம் என்று வழங்கப் படுகிறது. 143 144

சபலத்தின் குணங்கள்.

சபலமானது லேகநம் ஸ்நிக்த்தம் தேஹலோஹகரம்[5] என்னும் குணங்களையுடையது. இரஸத்தைப் பக்குவம் செய்வதற்கான காரியங்களில் உதவக்கூடியது. சுவையில் கைப்பும் இனிப்பும் கலந்தது. உஷ்ணவீர்யம்.

1. துரிசைப் பொடிசெய்து, இரும்புப் பாத்திரத்தில் தண்ணீரிற் சேர்த்துக் கலக்கவும்; சிறிது நேரம் அசையாமல் வைத்திருந்து பிறகு மேலே தெளிந்துள்ள நீரைக் கொட்டிவிடவும். மீண்டும் அதில் ஜலம் சேர்த்து அவ்விதமே அலசிக் கழுவவும். இவ்வாறு பலமுறை செய்ய துத்த ஸத்துவம் தாம்ரரூபமாய் அடியிற் படிந்திருக்கும். இது முதலியது துத்தத்தின் வேறு ஸத்துவபாதந முறையாம்.

2. பூநாகம் நாக்குப்பூச்சி.

3. ஜங்கம விஷம் ஸர்ப்பம், தேள் முதலியவற்றின் விஷம். ஸ்த்தாவரவிஷம் அலரி, எட்டி பாஷாணம் முதலியவை.

4 சபலம் என்பது வைக்ராந்தம் போன்ற ஒருவித தாதுப் பொருள். ஆனால் வைக்ராந்தம் வெகு கடினமானது; சபலம் சூட்டுக்கு எளிதில் இளகக் கூடியது. சபலம் என்பது இன்ன வஸ்துவென்று விளங்கவில்லை யென்று பி. ஸி. ராய் முதலானோர் கூறுகிறார்கள்.

5. தேஹத்தை உலோஹம்போல் திடமாகச் செய்வது.

உருவத்திற் படிகக்கல் போன்றதாகவும் ஆறு பட் டகளையுடைய தாகவும் நிகி நிகிப்பாகவும் பாரமாகவும் இருக்கும். மூன்று தோஷங்களாலுண்டாகும் கோளாறுகளைப் போக்கும். அதிக விருஷ்யகுணமுள்ளது.[1] இரஸத்தைக் கட்டுங்குணமுடை யது. ஆகவே சிலர் சபலத்தை மஹாரஸங்களில் ஒன்றாகக் கூறலாயினர். 145 146.

சபலசுத்தியும் ஸத்துவபாதநமும்.

(1) சபலத்தை எலுமிச்சம்பழம் பெரும்பூசிணி இஞ்சி இவற்றின் இரஸக ளில் பாவனை செய்து எடுக்க சுத்தியாகும். (2) ச பலக் கற்களைப் பொடி செய்து காஞ்சிகம் என்னும் காடி உபவிஷங்கள் விஷங்கள்[2] இவற்றால் ஆட்டி ஓர் உருண்டையாகச் செய்து அதை முறைப்படி எரித்து ஸத்துவமெடுக்கலாம். 147 148.

## இரஸகம.

இர பேத ள்.

இரஸகம் என்னும் சரக்கு தர்துரம் என்றும் காரவேல்லகம் என்றும் இருவகைப்படும். இவற்றுள் சிதள்களோடு கூடியது **தர்துரம** என்றும் சிதள்களில்லாதது க **ரவேலலகம** என்றும் கூறப்படும். அவற்றுள் முதலிற் கூறியது ஸத்துவமெடுப்பதற்குச் சிறந்தது. இரண்டாவது ஔஷதம் முதலிய முறைகளுக்குச் சிறந்தது. 149 149½.

இரஸகத்தின் குணங் ள்.

இரஸகமானது ஸகல மேஹங்களையும் கபம் பித்தம் இவற்றின் கோளாறுகளையும் தீர்க்கும். நேத்திரரோக ள், க்ஷயம் இவற்றையும் பரிஹரிக்கும். அயம் இரஸம் இவற்றை இரஞ்ஜநம்[4] செய்ய உபயோ மாகும். இரஸம் இரஸகம் என்கிற இரண்டும் தேஹத்தை மிகவும் பலப்படுத்துமியல்புள்ள சிறந்த ஸித்தரஸங் ள் என்று நாகார்ஜுனனால் கூறப்பட்டவையாம். இரஸம், இரஸகம் ஆகிய இரண்டையும் எவர் நெருப்பு கு நிற்கும்படியாகச் செய்கின்றனரோ அவரு கு தேஹத்தை உலோஹம் போற் செய்துவிடும் ஸித்தி முற்றிலும் வசமாய்விடுமென்பதில் ஐயமில்லை. 150 152½.

1. விருஷ்யம் சுக்ரதாது முதலிய த விருத்திசெய்து, ஸ்த்ரீ புருஷர் ளு டய வீர்யத் த பலப்படுத் ந் தன் ம.

2. விஷங்கள் உபவிஷங்கள் இவற்றைப் பற்றிய விஷயம் இந்நூலின் இறுதியில் விஷகல்பாத்யாயத்தில் விவரி ப்படு .

3. இரஸ ம் இ த பப ம, பரி என்று ஸம்ஸ் ருதத்தில் ழங்குவர் . ட த்த எ று தமிழில் கூறப்படுகிறது (C min ).

4. இரஞ் சாயமேற்றுவது அல்லது சிவ ச் செய்வது.

இரஸகசுத்தியும் இரஞ்ஜ மும்.

(1) இரஸகத்தைப் பேய்ச்சுரையின் ஸ்வரஸத்தில் சேர்த்து பக்குவம்செய்ய அதும் தாஷங்கள் நீங்கி சுத்தமாகவும் பொன்நிறமாகவும் ஆகிறது. (2) இரஸகத்தைக் காய்ச்சி கொம்மட்டி மாதளைச் சாற்றில் தோய்க்க வேண்டும். இவ்விதம் எழு முறைகாய்ச்சித் தோய்க்க அது சுத்தமாகும். (3) மனிதனின் அல்லது குதிரையின் சிறுநீரிலாவது மோரிலாவது காஞ்ஜிகமென்னும் காடியிலாவது இதைக் காய்ச்சி அமிழ்த்தினாலும் சுத்தியடையும். (4) இரஸகம் ஒருமாத காலம்சிறுநீரில்ஊறினால்அது நன்கு சாயமேற்ற உதவும். 153 156.

இரஸகஸத்துவ பாத மு ற.

(1) சுத்தி செய்யப்பெற்றவையான செம்பு இரஸம் வெள்ளி பொன் இவற்றை இரஸகத்திற்குச் சம அளவாகவும் மஞ்சள் த்ரிபலை மருக்களா இந்துப்பு ஓட்டடை வெங்காரம் சேரா ் கொட்டை இவற்றை இரஸகத்திற்குக் கால்பங்கு அளவாகவும் சேர்த்து அனைத்தையும் அம்லவர்க்கத்தினால் ஆட்டி அக்கல்கத்தை வ்ருந்தாகமூஷையிற் பூசி உலர்த்தி அதன்மேல் சிலைசெய்து மூஷையின் மேலே இரஸகத்தை வைத்து பிறகு நன்றாக எரிக்கவும். இரஸகம் உருகிப்போனதும் அக்னிஜ்வாலை நீலமாகவாவது வெண்மையாகவாவது தோன்றும். அப்போது ஸந்தம்சம் என்னும் கருவியினால் மூஷையைப் பிடித்தெடுத்துக் கவிழ்த்து மூஷை உடையாதபடி மெதுவாகத் தரையிலேயே தட்டவும். அதிலிருந்து வங்கத்தைப்போலே இரஸகஸத்துவம் விழும். இவ்விதமே மூன்று நான்குமுறை பக்குவம் செய்ய அந்த இரஸகத்திலிருந்து ஸத்துவ மனைத்தும் வெளியாய்விடும். (2) கடுக்காய்த்தூள் அரக்கு நாகம் மஞ்சள் ஓட்டடை வெங்காரம் இவற்றை இரஸகத்துடன் மூக மூஷையில் வைத்துத் தீயிட்டு ஊதியினால் அதிலிருந்து ஸத்துவம் சுத்தமாக வெளியாகும். (3) அரக்கு கள்ளிவேர் வெண்கடுகு கடுக்காய் மஞ்சள் ஸர்ஜக்ஷாரம் வெங்காரம் இவற்றை இரஸகத்துடன் கூட்டி சூர்ணம் செய்து அச்சூர்ணத்தைப் பசும் பாலிலும் நெய்யிலும் சேர்த்து ப ் குவம் செய்து எடுத்து குளிகையுருவமாகச்செய்து வ்ருந்தாக மூஷையினுள் அடைத்துச் சீலை செய்து தீயிட்டு ஊதவேண்டும். அதை அப்பால் ஓர் கற்பாறையில் கவிழ்க்கவும். இவ்விதம் பலமுறை செய்ய இரஸகத்திலிருந்து பளபளப்பாத் தங்கம்போன்ற ஸத்துவம் வெளியாகும். (4) அல்லது முற்கூறியவாறு இரஸகத்தைநெய்முதலிய திறபக்குவம்செய்து அதை மூஷையில் அடை ் கவும். ஒருசட்டியில் சிறிது மண்போட்டு ஒருசிறிய லத்துடன்கூடிய பாத்திரத்தைப் புதைத்தாற்போல வைக்கவும். அச்சட்டியின் வாயை ஒரு சிறுதுவாரமுள்ள அகலால் மூடி அந்த துவாரத்

---

1. வ்ருந்தா மூ ஷ பத்தா து அத்திய ய ் பார்க் .
2. ஸந்தம்சம் குறடு.
3. மூக மூ ஷ பத்தாம் அத்தியாயம் பார ் .

திற்குச் சரியாக முற்கூறிய மூசையைக் கவிழ்த்துவைத்து அதன் மேல் தீமூட்டி நன்ருக ஊதி ஜ்வலிக்கச்செய்யவும்' மூசையிலிருந்து பாத்திரத்திலுள்ள ஜலத்தில் ஸத்துவம் விழும்' அதையெடுத்து முறைப்படி யுபயோகிக்கலாம். 157 166½.

இரஸக ப மமும் உப ே ாகமும்.

முற்கூறியவாறு கிரஹித்த இரஸகத்தைத் தாளகத்துடன் கூட்டி பாணையில் இட்டு தீயேற்றி இரும்புத் தடியினுலே நன்ருக மசித்தால் அது பஸ்மமாவது திண்ணம். ( ) அந்த பஸ்மத்தை அதற்குச் சம அளவான காந்தபஸ்மத்தோடு கலந்து அதில் எட்டு குன்றுமணி யெடை யெடுத்து த்ரிபலையின் கஷாயத்துடன் உட்கொள்ளவும். (2) அதே பஸ்மத்தை இரவில் காந்தமயமான பாத்திரத்தில் சேர்த்து நல்லெண்ணெய் கூட்டி யுபயோகிக்கலாம். இது மதுமேஹத்தையும் வெகு சீக்கிரத் திற் போக்கும். மேலும் பித்தக்கோளாறு க்ஷயம் இரத்தகுல்மம் பிரதரம் ஸோமரோகம் ஸகலவிதமான யோனிரோ ங்கள் விஷமஜ்வர ங்கள் ருதுசூலை காஸம் ச்வாஸம் விக்கல் ஆகிய பிணிகளிலும் உபயோகமானது [1]. 167 172.

## மூன்ரும் அத்தியாயம்

### உபரஸங் ளும் ஸாதாரண ரஸங் ளும.

### உபரஸ ள்.

எட்டு உபர ங்கள்.

கந்தகம் கைரிகம் [2] அன்னபேதி படிகாரம் தாலகம் மனச் சிலை அஞ்ஜநம் கங்குஷ்டம் [4] என்று உபரஸ கள் எண்வகைப்படும். அவை இரஸத்தைக் கொண்டு செய்யப்படும் ஔஷத முறைகளில் உபயோகப்படுகின்றன. 1.

---

1. இரஸகம் என்னும் கர்ப்பரத்தை பஸ்மாதிகள்செய்யும் ே று சில முறைகள்: (1) இரஸகத்துடன் இரஸம் கூட்டி அ ரத்து, ாலு ாயந்திரத்தில் ஒரு ாள் எரித்தெடுக்க சிவப்பான பஸ்மமாகும். (2) இரஸமும் வெங் ாரமும் ஒவ்வொரு பா ம், பசுமையான கர்ப்பரம் இர டுபா ம்' இ ற்றை யெல்லாம் இரஸ மனைத்து ஹும் நன்கு கலக்கும் ரயில் அமுத்தி அரைக்கவும்' பிறகு எலுமிச்சம்பழச்சாற்ருலும் கள்ளிப்பாலாலும் ஆட்டி வெய்யிலில் உலர்த்தி, பிறகு எருக்கன்பாலில் அ த பாவனை செய்யவும். இவ்விதம் பக்குவம் செய்து எடுத்த ல்கம் ஒரு பாகம், வெங்காரம் ஒருபா ம் தாம்ரம்மூன்றுபாகம் ஆகக் கூட்டி அந்த மு ஷயில் வத்துத் தீயிட்டு ாதவும். இதிலிருந்து குங்குமம் மாதிரியாக ஸத்து ம் தோன்றும்.-இரஸேந்திரசிந்தாமணி (3)"இரஸகம் எ பது ஒருவித துத்தம்; அது ே கர்ப்பரமாம். துத்தத்துக்குள்ள குணங்கள் யாவும் இரஸகத்திற்கும் உண்டு" ஆயுர்வேத ப்ரகாசம்.

2. கைரிகம் காவி யெனப்படும் ஒருவித தாதுப்பொருள்.

3. பிறகு கூறப்படும் ஸௌவீராதி அஞ்ஜந வர்க்கம்.

4. கங்குஷ்ட ' ங்குஷ்டம்' எ று பிறகு வரும் விஷயத்தைப் பார் .

கந்தகம்.

கந்தகமானது பார்வதியின் இரஜஸ்ஸிலிருந்து ஆதியில் ஆவிர்ப்பவித்ததாகக் கூறப்படுகிறது. இதற்குள்ள ஒருவித மணத்தைக்கொண்டு 'கந்தகம்' என்னும் பெயர் இதற்கு வழங்கப் பட்டது. (1) அக்கந்தகம் மூன்று விதமாம்.

கந்தக பேதங்கள்.

அவற்றுள் கிளிமூக்குபோல் சிவந்தநிறமாயிருப்பது சிறந்தது. மஞ்சள் நிறமானது குணத்தில் மத்திமமானது. வெண்மையாயுள்ளது அதமமாம். (2) கந்தகம் வெண்மை முதலிய நிறங்களைக்கொண்டு நான்கு விதமாகவும் பகுக்கப்பட்டிருக்கிறது. வெண்மையான கந்தகம் டிகை எனப்படும். அது லேபனங்களின் முறையிலும் உலோஹ பஸ்மமுறையிலும் உபயோகமாகிறது. பசுமையான கந்தகம ஆமலஸாரம எனப்படுகிறது. அதுவே சுகபிச்சம் என்றும் கூறப்படும். இரஸஸம்பந்தமான ஔஷதமுறைகளிலும் இரஸாயன முறைகளிலும் அது சிரேஷ்டமானது. செந்நிறமாயுள்ளது சுகதுண்டம் என்று வழங்கப் படுகிறது. அது இரஸவாத முறைக்குச் சிறந்த சரக்கு. கிருஷ்ண கந்தம என்னும் கருநிறமான கந்தகம் கிடைப்பது அரிது. அது கிழத்தனமும் மரணமும் நேரிடாமல் தடுக்க உபயோகமானது. 2 1ა.

கந்தகமானது சிறந்த இரஸாயனம். சுவையில் இனிப்பாகவும் விபாகத்தில் கடுரஸமாகவும் வீர்யத்தில் உஷ்ணமாகவும் இருக்கும். அரிப்பு குஷ்டம் விஸர்ப்பம் என்னும் அக்கி படை ஆகியவற்றைப் போக்கும். அக்னிதீபநம் செய்து ஜார்ண

கந்தகத்தின் குணங்கள்.

சக்தியையும் விருத்தி செய்யும். ஆமதோஷத்தைத் தீர்க்கும். விஷஹாரம். பாரதமென்னும் இரஸத்துக்கு வீர்யம் கொடுக்கும். கிருமிஹாரம். பார்வதியின் ஸத்துவம் எனப்படுகிற இது இரஸத்தை பஸ்மமாக்கும். 16 19

(1) கந்தகத்தைப் பாலில் சேர்த்து ஒரு நாழிகைச் சமைக்கவும். பிறகு அதை யெடுத்து ஜலத்திற் கழுவ வேண்டும். பிறகு

1. இங்கே பார்வதியின் இரஜ ' என்னும் ஸ்த்ரீதாது 'த மா மாறிய இதிஹாஸம் மூலக்கிரந்தத்தில் விரிவா வி ரிக்கப்படுகிறது. அ 'விவர ம் பிரக்ருத சாஸ்திர ஸம்ப 'தத்திற்கு அவசியமல்லாததெ க் கருதி மொழிபெயர்க் ப்படவில்லை.

2. சுகபிச்சம் கிளியின் இறகு போன்றது என்று பொருள்.

. சுதுண்டம் நிறத்தி கிளிமூக்குபோன்றது.

4. இங்கே பலிச்ச 'ரவர்த்தி அதிக பலம் பெறுவதற் ாக க 'த த் த முதலில் உட்கொண்டதாகவும், வா ுகி யக் கட்டி யிழுக்கு ' போது அதன் மு ஜ்வாலை ாலே அவ ' உடலி ' அக்க 'த ம -ரு அக் ந்தகவாஸனையோடு அவன் உடலிலிருந்து ெ ாழுப்புப் ப ச ஒரு வித க 'தகமாக வெளியா தா வும் அது பலீ யெ 'றும், பலீ " எ ' று ' வழ 'கப்படு தாகவும் புராண வரலாறு.

பசுவின் நெய்யிற் சேர்த்து உருக்கி ஒரு வஸ்திரத்திற் கொட்டி வடிக்கட்ட வேண்டும். இவ்விதம் செய்ய அது சுத்தியடையும். இவ்விதமாகச் சுத்திசெய்யப்படுமானல் கந்தகத்திற் கலந்துள்ள கற்கள் வஸ்திரத்தில் தங்கிவிடும்; நெய்யில் உமிகளைப் போன்று விஷம் நின்றுவிடும்; பிறகு கந்தகம் கெட்டியாக அடியில் நிற்கும். இம்முறையில் சுத்திசெய்யப்பெற்ற கந்தகம் புஜிக்கப்படுமானல் அபத்யவுணவு செய்தாலுங்கூட தீங்குண்டாவதில்லை. வேறு வகையான கந்தகத்தை யுபயோகிக்கையில் அபத்யம் செய்தால் அது விஷம்போன்றதாய் ஆபத்துண்டு பண்ணும். (2) கந்தகத்தை உருக்கிக் கரிசிலாங்கண்ணிச்சாற்றில் ஊற்றவும்; இவ்வாறு அச்சாற்றில் ஏழு தடவை அதைக் காய்ச்சி ஊற்ற அது சுத்தமாகும். (3) ஒரு பாத்திரத்தில் போதியவளவு பால் வைத்து அதன் வாயை வஸ்திரத்தினல் மூடிக் கட்டவும்; அவ்வஸ்திரத்தின் மீது தூளாகச் செய்த கந்தகத்தைப் பரப்பவும்; வாயகன்ற மற்றொரு சட்டியை அதன்மேல் மூடிபோல் வைத்து அச்சட்டியின் மீது காட்டுவறட்டிகளிட்டுத் தீ மூட்டவும்; அப்போது கந்தகம் உருகி மெதுவாக வஸ்திரத்திலிருந்து வடிகட்டப்பட்டுப் பாலில் விழும்; அந்த கந்தகம் சுத்தமானதாயிருக்கும்[1]. 20 25.

கந்தக சுத்தி முறைகள்.

முற்கூறியவாறு சுத்தி செய்யப்பெற்ற கந்தகத்தை ஒரு சாணமெடை த்ரிபலை நெய் கையாந்தகரை தேன் இவற்றில் ஏதேனும் ஒன்ருேடு கூட்டி யுட்கொள்ள அம்மனிதனுக்கு நேத்திரசக்தி கழுகின் கண்ணுக்குச் சமானமாக ஆவதுடன் அவனை வியாதியற்றவனுகவும் தீர்க்காயுளை யுடையவனுகவும் அது செய்யும். 20 26.

சுத்தகந்தக ரஸாயனம்.

(1) ஒரு பங்கு சுத்த கந்தகம்; அதில் நாலிலொரு பங்கு சுத்தம் கடுகுசூர்ணம்; அவ்விரண்டையும் கலந்து ஒரு கையகலமுள்ளதுரி சிறிது நீண்டதுமான வஸ்திரத்தில் அதைப் பரப்பி அத்துடன் துணியைச் சுற்றி நூலைக்கொண்டு அதைச் சுற்றவும்; பிறகு அத்திரியை நல்லெண்ணெயில் ஒரு யாமகாலம் அமிழ்த்திவைக்கவும்; அப்பால் அவ்வர்த்தியை நடுவில் ஒரு குறட்டினல் எடுத்துப் பிடித்துக்கொண்டு அக்னியில் எரிககவும்; அதி

கந்தகத் திருதிகளும் அதின் குணங்களும்.

1. "சதவாரம் ருதச் சைவம் நிர்க்ந்தோ ஜாயதே பலீ" என்கிற அர்த்தச்லோகம் சில புஸ்தகங்களில் அதிகம் காணப்படுகிறது. (அதன்பொருள்: இவ்விதம் நூறு முறை செய்ய கந்தகம் நாற்றமொழிந்ததாய்விடும்).

கந்தகத்தைப் பொடித்துப் பாலில் அது தோய்ந்து போகுமளவும் காய்ச்சவும்; ஸூர்யாவர்த்தம் என்னும் இலையின் சாற்றில் அதைப் போட்டு மீண்டும் காய்ச்சவும்; பிறகு த்ரிபலையின் கஷாயத்தில் மறுபடி பக்குவம் செய்யவும்; இவ்விதம் செய்வதால் கந்தம் மாத்திரம் தனக்குள்ள நாற்றத்தை இழக்கும்.' ஆயுர்வேதப்ரகாசம்.

விருந்து தூளித் தூளியாகப் பெருகும் கந்தகத்திரவத்தை ஒரு பீங்கான் பாத்திரத்தை அடியில் வைத்து ஏந்திக்கொள்ளவும். அந்த திரவத்தை வெற்றிலையில் மூன்று பிந்துக்கள் அளவாக விட்டு ஒரு வல்லப் பிரமாணம்[1] சுத்த ரஸமும் அதிற் கூட்டி விரலால் நன்றாகக் குழைத்து அவ்வெற்றிலையோடு கந்தகத்ருதியையும் இரஸத்தையும் புஜித்துவிடவேண்டும். இது அதி தீபநசக்தியை யுண்டுபண்ணும்; க்ஷயரோகம் பாண்டுரோகம் காஸம் ச்வாஸம் வயிற்றுளைத்தல் கடுமையான கிரஹணீரோகம் இவற்றைப் போக்கும்; ஆமதோஷத்தையும் விரைவில் நீக்கும்; தேஹத்திற்கு இலகுத் தன்மையையும் தரும். (2) நெய் தடவிய ஒரு இரும்புப் பாத்திரத்தில் சுத்த கந்தகத்தை உருக்கி அதை நெய் தடவிய ஒரு கரண்டியினால் எடுத்து இரண்டு நிஷ்கப்பிரமாணம் உட்கொள்ளவும்; இது க்ஷயம் முதலிய பலமான வியாதிகளையும் முக்கியமாய் குஷ்டரோகத்தையும் போக்கும். க்ஷாரங்கள் புளிப்பு நல்லெண்ணெய் காடி வயிற்றில் அழற்சியுண்டுபண்ணும் பதார்த்தங்கள் துவரை முதலிய இரு பிளவுகளுள்ள பருப்புவகைகள் ஆகியவற்றை முறைப்படி சுத்த கந்தகத்தை உட்கொண்டு வருபவன் விலக்கிவிட வேண்டும். 2^ 34.

தகமுபயோகிக்கும் போது விலக்க வேண்டியவை.

சில கந்தக யோகங்கள்.

(1) கந்தகம் ஒரு பங்கு மிளகு ஒரு பங்கு த்ரிபலை ஆறு பங்கு; இவற்றைப் பெருவாகையின் வேர்க்கஷாயத்தினால் அரைத்து உட்கொள்ள எல்லாக்குஷ்டங்களும் தீரும் (2) கந்தகத்தை அவ்வேரின் இரஸத்தில் அரைத்து தினந்தோறும் தேஹத்திலும் தேய்த்து வருவதால் அதிக உபயோகமுண்டு. இம்முறைகளை யுபயோகித்து வந்த குஷ்டரோகிகள் எல்லோரும் ஸ்வஸ்த்தமடைந்ததாக அநுபவத்திற் கண்டறிந்ததாக ஸ்ரீஸோமதேவன் என்னும் ஸித்தர் கூறியிருக்கிறார். (3) இரண்டு நிஷ்கப்பிரமாணம் சுத்தகந்தகத்தைச் சிறிது எண்ணெயோடு பருகவும்; பிறகு நாயுருவிச்சாறு, எண்ணெய் மிளகுப்பொடி இவற்றைக் கூட்டி தேஹ முழுதும் தேய்த்துக் கொண்டு வெயிலில் நிற்கவும்; பிறகு மூன்றாவது யாமத்தில் மோரும் அன்னமுமாகச் சாப்பிடவும்; இரவில் சில நேரமும் பிறகு எழுந்திருந்து காலையில் சிறிது நேரமும் நெருப்புக்கு அருகில் இருந்துவிட்டு எருமைச்சாணத்தைக்கொண்டு தேஹத்தைத்

1. வல்லம் இரண்டு குஞ்ஜா பிரமாணம் (சுமார் 8 தானிய மணி நிறை).

2. ஆமதோஷம் குடலில் உணவு ஜீர்ணமாகாமையாலும் பழைய மலங்கள் அதிகம் சேர்ந்து விடுவதாலும், வேறு காரணங்களாலும் உண்டாகிற ஒருவித விஷம்.

3. நிஷ்கம் சாணம் என்னும் கூறப்படும் ஓர் அளவு, சுமார் 3 குன்றுமணியெடை.

தேய்த்துக் குளிர்ந்த நீரில் ஸ்நானஞ் செய்யவேண்டும் அதன் பிறகு நெய்யை உடம்பிற் பூசிக்கொண்டு தாங்கக்கூடிய உஷ்ண முள்ள ஜலத்தினால் மீண்டும் ஸ்நானம் செய்யவும். இந்தக் கிரமத்தில் சிகித்ஸைசெய்து கொண்டு வந்தால் வெகு நாட்பட்டதும் எளிதில் தீர்க்கக்கூடாமலுள்ளதுமான சிரங்கும் சொறியும் சீக்கிரத்தில் நீங்கிப் போகும். 35 42.

க ் தக தைலம். ஒரு நீண்ட துண்டுச் சீலையில் எருக்கம் பாலையும் கள்ளிப் பாலையும் தடவியுலர்த்தவும் இவ்விதம் ஏழு தடவை மேன்மேலும் தடவியுலர்த்த வேண்டும். பிறகு கந்தகத்தை வெண்ணெயிற் குழைத்து அவ்வஸ்திரத்தின் மேல் கனமாகப் பூசவும் அச்சீலையை வர்த்தியாகச் சுருட்டி குறட்டால் எடுத்துத் தீயிற்காட்டி யெரி ் கவும் அவ்விதம் எரியும் வர்த்தியை ஒரு பாத்திரத்திற்கு மேலே தலை கீழாகப் பிடி ் கவும் அதிலிருந்து வடிகிற தைலத்தை முற்கூறிய வியாதிகளில் முறைப்படி யுபயோகி ் கவும். 43 44.

சுத்த க ் தக கு ங ் ள். சுத்தமான கந்தகமானது குஷ்டம் அகால மரணம் கிழத்தனம் ஆகியவற்றைப் போ ் கும் ஜாடரா ் னி ய விருத்திசெய்யும் சுக்ரத்தையும் அதிகப்படுத்தும் வீர்யத்தில் அதிக உஷ்ணமானது.[1] 45.

## ை ரிகம்[2]

கரிகம் இர ் டு க. கரிகத்தில் பாஷாணகைரிகம் என்பது ஒன்று இரண்டாவது ஸ்வர்ண கைரி ம் என்பதாம். (1) அவற்றுள் கடினமானதாகவும் செம்புபோன்ற நிறமுள்ளதாகவும் இருப்பது பாஷாணகைரி ம் எனப்படுகிறது. (2) ஸ்வர்ணகைரிகமோ அதிக சிவப்பாகவும் ஸ்நிக்த்தமாகவும் மழமழப்பாகவும் இருக்கும். $46\frac{1}{2}$.

கரிகங்களின் குணங்கள். (1) ்வர்ண கரிகமானது இனிப்பும் துவர்ப்புமான சுவையுடையதாகவும் ஸ்நிக்த்தமாகவும் வீர்யத்தில் சீதமாகவும் இருக்கும். நேத்திரத்திற்கு ஹிதமானது. இரத்த பித்தம் விக்கல் வாந்தி விஷதோஷம் இரத்த தோஷம் இவைகளைத் தீர்க்கும். (2) பாஷாண கரிகம் என்கிற மற்றொரு வகையான சிலை ஸ்வர்ணகைரிகத்தினும் குணத்திற் குறைந்தது. 47 48.

---

. த்த கந்த த் த அர்ஜ கூாரத்தினுள் (மருதமரப்பட் ட முதலிய த எரித்தெடுக்கும் ஒருவித ாரமான உப்பு) ை த்து, ஒரு ஸம்புடத்தி ் எரிக்கவும்; பிறகு அக் ் தகத் தக் கீழாநெ ல்லிச்சாற்றால் மூ ் று யாமமே ரம் ஆட்டி, போத புடத்தில் ( ் 0 து அத்தியாயம் பார்க்க) எரிக்க ன்கு ப ் ் ுது . வாத மஞ்ஜரீ.

2. கைரிகம் காவிபோன்று கா ப்படுகிற ஒருவித சிலையுருமான தாதுப்பொருள். (Bolu rmen rubra என்று ஆங்கிலத்தில் ழங்கப்படும்.)

(1) கைரிகத்தைப் பசுவின்பாலில் சில தடவை பாவனை செய்ய அது சுத்தியடையும். (2) கைரிகதாது சுயம் ஸத்துவ ரூபமானது என்று நந்தீச்வரனால் கூறப் படுகிறது. வேறு சில ஸித்தர்கள் இதை க்ஷார ளிலும், அம்லவர்க்கத்திலும் பாவனை செய்து பக்குவம் பண்ணி னல் இதிலிருந்து ஸத்துவம் வெளியாகுமென்கிறார்கள். (3) கைரிக ஸத்துவம் ஸௌதேந்த்ர மென்கிற இரஸத்துடன் நன்கு கூடுமியல் புடையது. அப்படிக் கூடுவதால் அது குணத்தில் மிகச் சிறப்படை கிறது. 49 50.

கைரிக சுத்தி, கைரிகஸத்து வம்.

## காஸீஸம அன்னபேதி.

(1) காஸஸம் என்கிற அன்னபேதி வாலு ா காஸீஸம் என் றும் புஷ்ப ாஸீஸம என்றும் இருவகைப்படும். இரண்டு காஸீஸங்களும் பொது ாக க்ஷாரம் அம் லம் அகிற் கட்டையின் புகை இவற்றைப் போன்ற நிறமுள்ளனவா யிருக்கும். (2) ச்வித்ரம் என்னும் வெண்குஷ்டத்தைப் போக்கும். மயிர்களைக் கருமையாக்கும். புஷ்ப காஸீஸம் மற்றொன்றைவிட மிகப் பிரசஸ்தமானது. சிறிது உஷ்ண வீர்யமுள்ளது. துவர்ப்பும் அம்லமும் கலந்த சுவையுடையது. நேத்திரத்திற்கு மிகவும் ஹிதமானது. விஷதோஷம் வாதரோகங் கள் ஸிலேஷ்ம ரோக கள் இவற்றைப் பரிஹரிக்கும். வெண்குஷ் டம் க்ஷயம் இவற்றையும் தீர்க்கும். கேசரஞ்ஜநகுணமும் இதற் கு டு.[1] 51 53.

அன்ன பேதி யும் அதன் குணங்களும்.

(1) அன்னபேதியானது கையாந்தகரைச் சாற்றில் ஒரு முறை பாவனை செய்யப்படுவதால் சுத்தமாகும். (2) பித்தவர்க்கங்களில் பாவனை செய்தாலும் இது சுத்தியடைகிறது. (3) பிறகு கூறப் படும் துவரி யென்னும் தாதுப் பொருளிலிருந்து ஸத்துவமெடுப்பது போலவே இதிலிருந்தும ஸத் துவமெடுக்கலாம். 54.

காஸீஸ சுத்தி யும் காஸீஸ ஸத்து மும்.

---

1. "காஸீஸம் என்னும் அ னபேதி த து ஸீஸம், புஷ்ப ஸீஸம என்று இருவகைப்படும். (வாலுகா காஸீஸமே தாது ாஸீ ஸம் எ றும், ப ஸ ஸீ என்றும் கூறப்படுகிறது.) இவற் றுள் தாது காஸீஸம் இலேப்பசுமையும் சிவப்பும் கல த நிறமு ட யது; ஒருவாறு ம அல்லது பஸ்மம் போ றது. புஷ்பகாஸீ ஸமோ ஒருவாறு மஞ்சள் நிறமுள்ளது. வீர்யத்தில் உஷ் மானது: புளிப்பு, கப்பு துவர்ப்பு இச்சுவைகள் கலந்தது. வாத கப தோஷங்களைத் தணிக்கும்; கேசங்களுக்கு ஹிதமானது. ே த்திர தோஷஹரம். சொறி விஷதோஷம் இவற்றை நீக்கும்; மூத்ர ருச்சிரம் அச்மரீ, வெ குஷ்டம் இவைகளையும் தீர்க்கும்.' இரத் மாலா.

காஸீஸம் தாது ாஸீஸம், புஷ்ப காஸீ ம் என்று அ பேதி மூன்று விதம் ' என்று பஷ ய ரத் ாவலி.

அன்ன பேதியை கந்தகம் கூட்டி பஸ்மம் செய்யவும். அவ்விதமே அன்னபேதியைக் கூட்டி காந்தலோஹத்தை பஸ்மம் செய்யவும். இவ்விரண்டையும் ஸமபாகமாகச்சேர்த்து த்ரிபலை வாய்விடங்கம் இவற்றின் சூர்ணத்தையும் ஸமபாகமாகக் கலந்து அதில் சாணமெடை யெடுத்து, நெய்யும் தேனும் சிறிது ஏற்றக்குறைவான அளவில் கூட்டி விடியற் காலையில் உட்கொண்டு வரவும்; இது வெண்குஷ்டம் பாண்டு க்ஷயம் குல்மம் ப்லீஹரோகம் சூலை மூலம் இவற்றைப் போக்குவதிற் சிறந்தது. மேலும் இரஸாயநமுறைப்படி ஒரு வருஷமளவும் இதை யுபயோகித்து வருவதால் இது ஆமதோஷத்தைப் போக்கும். அக்னிமாந்தியத்தைப் போக்கி ஜாடராக்னியை விருத்தி செய்யும். திரை நரைகளையும் போக்கும். 55. 58.

காலவிஸ ரஸாயநம்.

## துவரி[1].

ஸௌராஷ்ட்ர தேசத்திலுண்டாகிற கல்லிலிருந்து வரும் ஒரு வித மண் துவரி எனப்படுகிறது; வஸ்திரங்களிற் பூசுவதால் இது அவற்றிற்கு மஞ்ஜிஷ்டியைப் போன்று ஒருவகைச் சாயம் கொடுக்கும். அதற்குபடிகி[2] என்று பெயர். இதில் மற்றொருவகைக்கு புல்லி ர[3] எனப்பெயர். (1) அவற்றுள் படிகி யென்பது சிறிதுபசுமை நிறமானது. குருவாகவும் ஸ்நிக்த்தமாகவும் இருக்கும். விஷஹரம் விரணஹரம் குஷ்டஹரம் என்னும் குணங்களும் உண்டு. இதற்கு பீதிகா என்றும் பெயர். (2) புலலதுவரி[4] என்கிற மற்றொருவகையான துவரியானது இலேசாகவும் வெண்மையாகவும் ஸ்நிக்த்தமாகவும் அம்லரஸமுள்ளதாகவும் இருக்கும். அதை அயத்தின்மேல் பூசித் தேய்க்கும் முறையால் அயம் செம்பாக மாறும். 59 62.

துவரியின் பேதங்களும் இலக்ஷணங்களும்.

துவரிக்கு துவர்ப்பு சிறிது கார்ப்பு புளிப்பு ஆகிய சுவைகளும், கண்ட்யம்[5] கேச்யம்[6] விரணஹரம் விஷஹரம், ச்வித்ரஹரம்[7] த்ரிதோஷஹரம்[8] என்னும் குணங்களும் உண்டு. நேத்திரத்திற்கு ஹிதமானது. பாரதம் அல்லது இரஸத்தை ஜாரணம் செய்யவும்[9] உதவும். 63.

துவரியின் பொதுக் குணங்கள்

1. இதுவே ஸௌராஷ்ட்ரமருத்திகையெனப்படுகிறது ( ங்க்ஷி).
2. இது ஸ்ப்படிகி எ றும, பீதி ர என்றுங் கூட கூறப்படுகிறது. (படிக் ாம்).
3. இது புல்லது ரீ என்றுங் கூறப்படும்.
4. புல்லதுவரியை அலுமினியம் என்று கூறுவர்.
5. கண்ட்யம் கண்டத்திற்கு (தொண்டைக்கு) ஹிதமானது.
6. கே ச்யம் மயிர் ளை 'ளர்க்கவும் செம் மப்படுத்தவும் உபயோமானது.
7. ச்வித்ரஹரம் வெண்குஷ்டத் தப் போக்குவது.
8. த்ரிதோஷஹரம் ாத-பித்த கப ளைத் தணிப்பது.
9. ஜார ம் என்ப தப்பற்றி 8- அத்தியாயம் பார் க.

(1) துவரியை காஞ்ஜிக மென்னும் காடியில் மூன்று தினங்கள் போட்டு வைத்தால் அது சுத்தியடையும். (2) அதை க்ஷாரங்களையும் அம்லங்களையும் விட்டு அரைத்து அக்னியில் ஊதினல் ஸத்துவத்தை வெளியிடும். (3) துவரியை நூறுமுறை பசுவின் பித்தத்தில் பாவனை செய்து பிறகு அதை நெருப்பிலிட்டு ஊதினல் ஸத்துவம் வெளிப்படும். 64 65.

துவரியின் சுத்தியும் ஸத்வமும்.

## தாளகம.

தாளகம் என்னும் தாதுப்பொருள்[1] பத்ரதாளகம என்றும் பிண்டதாளகம என்றும் இருவகைப்படும். (1) பொன்னிறமாகவும் கனத்தில் குருத்தன்மையதாகவும் ஸ்நிக்த்தமாகவும் மெல்லிய தளங்களைப் பெற்றதாகவும் பளபளப்பாகவுமுள்ளது பத்ரதாளகம் எனக் கூறப்படும். இதில் அதிக தளங்களையுடைய தாளகம் இரஸாயந குணமுள்ளதாம். (2) தளங்களில்லாததும் பிண்டம் போன்றிருப்பதும் பாரமுள்ளதுமான தாளகம் பிண்டதாளகம் எனப்படுகிறது. அது மிகச் சொற்ப ஸத்துவமுள்ளது; குணத்திற் குன்றியது. ஹரிதாளகத்திற்கு ஸ்த்ரீபுஷ்பஹாரம்[2] என்னும் குணமும் உண்டு.

தாளகம்.

சிலேஷ்மஹாரம் இரக்ததோஷஹாரம் விஷஹாரம் வாததோஷஹாரம் பூததோஷஹாரம் ஸ்நிக்த்தம் உஷ்ணவீர்யம் கடுரஸம், தீபநம் குஷ்டஹாரம் என்கிற குணங்களையுடையது. சுத்தி செய்யப்படாத தாளகமானது ஆயுளைப் போக்கும்; கபம் வாதம், மேஹம் இவற்றை விருத்தி செய்யும்; மேலும் தேஹ அழற்சி கொப்புளங்கள் இவற்றை யுண்டுபண்ணும்; அவயவங்களைச் சுருங்கச்செய்யும்; ஆகவே தாளகத்தைச் சுத்தி செய்த பிறகே உபயோகிக்கவேண்டும். 66 70.

தாளகத்தின் பொதுவான குணங்கள்.

அசுத்த தாளகத்தின் பொது குணங்கள்

(1) சாம்பற் பூசணிக்காயின் சாற்றிலாவது (2) திலக்ஷாரத்தின் தண்ணீரிலாவது, (3) சுண்ணாம்புக் கரைத்த ஜலத்திலாவது டோலாயந்திரத்திற் கட்டி தொங்கவிட்டால் தாளகம் சுத்தியடையும். (4) தாளகத்தைச் சிறு சிறு துண்டுகளாக உடைத்து அதற்குப் பத்தில் ஒரு பங்கு வெண்காரம் கூட்டி எலுமிச்சம்பழச் சாற்றாலும் பிறகு காஞ்ஜிகமென்னும் காடியினாலும் அத்துண்டுகளைக் கழுவி நான்கு மடிப்பாகச்செய்த வஸ்திரத்திற் கட்டி டோலாயந்திரத்தில் ஒரு நாள்முடியவும் சமைக்கவேண்டும். (5) சோற்று நீரில் சுண்ணாம்பைக் கரைத்து அதிலாவது (6) கூஷ்மாண்டச் சாற்றிலாவது ஒரு நாள்

தாளக சுத்தி முறைகள்.

---

1. தாளகம் இதற்கு ஹரிதாளம் என்று பெயருண்டு.
2. ஸ்த்ரீபுஷ்பஹாரம் ஸ்த்ரீகளுடைய மாதவிடாயைப் போக்குங் குணம்.
3. டோலாயந்திரம் இதைப்பற்றி 9 ம் அத்தியாயம் பார்க்க.

டோலா யந்திரத்தில் பக்குவம் செய்யலாம். (7) இலவம் பட்டைக் கஷாயத்தின் ஆவியிலாவது அவ்விதமே பக்குவம் செய்ய தாளகம் சுத்தியடையும். 71 73.

பலாசவேரைக் கஷாயமிட்டு அதைத் தேன்போல மிகக் குழம்பாகக் காய்ச்சி அக்கஷாயத்தில் சுத்திசெய்த தாளகத்தை மூன்று முறை பாவனை[1] செய்யவும். பிறகு அதை யெடுத்து எருமையின் சிறுநீர்விட்டு ஆட்டி யெடுத்து பத்து வறட்டிகளைக் கொண்டு புடமிடவும். அதை மீண்டும் முன்போலவே அரைத்துப் புடமிடவேண்டும். இவ்விதம் பன்னிரண்டு முறை புடம்போட சுத்தமான பஸ்மமாகும். பிறகு அதை முறைப்படி ஔஷதமா யுபயோகிக்கலாம்[2]. 74 ௭௫

தாள பஸ்ம மு ற

(1) சுத்திசெய்த தாளகத்தை ஒரு பாத்திரத்தில் வைத்து அதிற் சிறிதளவு கொள்ளு கஷாயத்தையும் புளித்த மோரையும் எருமை நெய்யையும் தேனையும் சேர்க்கவும். பிறகு நடுவில் சிறு துவாரம் விட்ட ஓர் அகலால் அப்பாத்திரத்தின் வாயை மூடி சீலை செய்யவும். அடியில் பிறகு தீயிட்டு, அத்தீயைக் கிரமமாக அதிகப்படுத்த வேண்டும். அகலின் துவாரத்தைச் சாணத்தினால் ஒரு யாம காலம் மூடி வைத்திருந்து பிறகு அந்த துவாரத்தைத் திறந்து பார்க்க அவ்வழியாக வெண்மையான புகை கிளம்புவதைப் பார்க்கலாம். பிறகு பாத்திரத்தை இறக்கி பாத்திரத்திலுள்ளது நன்ருகக் குளிர்ந்த பிறகு, அதிலுள்ள ஸத்துவத்தை யெடுத்துக் கொள்ளவும். இவ்விதமே ஸகலமான ஏனைய பாஷாணங்களி

தாளக ஸத்து முறைகள்.

1. பாவனை சரக்குகளுக்குச் சுறுக்கேற்றும் முறை.

2. வேறு சில தாளக பஸ்மமுறை : ( ) அரசம்பட்டை யைப் பொடி செய்து ெ கு மிருது ாக வஸ்திர கா ம் செய்தெடுத்து, ஒரு சிறு சட்டியி ஓர் அங்குலம் கனமாக அச்சூர்ணத் தச் சேர்த்து அத மீது த்தி செய்த தாள த்தை ை த்து, அத மே சட்டியி கழுத்து வ ரயில் அச்சூர் த்தைப் பரப்பி ஒரு மட கினல் சட்டி ய மூடவும். அதை அடுப்பில் வைத்து, சட்டியிலுள்ள சூர்ணத்திற் பாதி வேகும் வரையில் எரித்து அப்பால் சட்டியை அப்புறப் படுத்தவும். எல்லாம் ன்ருக ஆறிய பிறகு, உள்ளே ப மமா யுள்ள தாளகத்தை யெடுத்து கொள்ளவும் : (நா ஜ ந தநதி .) (2) 'சுத்தமான பத்ர தா கத்தை ெ ள்ளைச் சாற டச் சாற்றால் ஒரு ா அ ரத்து, உருட்டி யுலர்த்தவும். அல்லது சக் ரம்போல் செய்து உலர்த்தவும். ஒரு சட்டியில் புநர்ந க்ஷாரத்தைப் பாதியளவு பரப்பி அதில் தாள த் த வத்து, அ த க்ஷாரத்தை மீண்டும் ழுத்துவரையிலும் பரப்பி, சட்டி ய அடுப்பின்மேல் ஏற்றி எரிக்கவும். இவ்விதம் நாள் விட்டு நாளா ஐந்து நாட்கள் எரித்தெடு வும். இவ்விதம் பக்குவம்செய்ய, தாள ம் பஸ்மமாகும். இதை உபயோகிக் கு அளவு ஒரு ராஜி க': பாவப்ர ாசம்.

விருந்தும்[1] ஸத்துவம் எடுக்கும் முறைகள் அநேகம் உண்டு. (2) ஒரு பலம் தாளகத்தை எருக்கம்பால் விட்டு ஒரு நாள் ஆட்டி பிறகு ஒரு பலம் நல்லெண்ணெய் கூட்டிக் கலக்கவும். பிறகு அதைத் திறந்த வெளியில் ஏழு யாமகாலம் நன்றாக எரிக்கவும். பிறகு தானே ஆறிய பிறகு பாத்திரத்தின் அடியில் உள்ள வெண்மையான ஸத்துவத்தை யெடுத்துக் கொள்ளவும். (3) ஆடு குதிரை இவற்றின் உமிழ்நீரையும் கந்தகத்தையும் தாளகத்துடன் சேர்த்து இரண்டு நாட்கள் விடாமுயற்சியாய் அரைக்கவும். பிறகு திராவணவர்க்கத்தைக்[2] கூட்டி மேலே மூன்று சீலைகள் செய்த காசிக்குப்பியில் அடைத்து அக்குப்பியை ஒரு பாத்திரத்தில் வைத்து குப்பியின் பாதிபாகம் வரையில் மணலை நிரப்பி பன்னிரண்டு யாமங்கள் தீயிட்டு எரிக்கவும். பிறகு பாத்திரத்தை இறக்கி ஆறியதும் குப்பியின் கழுத்தில் சேர்ந்துள்ள சுத்தமான ஸத்துவத்தைக் கிரஹித்துக் கொள்ளவும். (4) அரைப்பலம் தாளகத்தை திடமான வெள்ளைத்துணியில் கட்டி கந்தகத்தை அதன்மேல் மூன்று வரிசை தடவி யுலர்த்தி யெடுக்கவும். மூன்று பலம் தாம்ரத்தை உருக்கி, அதில் அத்தாளகப் பொட்டலத்தைப் போட்டு உடனே சாம்பலால் மூடிவிடவும். பிறகு தாம்ரத்திலுல் சூழ்ந்துகொள்ளப்பட்டதும், வெளுப்பாகவும் மிருதுவாகவும் உள்ள தாளகஸத்துவத்தைக் கிரஹிக்கவும். அது இரஸவேலைகளுக்கும் இரஸாயந முறைகளுக்கும் உபயோகமானது. 76 87.

### மநச்சிலை.

மநச்சிலையானது ச்யாமிகா கணவீரகா கண்டா என்று மூவகைப்படும். அவற்றின் தன்மை அடியில் பகுத்து விவரிக்கப்படுகிறது: (1) கறுப்பு சிவப்பு வெண்மை ஆகிய கலப்பு நிறங்கொண்டதாகவும் அதிக கனமாகவும் இருப்பது ச்யாமிகா எனப்படும். (2) வெண்மை நீங்கியதாகவும் பளபளப்பாகவும் செம்பு நிறமுடையதாகவும இருப்பது கணவீரகா. (3) எளிதிற் பொடியாகக் கூடியதாகவும் அதிக சிவப்பாகவும் அதிக கனமாகவும் இருப்பது கண்டா என்று கூறப்படும். இவற்றுள் முதலாவதினும் இரண்டாவது குணத்திற் சிறந்தது. அதினும் இறுதியிற் கூறியது அதிக குணமுள்ளது. அது அதிக த்துவமும் நிறைந்தது. 88 90.

மநச்சிலை மூன்று விதம்.

(1) மநச்சிலையானது சிரேஷ்டமான இரஸாயநச் சரக்கு. சுவையில் கைப்பும் கார்ப்பும் கலந்தது. வீர்யத்தில் உஷ்ணமானது; கபவாதங்களை ஹரிக்குங்குண

மநச்சிலையின் குண ள்.

. இதனுல் தா ம் பாஷாண மென்ற , ஆ வே சங் பாஷா ணுதிகளைப் போலவே அதை வெகு ஜாக்கிரதையா யுபயோகிக் வே டுமென்றும் அறி .

2. திரா வர் ம் பத்தாம் அத்தியாயம் பார் க.

3. இ த மனேசிலெ ன்று தமிழில் ழங்கு ர்.

முள்ளது · சுயம் ஸத்துவரூபமானது · பூததோஷம் விஷக் கோளாறு, அக்னிமாந்த்யம் சொறி காஸம் க்ஷயம் இவற்றைப் பரிஹரிக்கும். (2) சுத்தி செய்யாத மநச்சிலையானது அச்மரீ மூத்ரக்ருச்சிரம் அக்னிமாந்த்யம் மலபந்தம் ஆகியவற்றை யுண்டு பண்ணும் · சுத்த மநச்சிலையே ஸகல நோய்களையும் போக்க வல்லது. 91 92.

மநச்சிலையின் சுத்திமுறைகள்.

(1) அகத்தியிலைச் சாற்றிலாவது இஞ்சிச் சாற்றிலாவது ஏழுமுறை பாவனை செய்தால் மநச்சிலை நன்கு சுத்தமாகும். (2) தழுதாழை கரிசிலாங்கண்ணி செவ்வகத்தி இவற்றில் ஏதேனுமொன்றின் சாற்றை ஒரு கலத்திற் சேர்த்து அதில் டோலா யந்திர முறையில் மநச்சிலையை ஒரு யாம காலம் பக்குவம் செய்து, அவ்விதமே ஆட்டு மூத்திரத்திலும் பக்குவம் செய்து அரிசி கழுவிய நீரால் பிறகு அதைக் கழுவியெடுக்கவும். அதப் பிறகு எல்லா ரோகங்களிலும் உபயோகிக்கலாம். 93 94.

மநச்சிலாஸத்துபாத முறைகள்.

(1) சுத்தி செய்த மநச்சிலையை எட்டுப்பங்கு இரும்புச் சிட்டத்துடனும், வெல்லம் மஹிஷாக்ஷி நெய் இவற்றோடு கூட்டி கோஷ்டயந்திரத்தில்[1] அடைத்து, கடுந்தீயிட்டு ஊத அதிலிருந்து ஸத்துவம் வெளியாகும் (2) நாகஸத்துவம்[2] வெங்காரம் மருக்காரையென்னும் மதநபலம் இவற்றைப் பாகலிலைச் சாற்றால் அரைத்து அக்கல்கத்தை மூஷையினுட்புறத்திற் பூசிவிடவும். க்ஷாரங்களாலும் அம்லவர்க்கத்தினாலும் அ ரக்கப்பெற்ற மநச்சிலையை அந்தமூஷையில் வைத்து கரியிட்டு இரண்டு நாழிகை ஊதவும் · அதனால் மநச்சிலையிலிருந்து ஸத்துவம் வெளியாகும் 95 97.

## அஞ்ஜனங்கள்.

ந்துவித அஞ்ஜனங்கள்.

ஸௌவீராஞ்ஜநம் இரஸாஞ்ஜநம் ஸ்ரோதோஞ்ஜநம் புஷ்பாஞ்ஜநம் நீலாஞ்ஜநம் ஆகியவை அஞ்ஜநவகுப்பைச் சேர்ந்த சரக்குகளாம். இவற்றின் தன்மைகள் இதனடியில் விவரிக்கப்படுகின்றன. 98 98½.

ஸௌவீராஞ்நம்.

இவற்றுள் ஸௌவீராஞ்ஜநம் என்பது தூமநிறமாயிருக்கும் · சீத வீர்யமானது · இரக்தபித்தத்தைப் போக்கும்; விஷக்கோளாறு விக்கல் நேத்திர

1. கோஷ்டயந்திரம் ·ம் அத்தியாயம் பார்க்க.

2. நாகஸத்துவம் பூநாகஸத்துவம் · நாகப் பூச்சியிலிருந்து எடுக்கப்படும் சத்து.

3. ஸுவீரா' என்னும் நதியில் உண்டாவதால் ஸௌவீரம் என்று இதற்குப் பெயர் வந்ததாம். ஸிந்து நதிக் கரையிலுள்ள ஸௌவீரமென்னும் பர்வதப்பிராந்தத்தில் உண்டாகிறது. தமிழில் கசச் சிலர் இது அப்புச் என்றும், ஆங்கிலத்தில் Sulphide of Lead என்றும் கூறுவர்

ரோகம் இவற்றைத்தீர்க்கும்; விரணசோதநம்[1], விரண ரோபணம்[2] என்னும் குணங்களும் இதற்குண்டு. 99½.

இராஸாஞ்ஜநம் நிறத்தில் ஒருவாறு மஞ்சளா யிருக்கும்· விஷக்கோளாறு, முக ரோகங்கள் இவற்றைத் தீர்க்கும்· ச்வாஸரோகம் வீக்கம் வாதரோகங்கள் இரக்த பித்தம் ஆகியவற்றையும் போக்க வல்லது· தேஹ நிறத்தையும் செம்மைப் படுத்தும். 100½.

இராஸாஞ் ம்.

ஸரோதோஞ்ஜ ம[4] என்பது சீத வீர்யம்· ஸ்நிக்த்த குணம்· மேலே கபில நிறமானது· சுவையில் ஒருவாறு இனிப்பானது; லேகநம்[5] நேத்ரியம்[6] என்னும் குணங்களுள்ளது· விக்கல் விஷக்கோளாறு வாந்தி கபதோஷம் இரக்தபித்தம் ஆகிய நோய்களைத் தீர்க்கக் கூடியது. மேலும் பார்ப்பதற்குப் புற்றைப் போலவும், உடைத்தால்

ஸ்ரோதோ ஞ்ஜ ம்.

1. விரணசோத ம் விரணங்களைச் சுத்த செய்யுந் தன் ம.

2. விர ரோப ம் விரணங்களை ஆற்றுந் தன்மை.

3. மரமஞ்சளைக் கஷாயமிட்டு, அது பாகு பதத்திற்கு ந்தால், அதை இராஸாஞ்ஜநம் என்று கூறுவர். "மரமஞ்சளை ன்று க் காய்ச்சிக் கஷாயமிடவும்; அதற்குச் சமமாகப் பால் சேர்த்து, நன்கு குழம்பாக வரும் வரையில் காய்ச்சி யெடுக்கவும். இது இரஸா ந எனப் படுகிறது. நேத்திரத்திற்கு வெகு சிறந்த ஔஷதம்' என்பது இதன் முறை. 'பெர்பெரிப்பட் டயின் (Berberis As atica) ஷாயத்தால் செய்யப்படுவது இரஸாஞ்ஜ ம் என்று பி. ஸி. ராய். து க்ஷய அல்லது து க்ஷயமை ம எனப்படுவதும் ஸ்ரோதோஞ் ம் என்பதும் இந்த இரஸாஞ்ஜ ந்தான் என்றும் இது ஒரு வ கயான கறுத்த இயற் கக் கல்லுருவமான சர கென்றும் ஸுச்ருதர். (ஸு. ஸு. 38.அ.)

4. 'ஸ்ரோதோஞ்ஜ ம் ெ ருப்பு நிறம்· யமுனையாறு உண்டாகுமிடத்தில் உற்பத்தியாவது; இதுவும் ஒருவகை சுர்மா என்னும் ம வகையைச் சேர்ந்தது· ஆனால் கறுப்புச் சுர்மா வினும் குணத்திற் சிற ந்தது என்ற பி. ஸி. ராய். ஸ்ரோதோஞ்ஜநம் கறுப்பு; ஸௌவீராஞ்ஜநம் ெ ண்மை. இவ்விரண்டுங் குணத்திற் சமமானவை ; ஆகிலும் ஸௌவீராஞ்ஜநத்தினும் ஸ்ரோதோஞ் நம் சிற ந்தது' என்று பாவப்ர ாசம்.

5. லேக ம் ப முதலி தைக் கல்லி ெ ளிப்படுத்துவது. அல்லது தோஷம் சேர்ந்துள்ள விடத்திலிரு து அ தக் கிளப்பி ெ ளிப்படுத்துவது.

6. ே த்ரி ம் ே த்திர தோஷத் தப் போக்கு து· ணுக்கு ஹிதமானது.

உட்புறம் கரு நெய்தல் நிறமாக ும் தேய்த்தால் காவியின் நிறமாக வும் இருப்பதை ஸ்ரோதோஞ்ஜநம் என்றறிக.[1] 101 102.

புஷ்பாஞ்ஜநம். நிறத்தில் வெளுப்பா யிரு ்பது புஷ்பாஞ்ஜநம.[2] அது ஸ்நிக் தத் தன்மையும் சீத வீர்யமும் உடையது· பெரும் பாலும் எல்லா நேத்திரரோகங்களையும் தீர்க்கும்· தீராத கடும் விக்கலேயும் தீர்க்க வல்லது· விஷக்கோளாறு ஜ்வரம் ஆகிய நோய்களேயும் பரிஹரிக்கும். 103.

நீலாஞ்ஜநம். நீலாஞ்ஜ ம் என்பது கனமும் குருகுணமும் ஸ்நிக்த்தத் தன்மையும் உடையது· நேத்ரியம் த்ரிதோஷ ஹரம்[4] இரஸாயநம் என்னும் குணங்களேப் பெற் றது; ஸ்வர்ணத்தை பஸ்மம் செய்யக் கூடியது· அயத்தை மெதுப் படுத்தும் தன்மையது. 104.

அஞ்ஜநங்களின் சுத்தி. (1) அஞ்ஜநங்கள் எல்லாம் கைபாந்தகரைச் சாற்றினல் சுத்த மாகும். (2) ஸெளர்யாவத்தாதி வர்க்கத்திற்[5] கூறுகிற சரக்குகளின் சாற்றினல் இரஸாஞ்ஜ ம சுத்தியடையும். (1) மநச்சிலேயிலிருந்து ஸத்துவம் எடுக்கப்படும் விதமாகவே அஞ்ஜநங்களிலிருந்தும் ஸத்துவம் கிர ஹிக்கலாம். (2) இராஜாவார்த்தத்திலிருந்து கிரஹிப்பதுபோலவே

புஞ்ஜநங்களிலிருந்து ஸத்துவமெடுத்தல். ஸரோதோஞ்ஜநத்திலிருந்தும ஸத்துவமெடுக்க லாம். (3) பசுவின் சாணம் பசுவின் மோர் கோமூத்திரம் இவைகளிலும் நெய் தேன் கொழுப்பு ஆகியவைகளிலும் அநேகமுறை

ஸ்ரோதோஞ்ஜத்திற்கு இரஸ ப த கு ம். ஸ்ரோதஞ்ஜநத்தைப் பாவனை செய்தெடுத்தால் பிறகு அவ்வஞ்ஜநம் பாதரஸத்தை எளிதிற் கட்டு வதற்கான சக்தியைப்பெறுகின்றது. 105 108.

---

1. பிறகு 106 வது ச்லோகம் ஸ்ரோதோஞ்ஜ த் தப் பற்றி தா யால் அதன் மொழி பெயர்ப்பும் இ ே யே சேர்த்து எழுதப் பட்டது. அதை 102-வது ச்லோகமா இங்கே எடுத்து ெ ாண்டோம்.

2. 'புஷ்பாஞ்ஜ ம் ஒரு செயற்கையான அஞ்ஜ ப் பொருள்' எ ் று சிலர். இது ஒரு ெ ண் மயான சு ் ம்' என்று ராய் பித்தளே ச் சுண்ணம்' என்று வில்ஸன்.

3. நீலாஞ்ஜநத் த Antimony என் சிலரும் Sulph de of Iron என்று சிலரும் கூறுகிறார்கள். நீலாஞ்ஜ த்திற்குக் கூறப் படு கிற அயத்தை மிருதுவாக்கு ் கு ம் முதலிய தக் ெ ா ் டு பிந் திய வஸ்து ா வே இருக்கவேண்டும்

4. ஸந்நிபாதஹரம் என்றும் வழங்கப்படும்.

5. 'குஷ்டசுத்திமு றயி ' ஸெளர்யாவர்த்தாதி வர் ் ம் கூறப் படுகிறது.

6. இராஜா ர்த்தம் ஸாதார ர ங் ளு ் குப் பிறகு கூறப்படும் ஒரு சர ் கு.

## குஷடம.[1]

ஙகுஷ்டமு அதன் பேத ஞம்.

(1) இமயமலையின் அடிவாரத்திலும் சிகர களிலும் க குஷ்டம் என்பது உண்டாகிறது. அது இருவ கைப்படும். அவற்றுள் ஒன்று நளி எனப்ப டும். மற்ருென்று ரேணு ம் என்று கூறப்படும். அவற்றுள் முதலாவது மஞ்சள் வர்ணமானது. கன மானது. ஸ்நிக்த்தமாகவும் இருக்கும். இது சிறந்த க குஷ்டம். ரேணுகமென்பது கருமஞ்சள் நிறமாகவும் இலேசாக ும் ஸத்துவ மற்றதாகவும் இருக்கும். இது சிறந்ததல்ல. (2)கருமஞ்சள் நிறமான கங்குஷ்டம் புதிதாகப் பிறந்த யானைக்குட்டியின் மலமென்றும் அது ரேசந குணமுடையதென்றும் சிலர் கூறுகிருர்கள். (3) வேறு சிலர் உயர்ஜாதிக்குதிரையின் பீ நாளத்திலிருந்து கங்குஷ்டமென்னும் திரவ்யம் எடுக்கப்படுவதாகக் கருதுகிருர்கள். அது வெண்பசுமை நிறமென்றும் அதிக விரேசநகுணமு டய தென்றும் கூறுகிருர்கள். மேலும் இரஸௌஷதமுறைகளி லும் இர ாயநமுறையிலும் இது சிறந்தது. அதுவே ஸத் துவ மற்றிருந்தால் பலவித கோ ாறுகளை யுண்டுப ணும் 109 112½.

க குஷ்ட கு ங ள்.

கங்குஷ்டமானது கைப்பும் கார்ப்பும் கலந்த சுவையுடையது. வீர்யத்தில் உஷ்ணமானது. அதிக ரேசநகுண முள்ளது. விரணங்களை ஆற்றும். உதாவர்த்தம் சூலரோகம் அர்சஸ் என்கிற மூலம் குல்மம் ப்லீ ஹோதரம் இவற்றைப் பரிஹரிக்கும். 113.

ஙகுஷ்ட சுத்தி முதலியது.

(1) கங்குஷ்டத்தை மூன்றுமுறை சுக்குக்கஷாயத்தில் பாவனை செய்தெடுத்தால் அது சுத்தமாகும். (2) கங்குஷ்டம் சுயம் த்து வமயமாயிருப்பதுபற்றி இதிலிருந்து ஸத்து மெ டுக்குமுறை யெதுவும் கூறப்படவில்லை. (3) க குஷ டத்தை யவப்பிரமாணமாக கிராஹி என்னும் குணமுள்ள அநுபான கனோடு விரேசநத்திற் ாக உட்கொ ாள்

. இமயமலையின் அடி ாத்திலுண்டாகு ஹரிதாளம் போ ற சரக்குக்கு 'க குஷ்டம்' என்று பெயர் எ று இரஸஸாரஸங்கிரஹம். பா தப்பிரா தத்திலு டாகும் ஒருவித ம ரு மான சரக்கென்று சிலர். வெ ளியைப் போ றதாகவும், பொ போ றதா வும் குஷ்டம் இருவ கப்படும்.' என்று இராஜநிக டு. இ த என்றும் அ ட என்றும் குஷ்டம் இருவ கப்படும். இவற்றுள் முதலிற்கூறியது சிரேஷ்டம் என்று பா ப்ரகாசம். அதிக ே ச குணமுள்ள ஒருவித மருத்தி யே குஷ்ட எ று வி ஸ .

2. ரேச ம் குடல் முதலிய தக் ல்லித் திரவ களைச் ரப்பித் ம த்தைத் திர ாக்கி வெளிப்படுத்து கு ம்.

. யிற்றுப்போ அ லது திரவ ா ம ாதி ளை ட்டு தன் கு கிராஹி எ று பெயர்

ளலாம். விரேசநத்தை யுண்டுபண்ணி சிறிது நேரத்திலேயே ஆமதோஷத்தினாலான வயிற்று நோயைத் தணித்துப்போடும். (4) இதையே வெற்றிலைகளோடு கூட்டியுட்கொண்டால் இது அஸாத்யமான விரேசநமுண்டுபண்ணி சீக்கிரம் உயிரைப் போக்கிவிடும். (5) கருவேலம் வேரைக் கஷாயமிட்டு அதில் ஜீரகமும் வெண் ாரமும் ஸம அளவாகக் கூட்டி அடிக்கடியும் குடித்தால் க குஷ்டவிஷம் தீரும். (6) நாய்க் டுகுவேர் வாழைக்கிழங்கு. பேய்த் தும்மட்டி பேய்ச்சுரை தேவதாலீ முருங்கப் பட்டை, காட்டுக் கருணைக்கிழங்கு நீர்த்திப்பிலி மணத்தக்காளி இவற்றுள் ஏதேனுமொன்றின் சாற்றில் இலவணவர்க்கம் க்ஷாரவர்க்கம் அம்ல வர்க்கம் ஆகியவற்றை உசிதப்படி கூட்டி, அதில் மஹாரஸங்களையும் உபரஸங்களையும் பாவனை செய்ய அ வ சுத்தமாகும். பிறகு அவற்றைக் கடுந்தீயி விட்டு தினால் அவற்றிலிருந்து ஸத்துவம் வெளிப்படும். 114 119

குஷ்டத்தை ஔஷதமா யுபயோகித்தல் முதலியன.

இரஸோ பர ஸ ளின் பொதுவான சுத்தி முதலியது.

## ஸாதாரண ரஸங்கள்.

கம்பில்லம் [2] கௌரிபாஷாணம் நவஸாரம் கபர்தம் என்னும் சோழி அக்நிஜாரம் கிரிஸிந்தூரம் ஹிங்குளம் என்னும் லிங்கம் ம்ருத்தாரச்ருங்கம் என்னும் முராதாரசிங்கு என்று ஸாதாரணரஸம் எண்வகைப் படும். இவை இரஸஸித்தியை யுண்டுபண்ணுப வ யென்று நா ார்ஜுனன் முதலிய ஸித்தர்களால் கூறப்படுகின்றது. 120 121.

ஸாதார ரஸ ங் ர் எட்டு.

(1) கம்பில்லம் எனப்படுகிற சரக்கு ஒருவாறு செங்கற் பொடி போன்றதாய் சந்திரிகையென்னும் மினுமினுப்பு அடர்ந்ததாகக் காணப்படும். இது ஸௌராஷ்ட்ர தேசத்தில் உற்பத்தியாவது. அதிக ரேசநகுணமுள்ளது. (2) கம்பில்லமானது பித்தவிகாரங்கள் விர கள் வயிற்றுப்பொருமல் மலபந்தம் ஆகியவற்றைத் தீர்க்கும். சிலேஷ்ம ஸம்பந்தமான வயிற்றுவலி த்தல் கிருமிகள் குல்மரோகம்

ம்பில்லம்: அத ன் கு ள்.

1. இது மஹாரஸ உபரஸங் ளைப்பற்றியவிஷயங்களின் முடிவு ர. இவ்விஷயம் மூலக்கிர தத்தி கங்குஷ்ட சுத்திக்கு முன்பு அச்சிடப் பட்டிருப்பது முறை தவறாயிருப்பதா, இம்மொழிபெயர்ப்பில் அவ் விஷயம் உபரஸ ளி முடிவுரைக் கிரமத்தில் இறுதியில் எழுதப் பட்டது.

2. மூலத்தில் ம்பில்லச் சாபரோ ெ ளரீபாஷாணோ என்றிருக்கவே ண்டிய பாடம் கம்பில்லச் சபலோ ெ ளரீபாஷாணோ' என்று பி ழுபட சப ம் என்று அச்சிடப்பட்டிருக்கிறது. இதை ஊ றிப் பாரா ல் பி. ஸி. ராய் முதலானோர்கூட சபலம் என்ப த ஸாத ர ரஸத்திலு கூட்டிப் படித்து, விஷயம் ஒத்து ராமல் ஏதேதோ குறிப்பு எழுதுகிறார் ள்.

மூலரோகம் ஆமதோஷ ஸம்பந்தமான சோபை ஜ்வரம் ஆகியவற்றையும் பரிஹரிக்கும்· ரேசநகுணமும் விஷஹரத்தன்மையுமுடையது[1]. 122 123.

கௌரி பாஷாணம் அதன் பேதங்கள் - குணங்கள்.

(1) பீதம் விகடம ஹதசூர்ணம என்று கௌரிபாஷாணம் மூன்று விதம்· அவை முறையே உருவத்தில் படிகம் போன்றனவாகவும் சங்குபோன்று வெளுத்தவையாகவும் மஞ்சள் நிறமாகவும் இருக்கும். இவற்றுள் ஹதசூர்ணத்தினும் விகடமும் அதைவிட பீதமும் குணத்தில் மேலானது. (2) ஒரு பெரிய மூசையில் பாகற்காய்களைக் கீறி வைத்து அவற்றுள் கௌரிபாஷாணத்தைத் திணித்து ஒரு மட்பாண்டத்தில் ஸ்வேதயந்திர முறையில் பக்குவம்செய்ய அது சுத்தமாகும். (3)சுத்தமான இதை ஔஷதமாயுபயோகிக்கலாம். மேலும் தாளகத்திலிருந்து எடுக்கப்படுவது போல இதிலிருந்தும் வெண்மையான ஸத்துவம் கிரஹி· லாம். (4) கௌரிபாஷாணம் ஸ்நிக்த்தமானது· தோஷஹரம்· இரஸத் தக் கட்டுவதற்கும் இரஸத்தின் வீர்யத்தை விருத்தி செய்ய பும் உபயோகமானது[2] 124 126.

நவஸாரம்: அதன் குணங்கள்.

(2) மூங்கிற்குருத்து பீலுமரப்பட்டை இவை வேகும்போது அவற்றிலிருந்து உண்டாகும் க்ஷாரம் நவஸாரம் எனப்படுகிறது· இது சூலிகாலவணம என்றும் வழங்கப்படுவதுண்டு. (2) நவஸாரம் செங்கற்களை எரியும்போதும் அதிலிருந்து வெண்மையான உப்பா உற்பத்தியாகிறது. (3) இது பாரதமென்னும் இரஸத்தை ஜாரணம் செய்யவும் உலோஹங்களை திரவ மாக்கவும் பயோகமாகிறது· ஜடராக்னியை விருத்திசெய்யும்· குல்மம் ப்லீஹரோகம் வாய் வரட்சி இவற்றைத் தீர்க்கும்· புஜித்த மாம்ஸம் முதலியதை ஜீர்

1. கம்பில்லத்தை குங்குமம் என்று சிலர்; கு ·குமம் போன்ற ஒரு தாதுப்பொருள் கம்பில்ல என்று இரஸசாஸ்திரவல்லோரின் ருத்து. ஆங்கிலத்தில் கமெலா அல்லது கமலா (Kamala or Mallotus Philippinensis) எனப்படுகிற ஒரு சாயச்சரக்கை (இது ஒரு காட் ரத்துப் பழத்தினுள் சூழ்ந்திருக்கும் சிவந்த மாப்பொடி) கம்பில்லமென்று ருதி அது தாதுப் பொருட்களின் இனத்தில் எவ்வாறு படிக்கப்படு றதோ தெரியவில்லையென்று பி. ஸி. ராய் ஸ ·தேஹப்படுகிறார்.

2. 'கௌரிபாஷா வெண் ம பசு மயெ ·று இரு வை ப படு · அவற்றுள் சங்குபோ ·று வெளுப்பாயிருப்பது கௌ ளைப ப ஷ. ம அல்லது ப ஷ ம எனப்படும்· பசு மயானது மாதுளம்பழ நிறமாயிருக்கும் இவற்றுள் வெண்மையான பாஷா ம் செயற்கைச் சரக் ரகவும் பசுமையாயிருப்பது மலைப்பிரதேச ·ளில் இயற்கையில் உண்' ா தாகவும் கருதப்படுகிறது· இவ்விர ·டு · விஷகுணமுள்ளவை· இரஸௌஷத ·கள் செய்வதற்கு உபயோக மானவை.'' ஆயுர்வே தப்ரகாசம்.

ணம் செய்விக்கும்' ஸந்நிபாததோஷத்தையும் பரிஹரிக்கும். இதற்கு பிடம என்கிற குணமுமுண்டு[1]. 127 129.

(1) வராடம் என்னும் சோழி ஒருவாறு பசுமைநிறம் கலந்தது; பின்புறத்தில் கிரந்திபோன்ற பிதுக்கமுள்ளது; உருவத்தில் நீண்டும் ருண்டுமிருப்பது; இதை இரஸவைத்தியர் ள் சராசரம்[2] என்றும் வழங்கு வர். இதில் ஒன்றரை நிஷ்கம் எடையுள்ளது சிரேஷ்டமானது' ஒரு நிஷ்கமெடையுள்ளது குணத்தில் மத்திம மானது' முக்கால் நிஷ்கம் அல்லது அதற்குக் குறைந்த எடையுள்ள பராடம் குணத்திற் குன்றியதாம். (2) பரிணாமசூலை முதலிய யிற்று லி கிரஹணீ க்ஷயம் ஆகிய நோய்களைப் போக்க ல்லது. கடுரஸம் உஷ்ணவீர்யம் தீபநம் விருஷ்யம் நேத்ரியம் வாத கபஹரம் என்னும் குணங்களுள்ளது. (3) இரஸஜாரணத் திற்கு உபயோகமானது' பிடத்திரவ்யங்களில் சிரேஷ்' மானது. முற்கூறிய இலக்ஷணமுள்ளவைகளைத் தவிர்த்து மற்ற வராடங்கள் குருகுணமும் சிலேஷ்ம பித்தங்களை விருத்தி செய்யுந்தன்மையு முள்ளவை. (4) சோழிகளைக் காஞ்ஜிகமென்னும் காடியில் ஸ்வேத யந்திரமுறையில் ஒரு யாமம் பக்குவம் செய்ய சுத்திய டயும்.[4] 130 134.

---

1. ம என்றும் ) என்றும், நவ ர என்றும் பல ாரு க் கூறப்படுகிறது. 'மணிதரு டயவும் பன்றி ளு டயவும் மலங் ளு குள்ளும் இது கிட்டம்போல் கி டக்கும். இது க்ஷாரங்க ளைச் சேர் த சரக்கு. இது பொன்னைச் சுத்திசெய்வதிற் சிறந்தது. பிட திரவ்யங் ளில் உபயோகப்படு கு. க்ஷாரங்களுக்குள்ள கு ங்கள் இதற்குமு டு' என்று ஆயுர்வே தப்ரகாசம்.

2. சராசரம்_ த்தை மாதிரியான ஊர்வன ஜாதியைச் சேர்ந் தது சோழி. உள்ளே அடங்கிய ஜ் து சிக்கும் வரையில் சரமாகவும் (ஜங்கமமா வும்) அது நசித்தபின்பு அசரமாகவும் (ஸ்திரமான தாதுப் பொருளாகவும்) ஆ தால் சராசரம் எனப்படுகிறது.

3. பிடத்திரவியங்கள் 8-ம் அத்தியாயத்தில் விவரம் கா .

4. வராட', வராடிகா கபர்தம் சோழி, சோகி, க டி, பலகறை எ று இது பலவாறு கூறப்படும். "சோழி ய ரித்தணலில் இட்டு தினல் ன்று மலர் து பொரியும்' அப்போது அதை எடுத்து, ஆற வக்கவும்' அது ப டபஸ் எனப்படும். அதைப் பொடி யா கி ஔஷதமா யுபயோகிக்கவும்' ஆயுர்வே தப்ரகாசம். 'சிறிய பள்ளம் பூமியி தோ டி, அதில் பாதிய வு கு _மி யப் போட்டு, அதன் மே ஒரு கலசத்தில் பல ற ளை வத்து, கலசத்தை கு மூடி, அத மேல் வறட்டி ளை மூடி தீயிட்டால் அது ன்கு பஸ விடும். இரஸே திர ஸார ங்கிரஹம்.

(1) அக்நி நக்ரம் என்னும் ஒருவித நீர்வாழும் ஜந்துவின் [1] ஜராயுவானது கடலில் அலைகளால் க ரயில் ஒதுக்கப்பட்டு வெய்யிலின் தாபத்தினால் உலர்த்தப்பட்டுப் போனால் அது அ னிஜாரம் எனக் கருதப்படுகிறது. (2) அ னிஜாரமானது ஸந்நிபாதஹாரம் தநுர்வாதம் முதலிய ஆக்ஷேபகவாதங்களைத் தணிக்கும் இரஸத்திற்கு வீர்யத்தையும் தீபநசக்தியையும் விருத்தி செய்வதோடு அதை ஜாரணம் செய்யவும் உபயோகமானது. (3) அது டலிலுள்ள க்ஷார ர களில் ஊறி சுயமாகவே த்தியாய்விடுவதால் அதற்குப் பிரத்தியேகமாகச் சுத்தி முறை கூறப்படவில்லை. 135 136

அ னி ார மும் அதன் குணதி ளு.

(1) பெரிய மலைகளில் பாறைகளின் அடிப்புறச்சந்துகளில் சொற்ப அளவாகத் த கி யிருக்கும் இரஸமானது சுஷ்கித்துப்போய் சென்னிற கொள்ளும். அச்சரக்கு கிரிஸிந்தூரம் [4] எனப்படுகிறது. (2) அது ந்நிபாதஹாரம் மலத்தையுடைத்து வெளிப்படுத்தும் பேதியென்னும் குணமு டயது இரஸத்தைக் கட்டுவதற்குச் சிறந்த சரக்கு தேஹத்திற்கு வன்மை தருவது உலோஹ களைப் பக்குவட் செய்வதற்கு ஏற்றது நேத்திரத்திற்கு அனுகூலமானது. 137 138

கிரிஸி தூர மும் அதன் குணதி ளும்.

---

1. அக்நி ந ரம் என்பது முதலை யென்று சிலரால் பொருள் படுத்தப்பட்டிருக்கிறது. முதலை கடலில் வஸிப்பதில்லை யென்றும் அ நி ஜாரத்தின் உற்பத்தி முறை ஒருக்கால் பௌராணிக சரித்திரம் போன்றதாயிருக்கலா மென்றும் பி. ஸி. ராய் அபிப்பிராயப்படுகிறார். ஆனால் அக்நி ந என்பது கடலிலுள் , யிற்றில் பளபளப்புள்ள ஒருவித பெரிய மத்ஸிய ாதியென்று தெரிகிறது.

2. ஜராயு ர்ப்பத்தில் சிசு வப் போர்த்திரு கும் ஒருவ ெல்லிய புறணியாலான வசம்.

3. அக்னிஜாரம் ஒரு க நீர்வாழு பிராணியின் கருப் பயிலிரு து வெளியான ஜராயு வென்னும் சர்மமென்று இ கே கூறப்படுகிறது. அம்பர்' என்று வழங் ப்படும் சரக்கென்று சிலர். ஆனால் இரா நி டுவில் இதுஒரு கடலோரத்திலு டாகும்ஔஷதி(மூலிகை) எ று கூறப்படுகிறது. 'அக்னிஜாரம் பரிசித்தால் அழற்சிதரும்;பிசுபிசுப்புள்ளது கடலில் உற்பத்தியாகிறது ; இ தோர் ராயு வெ னும் பொருள் இதில் நிறத்தால் நான்குவ க களுண்டு அவற்றுள் சி தது சிறப்பானது; சு வயில் டு; வீர்யத்தில் உஷ்ணம் இலகுபாகம் பதோஷம் வாததே ஷம், ஸ நிபாத இவற் றப் பரிஹரிக்கும் சூலரோகத்தைத் தீர்க்கும் பித்தத் த விருத்திசெய்யும் மூலரோகத் திலும் உபயோ ானது.'

4. இது மலையில் உற்பத்தியாகும் ஸி தூரம் கிரிஸிந்தூரம் எ ப்படுகிறது ஒரு ாறு ஹி குலத்தைப் போன்றதாயிருக்கும்' எ று ஆயுர்வே தப்ரகாச .

(1) ஹிங்குள மென்னும் லிங்கமானது [1] ச'மா ம என்றும், சுக துண்டம் என்றும் ஹம்ஸபாகம் என்றும் மூவகைப்படும். அவற்றுள் முதலிற்கூறியது சொற்ப குணமுடையது. பவளம் போன்ற நிறமுடையதும் வெண்மைக் கோடுகளுடன் கூடியதுமான லிங்கம் ஹமஸபாகம்[2] எனப்படுகிறது. இது குணத்திற் சிறந்தது. சு து 'டம் என்னும் லிங்கம் குணத்தில் மத்திமமானது. (2) ஹிங்குளமானது த்ரிதோஷஹரம் தீபநம் மிகச்சிறந்த இரஸாயனம் ஸர்வரோகஹரம் வ்ருஷ்யம் என்னும் குணங்களையுடையது. ஜாரணம் என்கிற இரஸபாகமுறைக்கு வெகு உபயோகமானது. இதிலிருந்து எடுக்கப்படும் இரஸமானது பஸ்மமாக்கிய கந்தகத்திற்குச் சமானமான குணங்களுடை யது. (3) இஞ்சிஸ்வரஸத்திலாவது எலுமிச்சம்பழச்சாற்றிலாவது லிங்கத்தை பாவனைசெய்து உலர்த்தி யெடுக்கவும். இவ்விதமாக ஏழு முறை பாவனை செய்தால் ஹிங்குளம் தோஷங்கள் நீங்கியதாகும். (4) வெள்ளாட்டுப்பாலிலாவது, அம்லவர்க்கத்திலாவது லி'கத்தை பலமுறை பாவனைசெய்து வெய்யலிலும் நன்கு உலர்த்தி எடுக்க அது குங்குமம் போல் சிறந்த செந்நிறம் பெறும். (5) தண்ணீரடங்கிய ஒரு மட்பாண்டத்தில் பாதநாயந்திர முறைப்படி லிங்கத்திலிருந்து ஸத்துவம் இறக்கலாம்; அச்சத்துவந்தான் ஸூதம் அல்லது இர மெனப்படும்.[4] 39 144.

ஹிங்குளம் அல்லது லிங்கம்.

ஹிங்குள சுத்தி முதலியது.

லிங்-த்திலிரு 'து இரஸ மி ற 'குதல்.

1. ஹிங்குளம் எ 'பது தரதம், சூர்ணபாரதம் லி ' ம் ப ள ம ச்சிலை உலா 'தா லிங்கம், ஜாதி லிங்கம் என்றெல்லாம் கூறப்படும்.

2. இதுவே ஹ ஸபாத என்று ஆயுர்வேதப்ராகாசம் முதலி தில் மு 'கப்படும்

3. "சர்மாரம் என்னும் லிங்கம் வெ ' ம நிறமா து ' துண்டம் என்பது பச்சையும் மஞ்சளும் கலந்த நிறமுள்ளது; ஹம்ஸபாத ' என்பது ஜபாபுஷ்பம் போல் சிவந்தது. இதுதான் வெகு சிற 'தது" என்று ஆயுர்வேதப்ராகாசம்.

4. ஹிங் கப்பு, துவர்ப்பு கடு ஆகிய சுவை ள்க ந்தது. ே த்திரரோகஹரம்; கப பித்தஹரம். இருதயத்துடிப்பு குஷ்டம் ஜ்வரம், காமாலை, ப்லீஹரோகம், ஆம ாதம் ஆகிய ோளாறு ளையு ' தீர்க்கவல்லது. அ த்தம லிங் ம கண்ணை அழித்துப்போடும். தேஹத்தை இளைக்கச் செய்யும்; சோர்வையும் தலைச்சுற்றலையும் உ ' டுபண்ணும். மேஹரோகத்திற்கும் காரணமாம். ஆகையால் லி 'கத்தைச் சுத்தி செய்தே உபயோகிக்க வேண்டும். ஹி 'குளத்திலிருந்து இ ஸ இற ' த :-' டமருய 'திரத்தில் ஊர்த்வபாத மு றப்படி லிங் த்தை எரிக்கவும். முதலில் லி 'கத்தை எலுமிச்சம் பழச் சாற்றால் அல்லது வேப்பிலைச்சாற்றால் ஒரு யாம ாலம் அரைத்து, அதை மட்பா ' டத்தினுள் வை த்து ஊர்த்வபாதந யந்திரத்தில் இறக்கவும். அப்பொழுது மேலேயுள்ள பாண்டத்தி ' உட்புறத்தில் படிந்துள்ள இரஸத்தைக் கிரஹித்துக் கொள்ளவும்; இது வெ கு சுத்தமான சிற 'த இரஸம். இ த எல்லா முறைகளிலு ' 'கு உபயே கி ' லாம் ஆயு 'வே தப் சம்

கூர்ஜரதேசத்தில் அர்புத மென்னும் பர்வதத்திற்கு அருகில் ம்ருத்தாரச்ருங்கம் என்னும்[1] சரக்கு உற்பத்தியாகிறது· தளங்கள் அல்லது சிதளுள்ளதாகவும் மஞ்சள் நிறமாகவும் இருக்கும். அது ஸீஸமென்னும் ஈயத்தின் ஸத்துவம்· அதிக பளுவுள்ளது· சிலேஷ்மதோஷத்தைச் சமநம் செய்யும்; புருடர்களு குண்டாகும் நபும்ஸக தோஷம் முதலியதைப் போக்கும்· இரஸத்தைக் கட்டுவதற்கு மிகச் சிறந்தது·கேசரஞ்ஜநம்[2] என்னும் குணத்தில் சிரேஷ்டமானது. 145 146.

ம்ருத்தாரச்ருங்கம் அல்லது முரதாரசிங்கு.

(1) ஸாதாரண ரஸங்களனைத்தையும் கொடிமாதுளை இஞ்சி இவற்றின் சாற்றில் மூன்று நாள் பாவனை செய்து உலர்த்தியெடுக்க அவை தோஷம் நீங்கியவையாம்; (2)முற்கூறிய இரஸவர்க்க களிலிருந்து கிரஹிக்கப்படும் ஸத்துவங்கள் அனைத்தும் சுத்திவர்க்கச் சரக்குகள் கூட்டி ஊதப்பட்டால் சுத்தியடைவதுடன் அவை ஒன்றோடொன்று நன்றாகவும் கூடுகின்றன.[4] 147 148.

ஸாதாரண ரஸங்களின் சுத்திமுறை.

(1) இராஜாவர்த்தம் என்பது சிறிது சிவந்தும் மிக்க நீலநிறமும் கலந்த தாதுப்பொருள்.[5] அதிக பாரமுள்ளது· வழுவழுப்பானது· இவ்விதகுறிகளுள்ளதே சிற

இராஜா ர்த்தம்.

1. ம்ருத்தாரச்ருங்கம் இதும் போதாரச்ருங்கம் பூதாரச்ருங்கம், கேதாரச்ருங்கம் என்றெல்லாம் கூறப்படுகின்றது. தமிழில் இதை 'முரதார சிங்கு என்பார்கள். "போதாரச்ருங்கம் என்பது வெளிறிய மஞ்சள்நிறமானது· அது ஸதளம், நி தளம் (தளங் ளுள்ளது தளங் ளற்றது) எ று இருவகைப்படும்." எ று ஆ. ப்ரகாசம்.

2. கேசரஞ் நம் மயிர்களுக்குக் கருநிறமுண்டாக்குங் குணம்.

3. சுத்திவர்க்கம் பத்தாவது அத்தியாயம் பார்க்க.

4. இரஸங் ளுடைய வகுப்புப்பிரிவு வேற சில கிரந்த களில் வேறு ே று வ கயாகக் கூறப்பட்டிருக்கிறன: "மாக்ஷிகம், விமலம், சிலாஜது, சபலம், இரஸகம், ஸஸ்யகம், தரதம் ஸ்ரோதோஞ்ஜநம் ஆகிய இவ்வெட்டும் மஹாரஸங் ள். கந்தகம், தாளகம், சிலாஜது, ஸௌராஷ்ட்ரம்ருத்திை , அப்ரகம், கைரிகம் இராஜாவர்த்தம், கங்குஷ்டம் ஆகிய இவ்வெட்டும் உப ஸ ா." என்று இரஸ ண ம.' கந்தகம், ஹிங்குளம், அப்ரகம், தாளகம், சிலாஜது ஸ்ரோதோஞ்ஜநம் டங்க ம் எ னும் வெங்காரம் இராஜாவர்த்தம், படிகாரம், சங்கம், ை ரிகம் அன் பேதி இரஸகம் சோழி கங்குஷ்ட ஸௌராஷ்ட்ரம் ருத்திகை முதலிய வ உபரஸங்கள்" என்று பாவப்ரகாசம்.

5. "இராஜாவர்த்தம் உபரஸங்களின்வகுப்பைச்சேர்ந்ததெ று சிலரது கொள்கை. சிவப்பு கலந்தது நீலம் லந்தது என்று இது இரண்டு விதம். பாரமாயிருப்பது சிறந்த கு." என்று ஆயுர்ே தப்ரகாசம். (ஸாதார ரஸங் ள் எட்டு என்று முன்சொல்லியிருப்பதால் இராஜா ர்த்தம் இவ்வகுப்பிலில்லாமல் உபரஸங்களின் குப்பிலேயே சேர்ந்திருக்கே ுமென்று கு விளங்குகிறது. உபரத் ளில் இதுஒன்று எ றும் கூறுவர். இச்சரக்கு ஆங்கிலத்தில் Lapis Lazuli எனப்படுகிறது

ந்தது; மற்றது குணத்தில் மத்திமமானது. (2) பிரமேஹம் க்ஷயம் அர்சஸ் என்னும் மூலம் பாண்டு சிலேஷ்மதோஷம் வாத தோஷம் ஆகியவற்றைத் தீர்க்கும்; மேலும் தீபகம் பாசகம் வ்ருஷ்யம் இரஸாயநம் என்னும் குணங்களையும் பெற்றது. (3) எலுமிச்சம் பழச்சாறு பசுமூத்திரம் க்ஷாரவர்க்கம் இவற்றைக் கூட்டி அத்திரவத்தில் இரண்டு அல்லது மூன்று முறை ஸ்வேதமுறைப்படி பக்குவம் செய்ய இராஜா வர்த்தம் முதலிய தாதுப் பொருட்கள் சுத்தியடைகின்றன. காட்டுவாகைப் பூவின் சாறு இஞ்சிச்சாறு இவற்றாலும் இராஜாவர்த்தத்தைச் சுத்தி செய்யலாம். (4) இரா ாவர்த்தத்தைச் சூர்ணம் செய்து கொடிமாதுளைச் சாற்றையும் ந்தகத்தையும் கூட்டி புடமிடவும்; இவ்விதம் ஏழுமுறை புடமிட இராஜாவர்த்தம் பஸ்மமாகும். (5) இரா ாவர்த்தத்தைச் சூர்ணம் செய்யவும்; அதில் மநச்சிலையையும் நெய்யையும் எருமைப்பாலையும் கலந்து ஓர் இருப்புப்பாத்திரத்தில் பக்குவம் செய்யவும்; பிறகு வெண்காரம் சேர்த்து அனைத்தையும் பஞ்சகவ்யம் விட்டு அ ரைத்து ஓர் உருண்டையாகச் செய்யவும்; அதைக் கருங்காலிக் கட்டையிட்டு எரித்தால் சிறந்த ஸத்துவம் அதிலிருந்து வெளியாம். (6) இம்மு றப்படி கைரிகமென்னும் காவியையும் விமலத் , யும் பக்குவம் செய்ய அவற்றிலிருந்து முறையே பசுமை நிறமாகவும் செந்நிறமாகவும் ஸத்துவம் வெளிப்படும். 149 156.

இராா ர்த்தத்தின் சுத்தி முதலியது.

இராஜவர்த்த பஸ்மம் முதலியன.

## நா ாம் அத்தியாய .
## இரத்தின கள்[1].

(1) இரத்தினங்கள் என்கிற மணிகளும் இரஸத்தைக் ட்டுந் தன்மையுடையன. (2) வை ராந்தம் ஸூர்யகாந்தம் வஜ்ரம் மௌக்திகம் மாணிக்கம் சந்திரகாந்தம் இராஜாவர்த்தம் கருடப்பச்சை ஆகியவை மணிகள் எனப்படும். (3) புஷ்பராகம் மஹாநீலம பத்மராகம் பிரவாளம்[4] வைதூர்யம் நீலம் ஆகிய இவையும் மணி ள் எனப்படும். இவற்றை இரஸத்தை கட்டுவதன் பொருட்டுக் கிரஹித்து வைக்கவேண்டும். 1 3.

பொதுவான இரத்தினங்கள்.

(1) பத்மராகம் இந்திரநீலம் மரகதம் புஷ்பராகம் வஜ்ரம் ஆகிய இவ்வைந்தும் பஞ்சரத்தின ள் எனப்படும். (2) மாணிக்கம் முத்து பவள மரகதம் புஷ்பராகம் வஜ்ரம் நீலம் ோமேத ம்

பஞ்ச ரத்தினங்களும் வாரத்தி ங்களும்.

1. இரத்தின களை ணி என்றும் வழங்குவர்.
2. வஜ்ரம் ஷீ எ றும் கூறப்படும்.
3. மௌ திகம் முத்து.
4. பிரவாள ப ள .

வைதூர்யம் ஆகியவை முறையே நவக்கிரஹங்களுக்குச் சம்பந்தப் பட்ட வயாம்.[1] (3) பத்மராகம் புஷ்பராகம் பவளம் முத்து மரகதம் வஜ்ரம், நீலம் கோமேதம் வைதூர்யம் இவைகளை முறையே அந்தந்த கிரஹத்தின மித்திரபாவத்தைக்கோரி மோதிரமாகச் செய்து தரித்துக்கொண்டால் கோரியது ஸித்திக்கும். 4 6.

இரத்தினங்களின் பொது உபயோகங்கள்.

இரஸௌஷத முறையிலும் இரஸாயன முறையிலும் தானட் செய்வதிலும் அணிகளிலும் தேவதார்ச்சனைகளிலும் நல்ல இலக்ஷணைகளையுடைய சிறந்தஜாதி இரத்தினங்களை யுபயோகித்தால் நற்பயனுண்டாம் எனக் கருதப்படுகிறது. 7.

மாணிக்கமும் அதன் குணதிகளும்.

மாணிக்கம் என்பது பத்மராகம் என்றும் நீலகந்தி என்றும் இருவகைப்படும். (1) பத்மராக மென்னும் மாணிக்கமானது நிறத்தில் தாமரை யிதழ்போன்றது; மாசற்றது; ஸ்நிக்தமானது; அதிக பளபளப்புள்ளது; உருண்டகன்றது; பருத்து மேடுபள்ளமுமற்றது; இது சிறந்த மாணிக்கம் எனப்படுகிறது. (2) நீலகந்தி யென்னும் மாணிக்கம் கங்கை நீரில் உற்பத்தியாவது; கருநிறம் உள்ளடங்கிய சிவப்புச் சாயையைப் பெற்றது; இது முன் மாணிக்கம் போலவே குணத்திற் சிறந்தது. (3) சில்லி அல்லது சந்து விழுதல் நீரோட்டமில்லாது சுறசுறப்பாயிருத்தல் மாசுபடர்தல் ரூக்ஷத்தன்மை விசதமின்மை[2] சொட்டை இலேசாயிருத்தல் கோணல் ஆக இவ்வெட்டும் மாணிக்கத்திற்கான தோஷங்களாம். (4) தீபநம் வ்ருஷ்யம் கபஹரம் வாதஹரம் க்ஷயஹரம் என்னும் குணங்களும் பூதம் வேதாளம் இவற்றைப் போக்கும் தன்மையும் கர்மபலன்களாய் நேரிடும் வியாதிகளைப் பரிஹரிக்கும் தன்மையும் மாணிக்கத்திற்குள்ள குணங்களாம்[3]. 8 12.

நல்முத்து: அதன் குணங்கள்

(1) பார்க்கும்போது களிப்பூட்டுவது வெண்மை இலகு ஸ்நிக்தம் ஒளியுறுதல் மாசுமறுவின்மை பருமன் தண்ணீரைப்போன்ற தன்மை, உருட்சி ஆக ஒன்பது நற்குணங்களையுடையது நல்முத்து. (2) நல்முத்தானது குணத்தில் இலகு; சிதவீர்யம்; சுவையில் இனிப்பு; தேஹகாந்தியையும் திருஷ்டியின் சக்தியையும் தேஹ போஷணையையும் விருத்தி செய்யும்; விஷத்தை ஹரிக்கும்;

1. மாணிக்கம் முதலிய ஒன்பதும் ந த்தி ° ° எ ப்படு இ ற்றை ஹாரத்தி நீ ° என்றும் வழங்குவர்.
2. விசதமின்மை தெளிவில்லாமை.
3. ம ணி த்தியும் பஸ் மும்: "மாணிக் த்தைப் பசுமுத்திரத்திலிட்டு மூ று நாள் டும் யிலி வைத்து பாவனைசெய்து பிறகு வெ நீரால் கழுவ அது சுத்தமாகும். அவ்விதம் சுத்தமான மாணிக் த் த எருக் ம்பாலில் மூன்று நாள் பா வனைசெய்து அ ல் ளி ை த் துப் புடமிடவு . இவ்விதம் மூன்றுபுடமிட மாணிக் ம் பஸ்மமாம்.
த்ய சப்தவி து.

மலத்தை இளக்கி வெளிப்படுத்தும் · வீர்யத்தை விருத்திசெய்யும். (3) சுக்தி என்கிற முத்து ·சிப்பியானது தீபநம் பாசநம் என்னும் குணங்களையும் வயிற்று வலியைப் போக்குந்தன்மையையும் உடையது. (4) ரூக்ஷமான உருவமுடையதாகவும் நீரோட்டமற்றதாகவும் தூமநிறமாகவும் செம்புபோன்ற காந்தியுள்ளதா வும் பார்ப்பதற்கு உப்பைப் போன்றதாகவும் பாதி வெளிறியதாகவும் ஒழுங்கீனமான உருவமுடையதாக ும் கறடு கட்டியதாகவும் உள்ள முத்து ள் தோஷமுள்ளவையா · அவற்றை எதற்கும் கிரஹிக்கக் கூடாது. (5) நல்முத்தானது கப பித்தங்கள் க்ஷயரோகம் காஸம் ச்வாஸம் அக்னிமாந்த்யம் இவை ளைப் பரிஹரிக்க உதவும் · தேஹ புஷ்டியைத் தரும் · விருஷ்யம் ஆயுஷ்யம் தாஹசமநம் ஆகிய குணங்களையுமு டயது[1]. 13 16.

ப ளமும் அதன் குண கு ·களும்.

(1) பவளமானது நிறத்தில் நன்கு பக்குவமான ோவைப் பழம் போன்றது · உருவத்திற் சிறிது நீண்டும் உருட்சியாகவுமிருக்கும் · வக்கிரத்தன்மை யற்றது · ஸ்நிக்த்தம் · கறடு அல்லது சொட்டைவிழாதது · பருமனுமிருக்கும் · ஆகப் பவளத்திற்கு ஏழுவிதமான நற்குண ள் உண்டு. (2) வெண்மை அழு ·கடைந்த தன்மை உருவத்திற் சின்னஞ்சிறியதா யிருத்தல் கறடு அல்லது சொட் டகள் ஏற்பட்டிருத்தல் சந்துகள் விழுந்திருத்தல் கனமின் ம தூம ர்ணம் ஆகிய பவளத்திற்கு எட்டுவித தோஷங் ளாம. (3) பவளமானது க்ஷயரோகம் காஸம் இரக்த பித்தம் நேத்திர ரோ ·கள் ஆகியவற்றைத் தீர்க்கவல்லது· தீபநம் பாசநம் இலகு விஷஹரம் பூதசமநம் என்னும் குண ·களுடையது.[2] 17 19.

1. முததுப ரீ க்ஷை: உப்பு அல்லது க்ஷாரங்களைப் பசுமூத்திரத்திற் க ரத்து அதில் மௌ ·கித மென்கிற நல்முத் தத் தேய்த்துப்பார்க் அது எவ்வித விகாரமும் அடையாமலிருந்தால் சிறந்ததென்று அறியலா ·. நலமுத் தத்தி : அம்ல ர்க்கங் ளாலாவது காஞ்ஜி மென்னும் ாடியினுலாவது, கோமூத்திரத்தினுலாவது, புளியம்பழச் சாற்றுலாவது பாவனை செய்ய மௌத்தி ம் சுத்தியாகு ·. மெ ·தி பஸ்மம்:-வெண்க ·டங் த்திரிச்சாற்றில் முற்கூறிய சுத்தி செய்த ந ·முத் த பாவனைசெய்து, பூமியில் புடம்போட ன்கு பஸ்மமாகும்: வத்திய சி ·தாமணி.

2. ப தத தி: ற்ப ளத் த லுமிச்சம்பழச்சாற்றில் ஒரு ாம ாலம் ப னை செய்து பிறகு வெ ந்நீரில் அலம்பி யெடு · சுத்தம கும். பிர ர் பஸ் : அ ·விதம் சுத்தி செய்த பவளத்தை எரு ·ம்பாலி· மூன்று ாள் பா னை செய்து பிறகு கஜபுட த்தில் எரிக் அது ன்குப ·மமாகும். வத்தி க சி ·தா ணி. ப க்ஷை: டல் நீரில் உ · ட தும், பாலசூரிய நிறம்பொரு ·தி ய ானது ற்ப ம்· அ த · ல்லில் தேய்த்து உ றத்தாலும் அத · நிறம் அ ·லது ா·தி கு ற டயாது

(1) தார்க்ஷ்ய மென்கிற மர த மணியானது நிறத்திற் பச்சை· கனமானது· ஸ்நிக்த்தம்' ஒளிவீசிப் பிரகாசிக்கும்· மழமழப்பானது' மாசற்றது' உருவத்திற் பருமனானது' ஆக இவ்வேழும் மரகதத்தின் சிறந்த குணங்களாம். (2) கபிலநிறம் நீலநிறம், வெண் ம, கறுமை ஆகிய நிறங்களும் கறடுமுரடா யிருத்தல் இலகுவாயிருத்தல், தட்டையாயிருத்தல், கோணல் ரூக்ஷமாயிருத்தல் ஆகியவையும் மரகதத்தின் தோஷங் ளாகும். (3) ஜ்வரம் வாந்தி விஷப்பற்றுகள் ச்வாஸரோகம் ஸந்நிபாததோஷம் அக்னிமாந்த்யம் அர்சஸ் என்னும் மூலம் பாண்டுரோகம் சோபம் இவற்றைத் தீர்ப்பதற்கு மரகதம் உபயோகமானது' மேலும் ஓஜோதாதுவை இது விருத்தி செய்கிறது.[2] 20 22.

மாகதம் : அதன் குண குண 'கள்.

(1) புஷ்பராகம் என்னும் இரத்தினம் பளுவுள்ளது' மாசற்றது' ஸ்நிக்த்தமானது' -ருவத்திற் பருத்தது' மேடுபள்ளமற்றது' மிருதுவானது· கொன்றைப் பூவுக்குச் சமானமான நிறமுடையது' பரிசிப்பதற்கு வழவழப்பானது' ஆக எண்வகை குண 'கள் இதற்குண்டு. (2) சாடபல் நிறம் கபில நிறம் வெண்மை ஒளியற்றது கடினம் ரூக்ஷம் பசுமை கறுமை மேடுபள்ளமானது ஆகிய தன்மைகளுள்ள புஷ்பராகம் ஔஷதமுறையில் விலக்கத்தக்கது. (3) புஷ்பராகமானது விஷதோஷம், வாந்தி, கபதோஷம் வாததோஷம் அக்னிமாந்தியம் இவைகளைப் பரிஹரிக்கும்' மேலும் தாபம் குஷ்டம் இரக்தபித்தம் இவைகளையும் தீர்க்கும்' தீபநம் பாசநம் இலகு என்னும் குண 'களும் இதற்குண்டு. 23 2௦.

புஷ்பரா த் தின் குண குண 'கள்.

வஜ்ரம் ர்ன்னும் இரத்தினத்தில் புருஷ வஜ்ரம், ஸ்த்ரீவஜ்ரம் நபும்ஸகவஜ்ரம் என்று மூன்று விதம் உண்டு. இவற்றிற்குள்ள இரஸம் வீர்யம் விபாகம் என்னும் குண 'களை 'கொண்டு இம்மூன்றிலும் பிந்தியதைவிட முந்தியது மேன்மேலும் சிறந்ததாம். (1) அவற்றுள் புருஷ வஜ்ரம் எட்டுக் கோணங்களும் எட்டு அல்லது ஆறு பட்டைகளும் உடையது' அதிக ஒளிவீசுவது' மேகத்திலுள்ள இந்திரதனுஸ்

ஜ்ரம் மூன் றுவிதம்.

1. ஓஜஸ சரீரத்திலுள்ள எழு தாதுக்களுடையவும் ஸாராம்சமான எட்டாவது தாது. தேஹத்துக்கு மிகப் பிர. ானமா ஜீவதாது அதுவே.

2. காருத்மகம் இராஜ நீலம் ரௌஹிணேயம் ௦ ளபர் ம் முதலிய ே று பெயர்களும் மரகதத்திற்குண்டு.

3. உரு த்திற் பருத்தது என்பதனால் சிறுத்த புஷ்பரா கம் உத ாதெனக் கருத்து.

4. புஷ்பரா ம் இதற்கு மஞ்ஜுமணி, பீதஸ்படி ம் குருரத்தின ' பீதமணி எ 'கிற பெயர்களும் உ ' டு. ஆ வே சுத்த வெ ' ம யான இரத்தினமல்ல ௦ ன்று அறி . ஒரு ாறு செம்பொன்னிற முள்ள புஷ்பரா ம்

ளைப்போல பல நிறமுள்ள ஒளிகளைப்பெற்ற நீரோட்டமுள்ளது. (2) அதுவே சப்பட்டையாகவும், சிறிது நீண்டு -ருட்சியாகவும் இருந்தால் ஸத்ரீவஜ்ரம எனப்படும். (3) —ருண்ட வடிவத்துடன் கூர்மையற்ற கோணவரம்புகளையுடையதாய் அதிக கனமில்லாததா யிருந்தால் அது புமஸக வஜ்ரமாம். ஸ்த்ரீவஜ்ரத்தை ஸ்த்ரீகளுக்கும் நபும்ஸக வஜ்ரத்தை நபும்ஸகருக்குமே உபயோகிக்கவேண்டும். புருஷவஜ்ரத்தைத் தவிர மற்றிரண்டையும் இவ்விதிக்கு மாருக உபயோகித்தால் பயன் ண்டாகாது. (4) வெண்மை பசுமை சிவப்பு கறுப்பு என்னும் நிற களைக்கொண்டு முற்கூறிய வஜ்ரம் ஒவ்வொன்றும் நான்கு வகைப்படும். அவை முறையே பிராம்மணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் ஆகிய பெயர்களைக் கொண்டு வழ கப் படுகின்றன. இவ்விதி பைரவரால் கூறப்பட்டது.[1] 26 31.

ஜ்ரத்தின் உட்பிரிவுகள்.

வஜ்ரமானது ஆயுளை விருத்தி செய்யும்· நல்ல குணங்களை விரைவில் அளிக்கவல்லது· விருஷ்யம்· ஸந்நிபாத தோஷத்தைத் தணிக்கும்· எல்லா வியாதிகளையும் தீர் கும் சிறந்த சரக்கு வஜ்ரமே. இரஸத்தைக் கட்டுவதற்கும் பஸ்மம் செய்வதற்கும் உபயோகமானது· தீபந குணத்திற் சிறந்தது· உயிருக்கு ஆபத்தா நிலமையிற் பிரயோ ன முள்ளது. 32.

ஜ்ரத்தின் கு ங்கள்.

கிராஸம் திராஸம் பிந்து ரேகை ஜலகர்ப்பம் என்று எல்லாவித இரத்தினங்களிலும் பொதுவாக ஐந்து தோஷ கள் உண்டு. ஆனால் இரத்தினங்களுண்டாகும் கனிகள் உள்ள பூமியிலிருந்தோ நீரிலிருந்தோ சேர்ந்த அத்தோஷ கள் இரத்தினங்களில் பற்றுதில்லை. $33\frac{1}{2}$

இரத்தி ங்க ளி பொது தோஷங் ள்.

1. பிராம்ம ஜ்ரம் இரஸா மு றயில் உபயோகம கின்றது· அணி ம முதலிய பிரபாவம் தரத்தக்கது. க்ஷத்ரி வஜ்ரமானது ர தி ர முதலிய விகாரங் ளையு , கிழத்த த் தயும் நீக்கவல்லது· ருத்யுமை யு தடுக்கும். வச்ய ஜ்ரம் செல் தரும்· தேஹத்துக்கு தார்ட்யம் கொடுக்கும்; சூத்ரவஜ்ரமானது பல டும் வியாதி ளைப் போக்கும்· தீர்க்காயுளைத் தரு .' இரஸார்ண ம்.

2. கிராஸம் பூமியிலிரு து பற்றிய நிறம் முதலிய தோஷம். திர ஸம் ஒளி மழுங்கியிருத்தல். பிந்து உள்ளே புள்ளி விழு திருத்தல் ரேகை கோடு விழுந்திருத்த , ஜலகர்ப்பம் உ ே நீர் தங்கியிருத்தல்.

3. குறிப்பிட்ட ஒரு இரத்தினத் தப்பற்றிய விஷயம் விவரிக்கப்படு கயில் பொதுரத்தினங் ளைப்பற்றிய இவ்விஷயம் இடை யில் சேர்க்கப் பட்டிருப்பதற்குக் காரணம் சி திக் த்த து.

கொள்ளின் கஷாயத்திலாவது வரகுக் கஷாயத்திலாவது வஜ்ரத்தை ஒரு யாமகாலம் போட்டுக் காய்ச்ச அது சுத்தமாகும். (1) வஜ்ரத்தை மூட்டப்பூச்சியின் இரத்தத்தில் நான்கு முறை பாவனை செய்து மூஞ்சுருவின் இறைச்சியை வாட்டி யெடுத்து நன்றாக அரைத்து, அக்கல்கத்தினுள் அவ்வஜ்ரத்தை வைத்து முப்பது முறை வராஹபுடத்திற் பக்குவம் செய்யவும். பிறகு அவ்வஜ்ரத்தை நெருப்பிலிட்டு ஊதி கொள்ளின் கஷாயத்திற் போடவும். இவ்வாறு நூறு முறை அதைக் காய்ச்சிக் காய்ச்சி அக்கஷாயத்தில் தோய்த்தெடுக்க வேண்டும். (2) கொள்ளின் கஷாயத்தையும் எலுமிச்சம் பழச் சாற்றையும் கூட்டி அதைக்கொண்டு மனச்சிலையை அரைத்து அக்கல்கத்தினால் மூசையின் உட்புறத்தைப் பூசவேண்டும். அம்மூசையில் வஜ்ரத்தையிட்டு மேலே சீலை செய்து வறட்டியைக் கொண்டு நன்றாக எட்டுமுறை புடமிடவும். பிறகு நூறு முறை அதைக் காய்ச்சிக் காய்ச்சி சுத்தமான பாதரஸத்திற் போடவேண்டும். இவ்விதம் செய்ய வஜ்ரம் நீரில் மிதக்கும்படியாக பஸ்மமாகும். இரஸமுறைகளிற் பற்றுள்ளவரும் பொய்யா மொழியினருமாகிய ஸோமஸேநாநீ என்பவர் அனுபவ முறைப்படி இவ்வஜ்ர பஸ்ம முறையை மொழிந்தனர். (3) மூட்டப்பூச்சியின் இரத்தத்தை வஜ்ரத்தின்மேல் பூசி யுலர்த்தவும்; இவ்வாறு ஏழு முறை அதைப்பூசி புலர்த்தியபின் ஓர் இரும்புப் பாத்திரத்தில் ஊசித்தகரைச்சாற்றை வைத்து அதில் இவ்வஜ்ரத்தைப் போட்டு நெருப்பில் வைத்து ஊதவும். இவ்விதம் ஏழுதடவை செய்ய வஜ்ரம் பஸ்மமாகும். இந்த முறையைக் கூறியது பிரம்மஜ்யோதிர்முனியென்பவர். (4) நீலியென்னும் அவிரிவேர்ச் சாற்றிலும் வாலுழுவை வேர்ச்சாற்றிலும் வஜ்ரத்தைப் போட்டுத் தேய்த்து இழைத்து வெயிலில் நன்றாக உலர்த்தி யெடுக்க ஞானக்கினியினால் கர்மத்தைப் போல வஜ்ரம் நன்கு பஸ்மமாகும். (5) மருக்காரைப் பழச்சாற்றால் நாகப்பூச்சிகளை ஆட்டி அக்கல்கத்தினால் வஜ்ரத்தின்மேல் பூசிடவும். அதை இருபது முறை புடமிட நன்கு பஸ்மமாகும். பிறகு அதை இரஸௌஷத முறைகளிற் பிரயோகிக்கலாம். (6) பிறகு அவ்வஜ்ரத்தைப் பொடி செய்து அத்துடன் சிறிது வெண்காரமும், இருபதிலொரு பங்கு பூநாகத்தின் ஸத்துவமும் கூட்டி நன்றாக ஆட்டி யெடுத்து அப்பால் அதற்குச் சமஎடை சுத்தி செய்த பொன்னைச் சேர்த்து அக்னியிலிட்டு எரிக்கவும். பிறகு அதை இரஸௌஷதாதி முறைகளிற் பிரயோகிக்கலாம்.[1] 34 46.

வஜ்ர சுத்தியும் பஸ்ம முறைகளும்.

---

1. (1) அரசம்பட்டை, இலந்தம்பட்டை, மருதோன்றிப்பட்டை, நண்டின் ஓடு, தேன், கள்ளிப்பால் இவற்றைச் சமபாகமாகக் கூட்டி அரைத்து, அக்கல்கத்தினுள் வஜ்ரத்தை வைத்து, கஜபுடத்திற் புடமிட பிரமமணம் ஜா பஸ்மமாகும். (2) அலரிவேர் ஆடுதீண்டாப்பாளை வேர், இலந்தம்பட்டை, அத்திப்பட்டை இவற்றைச் சமஎடையெடுத்து,

முற்கூறியவாறு பக்குவம் செய்த வஜ்ரத்துடன் மூன்று பங்கு இரஸங்கூட்டி ஆட்டியெடுத்து குளிகையாகச் செய்து வாயில் அடக்கிக்கொண்டிருந்தால் ஆடிக்கொண்டிருக்கும் பற்களும் சீக்கிரத்திலேயே கெட்டியாய்விடும். 47.

வஜ்ர குளிகை.

வஜ்ரபஸ்மம் முப்பது பாகம் ஸ்வர்ணபஸ்மம் பதினாறு பாகம் வெள்ளி பஸ்மம் எட்டு பாகம் சுத்தமான இரஸம் பதினொரு பாகம் அப்ரகபஸ்மம் நான்கு பாகம் ஸ்வர்ணமாக்ஷிகபஸ்மம் எட்டு பாகம் வைக்கிராந்தபஸ்மம் ஆறு பாகம் ஆக இவற்றைக் கூட்டி முற்கூறிய கஷாயங்களை அனுபானமாகக் கொண்டு அவரவருக்கேற்ற அளவின்படியுட்கொண்டுவர ஸகல ஸித்திகளும் உண்டாம். 48.

வஜ்ரபஸ்ம ரஸாயனம்.

நீலரத்தினம் ஜலநீலம் என்றும் இந்திரநீலம என்றும் இருவகைப்படும். இவற்றுள் இந்திரநீலம் சிறந்தது. (1) உட்புறம் வெளிறியதாய் மேலே நீலநிறம் கொண்டுள்ளது ஜலநீலம் அது இலேசாகவும் இருக்கும் குணத்திலும் குறைவானது. (2) உட்புறம் கருநிற நீரோட்டமுள்ளதாய் பாரமுள்ளதாயிருப்பது இந்திரநீலமாம். 49 50.

நீலரத்தினம் இருவகை.

(1) ஒரே நிறமுள்ள காந்தி பாரம் ஸ்நிக்த்தம் நிர்மலம் உருட்சி மிருது மத்தியில் ஒளி வீசுதல் ஆகிய ஏழும் நீலமணிக்குள்ள சிறந்த குணங்களாம். (2) ஐந்து வர்ணங்களின் சேர்க்கை ரூக்ஷத்தன்மை பாரமின்மை இரத்த நாற்றம் தட்டையான உருவம் மிகச் சிறுத்த உருவம் ஜலநீலம் ஆகியவை நீலமணியின் ஏழுவிதமான தோஷங்களாம். 51 52.

நீலரத்தினத்தின் குண தோஷங்கள்.

நீலமணியின் உபயோகங்களாவன : ச்வாஸகாஸஹரம் விருஷ்யம் த்ரிதோஷஹரம் சிறந்த தீபநம் ஆகிய குணங்களையுடையது. விஷமஜ்வரம் மூலரோகம் ஆகிய ரோகங்களை நிவ்ருத்தி செய்யும்.[1] 53.

நீலரத்தினத்தின் உபயோகங்கள்.

---

எருக்கம்பாலால் ஆட்டியெடுத்து, முன்போல் புடமிட க்ஷத்ரிஜாம பஸ்மமாகும். (3) சிற்றுமுட்டி, பேராமுட்டி கந்தம், ஆமயோடு இற்றுக் கள்ளிப்பாலால் ஆட்டி, இந்தக் கத்தினுள் சைய ஜாத்தை வைத்துக், புடமிடபிராம்ம வஜ்ரம்போலவே பஸ்மமாகும். (4) கருணைக்கிழங்கு வெள்ளுள்ளி, சங்கு மனச்சிலை இவற்றைச் சமயெடையாகச் சேர்த்து, ஆலம்பாலால் ஆட்டி கல்மாச் செய்து அதனுள் சூத்தி ஜாத்தை வைத்து புடமிட பஸ்மமாகும். இரஸாத்னாகரம்.

1. நீலமணியைக் கமுகயின் மூத்திரத்திலிட்டுக் கடும் வெயிலில் வைத்து ஒரு நாள் பாவனை செய்ய அது சுத்தியடையும். இது நீலமணி சுத்திமுறை. பிறகு அந்த நீலத்தைப் பாலைக்கீரையின் சாற்றில் போட்டு மூன்று யாமகாலம் பாவனை செய்து குருமானுலையில் எரித்தெடுக்க பஸ்மமாகும். வைத்திய சிந்தாமணி.

பசுவின் சிறுநீருக்குச் சமானமான நிறமுள்ளதாயிருப்பதால் இந்த இரத்தினம் கோமேதம எனப்படுகிறது. (1)

கோமேதம்: அதன் குண தோஷங்கள்.

மிக்க நிர்மலமான பசுவின் மூத்திரம் போன்ற சாயலையுடையது · நிர்மலமானது · ஸ்நிக்த்தமானது · மேடுபள்ளமற்றது · பாரமுள்ளது · செதிளற்றது ; மழமழப்பானது · பளபளப்புள்ளது · ஆ எட்டு நல்ல குணங்களையுடையது கோமேதம். (2) அழுக்கடைந்த காந்தி இலேசாயிருத்தல் ரூக்ஷத்தன்மை தட்டை செதிள்களுடமை பளபளப்பின்மை பசுமையான பீங்கானுருவம் ஆகியவை கோமேதத்தின் தோஷங்களாம்.[1] ௫4 - ௫௫.

கோமேதத்தின் உபயோகங்கள்.

கோமேதமானது கப பித்தங்களை ஹரிக்கும் · க்ஷயம் பாண்டு ரோகம் இவற்றைப் போக்கும் · தீபநம் பாசநம் ருச்சியம் என்னும் குணங்களையுமுடையது · நாக்குக்கு நற்சுவையையும் தரும்; புத்தியைத் தெளியச் செய்து விருத்தி செய்யும்.[2] ௫6.

வைடூர்யம்: சிறந்ததும் தோஷமுள்ளதும்.

(1) வைடூர்யம என்னும் இரத்தினம் கறுப்பு கலந்த வெண்ணிறமுடையது · மேடுபள்ளமற்றது · நிர்மலமானது · பாரமுள்ளது · ஒளி வீசுவது · உட்புறத்தில் வெண்ணிற மேகம்போன்ற மாலையுருவான இரேகையைப் பெற்றது. இந்த இலக்ஷணங்களைப் பெற்ற வைடூர்யம சிறந்ததாகக் கருதப்படும். (2) கருமை நிறம் நீருக்குச் சமானமான காந்தி சப்பட்டையான உருவம் இலேசு கடினம் செந்நிறமான மாலைபோன்ற உட்புற இரேகை ஆகிய இலக்ஷணமுள்ள வடூர்யம் தோஷமுள்ளதாம். ௫7 ௫8.

---

1. சுத்த ஜலமுள்ள பாத்திரத்தில் சிறந்த கோமேதத்தைப் போட அந்த ஜலம் பசு மூத்திரம் போலப் பிரகாசங்கொள்ளும் · அந்த மணியைத் தேய்த்தாலும் அதன் ஒளி மழுங்காது. அதுதான் சிறந்த கோமேதமென்றறிக. ஆயுர்வேத ப்ரகாசம்.

2. கோமேதத்தின் சோதனை: கோமேத மணியைக் குதிரை மூத்திரத்திலும், நிலப்பனங்கிழங்கின் ஸ்வரஸத்திலும் மூன்று மூன்று நாட்கள் பாவனை செய்ய சுத்தியாகும். கோமேத பஸ்மம்: சுத்தியான கோமேதகத்தைக் கருஊமத்தன் சாற்றினால் பாவனை செய்து, மூன்று முறை புடமிட பஸ்மமாகும். வைத்திய சிந்தாமணி.

3. (1) பூமியில் உண்டான வடூர்யமே சிறந்தது. அது உஷ்ணவீர்யமும், அம்லரஸமும் உடையது · கபஹரம் வாதஹரம் என்னும் குணங்களையும் பெற்றது · குல்மம் முதலிய குடலைப்பற்றிய கோளாறுகளைத் தீர்க்கவல்லது. (2) மூங்கிலிலைபோன்ற காந்தியுடையது ஒன்று; மயிற் கழுத்துபோன்ற ஒளியுடையது மற்றொன்று · பூனையின் விழியைப்போன்று பொன்னிறம் பெற்றுத் துலங்குவது மற்றொன்று ; ஆக வடூர்யம் மூன்று வகைப்படும். (3) பளுவானது; மிருதுவும் ஸ்நிக்தமானது ; செதிளற்றது · நிர்மலமானது · ஆகிய இலக்ஷணமுள்ளதே சிறந்த வைடூர்யமாம்: ஆயுர்வேத ப்ரகாசம்.

வைடூர்யமணியின் உபயோகங்களாவன: இரக்த பித்த ஹரம்; அறிவை விருத்திசெய்யும்; ஆயுளைப் பெருக்கும்; பலத்தை அதிகப்படுத்தும்; பித்தப் பிரதானமான ரோகங்களைத் தீர்க்கும்; தீபநம் மல சோதம் என்னும் குணங்களையும் உடையது[1]. 59.

வைடூர்யத்தின் உபயோகங்கள்.

(1) அம்லவர்க்கங்களின் சாற்றால் அல்லது காடியினால் மாணிக்கம் சுத்தியடையும். (2) தக்காளிச் சாற்றால் நல்முத்து சுத்தமாகும். (3) க்ஷாரவர்க்கத்தினால் நற்பவளம் சுத்தியடையும். (4) பசுவின் பாலால் கருடப்பச்சைக்கல் சுத்தியடையும். (5) கொள்ளின் கஷாயம் கூட்டிய காடியினால் புஷ்பராகம் சுத்தமடையும். (6) வஜ்ரமானது முள்ளுக்கீரையின் சாற்றால் சுத்தமாகும். (7) அவிரிச்சாற்றால் இந்திர நீலம் சுத்தமாகும். (8) கோமேதம் கோரோசனையினால் சுத்தமாகும். (9) வைடூர்யம் த்ரிபலாகஷாயத்தினால் சுத்தமாகும். 60—62.

இரத்தினங்களின் சுத்தி முறைகள்.

மனச்சிலை கந்தகம், தாளகம் இவற்றை எலுமிச்சம்பழச் சாற்றால் ஆட்டி, எட்டுமுறை புடம்போட வஜ்ரத்தைத் தவிர மற்ற இரத்தினங்கள் பஸ்மமாகும். 63.

இரத்தினபஸ்ம முறை,பொது.

காயம் பஞ்சலவணங்கள் மூன்று க்ஷாரங்கள் மாம்ஸரஸம் புளிவஞ்சி, நவஸாரம் பழுத்துப் பருத்த கும்பீபலம்[2] சுத்தமான கலப்பைக் கிழங்கு எலிச்செவிச் செடி அழுகண்ணிப் பாலைக்கீரை சித்திரமூலம் ஆகியவற்றைப் பொடித்து அவற்றில் கள்ளிப்பாலையும் வெள்ளெருக்கம்பாலையும் கூட்டி நன்றாக ஆட்டி உருண்டையாக்கி, அதனுள் நற்குணமுள்ள நவரத்தினங்களைச் சுத்திசெய்து அடக்கம் செய்யவும். அவ்வுருண்டையின்மீது பூர்ஜபத்திரத்தைச் சுற்றி நன்றாக நூல்களால் சுற்றிவிடவும். அதன் மேல் ஒரு சீலையையும் சுற்றி பிறகு கூறப்படும் அம்லவர்க்கத் திரவம் நிரம்பிய பானையில் டோலாயந்திரத்தில் அக்கோளத்தை வைத்து கடுந்தீயிட்டு மூன்று நாட்கள் எரிக்கவேண்டும். பிறகு இரத்தினங்களின் திரவத்தை அதிலிருந்து எடுக்கவும். இரத்தினம்போன்ற ஒளி இதற்குண்டு; ஆனால் இலேசாகவும் தேஹத்தை உலோஹம் போன்று கடினமாகச் செய்யும் தன்மையுடையதாகவும் இருக்கும். 64—69½.

இரத்தின த்ருதி பொது.

1. வைடூர்ய சுத்தி: வைடூர்யத்தைக் குதிரையின் சிறு நீரிலும் கூஷ்மாண்ட ரஸத்திலும் இரண்டு தினங்கள் பாவனைசெய்ய சுத்தமாகும். வைடூர்ய பஸ்மம்: அவ்வைடூர்யத்தைக் கொலுருவிச் சாற்றில் பாவனைசெய்து, கருமார வுலையில் நன்றாக எரித்தெடுத்து, வஜ்ரமூஷையில் பிறகு கஜபுடங்கொண்டு எரித்தெடுக்க வைடூர்யம் பஸ்மமாகும்: வைத்திய சிந்தாமணி.

2. கும்பீபலம் பேய்ச்சுரை யென்று சிலர். நேபாளவித்துகள் அடங்கிய காயும் கும்பீபலம் எனப்படுவதுண்டு.

**மௌக்திக த்ருதி.**

நல் முத்துக்களைப் பொடி செய்து ஏழு நாட்கள் புளிவஞ்சி ரஸத்தினால் அரைக்க வேண்டும். பிறகு அதை ஏலுமிச்சம் பழத்திற்குள் வைத்து தானியங்களுக்குள் அடக்கம் செய்யவும். அதை ஏழு நாட்கள் கழித்து எடுத்து புடம்போட மௌக்திகத்திரவம் உண்டாம். 70 71.

**வஜ்ரத்ருதி.**

பிரண்டையைக் கல்கமாகச் செய்து அதனுள் வஜ்ரத்தை வைத்து மூடிவிடவும். பிறகு காடியடங்கிய பாத்திரத்தில் இதை டோலாயந்திர முறையில் ஏழு நாட்கள் எரித்துப் பக்குவம் செய்ய வஜ்ரம் திரவமாகும். 72.

**வைக்ராந்த த்ருதி.**

(1) வெண்ணிறமான வைக்ராந்தத்தைப் புளிவஞ்சிச் சாற்றில் ஏழு நாட்கள் பாவனை செய்து கடும் வெயிலில் காய வைத்து வந்தால் அது திரவத்தன்மையை யடையும். (2) தாழைவேரின் சாற்றில் இந்துப்பு கொன்றை இந்திரகோபமென்னும் செந்நிறப் பூச்சி இவற்றை ஒரு பானையிலிட்டு அதில் வைக்ராந்தத்தைப் போட்டு ஏழு நாட்கள் எரித்துப் பக்குவம் செய்ய அது திரவமாகும். (3) அஷ்ட லோஹங்களின்[1] பஸ்மத்திலும் வஜ்ரபஸ்மத்திலும் வைக்ராந்தத்தை காய்ச்சினாலும் அல்லது அவை அடங்கிய நீரின் ஆவியில் டோலாயந்திரமுறையிற் பக்குவம் செய்தாலும் வைக்ராந்தம் திரவமாகும். இந்த முறையானது ஸகல இரத்தினங்களுடையவும் திராவகமுறைக்கு மிகச் சிறந்தது[2] 73 76.

**த்ருதிகளைச் சேமித்துவைக்கும் முறை.**

இரத்தினம் முதலியவற்றின் த்ருதிகளை குசும்பதைலத்தில் வெவ்வேறாகப் போட்டு வைத்தால் அவை வெகுகாலம் குணத்திற் குறைவு படாமலிருக்கும். பிறகு அவசியமானபோது அவற்றை யெடுத்து உபயோகிக்கலாம். 77.

**இரத்தினங்களை அணிதலின் உபயோகங்கள்.**

இரத்தினங்களைச் சரீரத்தில் எப்பொழுதும் அணிந்துகொண்டிருந்தால் அடியிற்குறிப்பிடப்படும் உபயோகங்கள் உண்டு. சூரியன் முதலிய கிரஹங்களாலுண்டான பீடைகள் பரிஹரிக்கப்படும்; தீர்க்காயுள் உண்டாம்; ஆரோக்கியம் விருத்தியாம்; அழகு அதிகரிக்கும்; செல்வம் செழிக்கும்; மனம் தெளிவுறும்; தைரியம்

---

1. அஷ்ட லோஹங்கள்: பொன், வெள்ளி, செம்பு, ஈயம், கருவங்கம், பித்தளை, காந்தலோஹம், லோஹம் என்பன வாம்.

2. இதற்குப் பிறகு, இடையில் 'இராஜாவர்த்தம்' என்பதைப் பற்றி முன் அத்தியாயத்தின் இறுதியிற் கூறியுள்ள விஷயம் ஆசுபோத வித்யாபூஷண முதலியவர்களால் கல்கத்தாவில் பிரசுரிக்கப் பட்டுள்ள புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

மேலெழும் முகமாசு ஒழியும் பாக்கியக்கேடு தொலையும் பூத பிசாசாதிகளாலான தீமைகளும் தீரும்.[1] 78

## ஐந்தாம் அத்தியாயம்

### உலோஹங்கள்[2].

(1) பொன் வெள்ளி செம்பு தீக்ஷ்ணம் என்கிற உருக்கிரும்பு ஆகியவை சுத்த லோஹங்கள்[4] எனப்படும். (2) நாகம் வங்கம் என்னும் இரண்டும் பூதிலோஹங்கள்[5] எனப்படுகின்றன. (3) பித்தளை வெண்கலம் வர்த்தலோஹம்[6] என்கிற மூன்றும் மிச்ரலோஹங்கள் என்று வழங்கப்படும். பொன் முதலான லோஹவர்க்கங்களுக்கு லோஹ தாது என்றும் பெயருண்டு. லோஹம் என்னும் பெயர் அநேகம் சரக்குகளுக்கு[7] வழங்கப்படும்.[8] 1

உலோஹங்களின் ஜாதிகள்.

### ஸ்வர்ணம பேதம்.

ஸ்வர்ணமானது பிராக்ருதஸ்வர்ணம் ஸஹஜஸ்வர்ணம், அக்னிஜஸ்வர்ணம் கநிஜஸ்வர்ணம் இரஸவேதஜ ஸ்வர்ணம் என்று ஐந்துவிதமாம். 2.

ஸ்வர்ணம் ஐந்து விதம்.

---

1. புஷ்பராகம், பத்மராகம், வஜ்ரம் முதலிய முற்கூறியவை இரத்தினங்கள் என்றும் ... க்ராந்தம், ஸூர்யகாந்தம், ஹீரகம், மௌக்திகம் சந்திரகாந்தம் இராஜாவர்த்தம் கருடப்பச்சை ஆகிய ஏழும் மணிகள் என்றும் வழங்கப்படுவதாக ஆயுர்வேத ப்ரகாசம்.

2. பொன், வெள்ளி செம்பு, அயம் முதலிய பாரமும் பளபளப்புமுள்ள ஒன்பது விதமான தாதுக்களுக்கும் பொதுவாக உலோஹம் என்று பெயர். ஆனல் முக்கியமாக தீக்ஷ்ணம் என்கிற உருக்கு அல்லது அயம் லோஹம் என்று வழங்கப்படுகிறது முகம் முதலியதற்கு ஒளியளிக்கக் கூடிய ஒருவித அகில் அல்லது அகரு என்னும் த்திரவ்யத்துக்கும் லோஹம் என்று பெயர் உண்டு. ஆகவே இதன் கீழ் மூலத்தில் லோஹம் என்னும் பெயர் அநேகம் சரக்குகளுக்குப் பொதுவாக வழங்கப்படும்' எனக் கூறப்படுகிறது.

3. உருக்கிரும்பு -எஃகு என்று வழங்கப்படும்.

4. சுத்தலோஹம்' என்றால் வேறு லோஹங்களின் அல்லது தாதுக்களின் கலப்பில்லாமல் சுயமாயுண்டாகுபவை யெனப்பொருள்.

5. ஒருவித நாற்றம் அவற்றிலிருப்பதால் 'பூதிலோஹம்' எனப்படுகிறது.

6. வர்த்தலோஹம் என்பதைப்பற்றி பிறகு அதன் தலையங்கத்திற்பார்க்கவும்.

7. 'ரஷார்த்தவாசீ' என்கிற படப்படி லோஹங்களை ... என்றும் கூறுவர் எனப் பொருள்.

8. 'பொன், வெள்ளி, செம்பு, வங்கம், நாகம், காரீயம், அயம் ஆகிய இவ்வேழும் கனியிலுண்டாகும் எழு தாதுக்கள்' என்று ஆயுர்வேதப் பிரகாசம்.

(1) பொன்னின் பொதுவான குணங்களாவன: ஆயுளைவிருத்தி செய்யும்· லக்ஷ்மீகரம்· தேஹகாந்தி புத்தி ஸ்ம்ருதி யென்னும் ஞாபகசக்தி இவைகளையும் தரும்· எல்லா வியாதிகளையும் தீர்க்கவல்லது; அணிபவரைப் புனிதமாகச் செய்யவல்லது· பூததோஷங்களைப் போக்கக்கூடியது· காமேச்சையை விருத்தி செய்வது· ஆரோக்கியத்தையும் சரீரபுஷ்டியையும் மேலோங்கச் செய்யும். (2) வெள்ளியின் குணங்களாவன: விஷஹரம்· கிழத்தனத்திலும் தேஹம் இளைப்புறுமற் செய்யும்· மேஹ ரோகஹரம்· இளைத்த தேஹங்களைப் புஷ்டியாக்கும்· இந்த்ரியங்களுக்கு வலிமையைக் கொடுத்து அவற்றை மிகத் தெளிவுறச் செய்யும்; வீர்யத்தை விருத்தி யாக்கும்.—3.

பொன் வெள்ளிகளின் பொது குணங்கள்.

(1) இரஜோ குணத்தினலாகிய யாதொரு தாதுவினுல் ஆதியில் பிரம்மாண்டம் என்கிற அண்டகோசம் மூடப்பட்டிருந்ததோ அந்த ஸ்வர்ணம் பிராக்ருதம எனப்படும். அது தேவர்களுக்கும் கிடைப்பதரிது. (2) பொன் மயமான யாதொரு ஜராயுவினுல்[2] மூடப்பட்டுப் பிரம்மதேவன் உண்டானுனே அது மேருபர்வதமாக ஆயிற்று· அப்பொன் ஸஹஜம் எனப்படும். (3) அக்னி தேவன் தான் உட்கொண்ட சிவனது வீர்யத்தை அதன் கடும் தேஜஸ்ஸைத் தாங்காதவனுய் வெளியிற் கக்கிவிட அவ்வீர்யமனைத்தும் ஸ்வர்ணமாக ஆய்விட்டது· அவ்விதமான பொன் அக்னிஜம் எனப்படும். இம்மூன்றுவித ஸ்வர்ணங்களும் தேவாம்சம் பெற்ற அபூர்வமான இனங்கள்· இவை பதினாறு மாற்று நிறமுள்ளவை· இவற்றைத் தேகத்தில் அணிந்து கொண்டிருந்தாலே கிழத்தனமோ இறப்போ அவனுக்குண்டாகாது. (4) ஆங்காங்கு மலைகளிலுள்ள கனிகளில் உண்டாகும் பொன் கனிஜம் எனப்படும்· அது பதினான்கு மாற்றுள்ளதாய் உட்கொள்ளப்படின் எல்லாப் பிணிகளையும் தீர்க்கவல்லதா யிருக்கும். (5) இரஸேந்திரம் என்கிற பாதரஸத்தைக் கொண்டு வாத முறையில் உற்பத்தி செய்யப்பட்ட பொன் வேதஜம் என்று வழங்கப்படும். அவ்விதமான

பிராக்ருதாதி ஸ்வர்ணங்கள்.

---

1. உலகப்படைப்புக்கு இரஜோகுணம் காரணமாதலால் பிரம்மதேவன் உண்டாவதற்கு ஆதாரமாயிருந்த அண்டமும் அக்குணமுள்ளதாயிருந்த தெனப்படுகிறது. 'பரமாத்மா அநேகவிதப் பிரஜைகளைத் தன் தேஹத்திலிருந்து படைக்க விரும்பி ஆதியில் ஜலத்தைப் படைத்தார்; அதில் தன் வீர்யத்தைவிட அது ஸ்வர்ணமயமான அண்டமாக ஆயிற்று· அது ஆயிரம் சூரியன் ஞதித்தாற் போலப் பிரகாசித்தது· உலகமனைத்தையும் படைப்பவரான பிரம்மதேவன் அதில் உண்டானுன்.' என்று மனு ஸம்ஹிதை.

2. கருப்பத்திற் சிசுவைப் போர்த்திருக்கும் பைசவ்வுப் பை ஜராயு எனப்படும்.

பொன் மிகவும் சுத்தமானது· மிகச் சிறந்த இர ாயனமுமாகும். 4 9.

பொன்னின் குணங்கள்.

ஸ்வர்ணம் ஸ்நிக்த்தமானது · மேதை யென்னும் விசேஷ புத்தியை விருத்தி செய்வது · விஷங்களேயும் கிருத்ரிம விஷங்களேயும் நிவ்ருத்தி செய்யும் · பிருஹ மணத்திலும் விருஷ்யம் என்னும் குணத்திலும் முதன்மையானது· யக்ஷர்களாலுண்டாகும் தொந்தரவுகளேயும் உன்மாத மென்னும் பித்தையும் நிவ்ருத்திப்பதிற் சிறந்தது · தேகத்திலுண்டாகும் மற்றும் பிணிகளேயும் பரிஹரிக்க வல்லது · ஞாபகசக்தியை வலுப்படுத்தும்; ஸந்நிபாததோஷங்களே நீக்கும்· நாக்கில் நற்சுவையைத் தரும் · அக்னிதீபானம் செய்யும் · விபாகத்தில் மதுரமானது. 10.

அசுத்த ஸ்வர்ணத்தாலுண்டாகும் தீமை.

ஸ்வர்ணத்தைச் சுத்தம் செய்யாமலும் முறைப்படி பஸ்மம் செய்யாமலும் உபயோகித்தால் பொதுவாக தேஹா ரோக்கியம் கெடும் · வீர்யம் சீரழியும் · உடல்வன்மை கெடும் · பலவகையான ரோகங்களேயும் அவ்வித ஸ்வர்ணம் உண்டுபண்ணும் · ஆகவே அதைச் சுத்தம் செய்தே உபயோகிக்கவேண்டும். 1.

ஸ்வர்ண சுத்தி முறை.

ஸ்வர்ணத்தை முள்ளால் குத்தக்கூடியவாறு மிக மெலிய ரேக்குகளாக அடித்து சிறிது கந்தகம்[2] கூட்டி அகலில் வைத்து அதை மற்ஞேர் அகலால் மூடி சீலைசெய்து, தணலில் வைத்து அரை யாமநேரம் நன்ருக ஊதி யெரித்தால் பொன் சுத்தமாம் · சிறந்த நிறத்தையும் பெறும். 12.

---

1. சிறந்தஸ்வர்ணம், லப்புஸ்வர்ணமும்: காய்ச்சினுல் சிவப்பம், வெட்டினுல் உட்புறம் வெளுப்பும், உறைத்தால் குங்கும நிறமும் உடையதாயிருந்தால் அந்தப் பொன், வெள்ளி செம்புகளின் கலப்பில்லாத தென்றறியவும், மேலும் அது ஸ்நிக்த்தமாகவும், நயப்புள்ளதாகவும், கனமாகவும் இருக்கவேணும். ஆயுர்வேத ப்ரகாசம்.

2. 'படு தாது' என்கிற மூலபதத்திற்கு கந்தகம் என்று 'ரஸத்தி ஸமுச்சய போதிநி' என்னும் வியாக்யாநம். படு என்ருல்உப்பு· தாது என்ருல் மனச்சிலை· இவ்விரண்டையும் கூட்டி என்றும் பொருள்கூறலாம். படு தாது என்ருல் படிக்காரம் என்றும் சிலர்.

3. பஞ்சம்ருத்திகைகளே எலுமிச்சம்பழச்சாற்ருல் ஆட்டி, அக்குழம்பினுல் பொன்ரேக்குகளேப் பூசி, பெரிய கும்மட்டியில் இருபது ரட்டிகள் இட்டு, காற்றில்லாத இடத்தில் நன்ருகக் காய்ச்சியினுல் பொன் சுத்தமாவதோடு சிறந்த நிறத்தையும் பெறுகின்றது; அவசியமானுல் ரட்டிகளை இன்னும் அதிகமாமவும் உபயோகிக்கலாம்: ஆயுர்வேதப்ரகாசம். [புற்றும ் ஒட்டடை, ரவி செங்கற்பொடி உழமண் ஆகியவை பஞ்ச மருத்திகை.]

நான்கு வகையான உலோஹ பஸ்மமுறைகள்.

(1) எல்லா உலோஹங்களையுமே இரஸபஸ்மத்தைக் கொண்டு மாரணம் செய்வது சிறந்த முறை[1] (2) மூலிகைகளைக்கொண்டு பஸ்மம் செய்வது மத்திம முறை. (3) கந்தகம் முதலியவற்றால் மாரணம் செய்வது அதம முறை ஈம. (4) தாளகத்தைக் கொண்டு உலோஹங்களை பஸ்மம் செல்வதால் அப்பஸ்மம் துர்க்குணத்தைப் பெறும். 13 13½

ஸ்வர்ண பஸ்ம முறைகள்.

(1) முள்ளால் குத்தியெடுக்கக் கூடியவாறு ஸ்வர்ணத்தை ரேக்குகளாக அடித்து கொடிமாதுளைச் சாற்றிற் குழைத்த இரஸபஸ்மத்தினால் அந்த ரேக்குகளைப் பூசி புடம்போடவும்· அவ்வாறு பத்து புடங்களிட ஸ்வர்ணம் பஸ்மமாகும். (2) பொன்னை நன்கு உருக்கவும்· பொன்னினெடை இரஸபஸ்மம் கூட்டவும்· பிறகு கொடிமாதுளைச் சாற்றில் ஆட்டியெடுத்த வி கத்தையும் கூட்டி பன்னிரண்டு முறை புடமிட பொன் மிகச்சிறந்த குங்குமநிறமான பஸ்மமாகும். (3) ஒரு ப கு பொன் · கால் பங்கு இரஸபஸ்மம் · இவற்றை எதேனும் ஒரு புளிப்புச் சாற்றால் அரைத்துப் புடமிடவும்· இவ்விதம் எட்டு மு ற புடமிட ஸ்வர்ணம் பஸ்மமாகும்.[2] 14 17.

ஸ் ர் த்ருதி.

(1) தவளையின் எலும்பு கொழுப்பு வெண்காரம் அலரிவேர் மழைக் காலத்திலுண்டாம் இந்திரகோபமென்னும் பட்டுபோன்ற பூச்சி இவற்றைச் சூர்ணம் செய்து உருக்கி யெடுத்த ஸ்வர்ணத்தில் தூவிவிட்டால் அப்பொன் உருகிய நிலையிலேயே வெகு நேரம் இருக்கும். (2) இந்திரகோபப்பூச்சிகளை தேவதாளிக்கனியின் ஸத்தில் பாவனை செய்து அதை உருக்கிய பொன்னில் விட்டால் வெகு நேரம் பொன் நீரைப்போலவே திரவமான நிலைமையில் இருக்கும். 18 19.

ஸ்வர்ண ப ம குணங்கள்.

முற் கூறிய ஸ்வர்ணபஸ்மத்தை இரண்டு குன்றுமணி பெடை த்ரிகடு சூர்ணத்துடன் நெய்யின் அநுபான, தோடு கலந்து உட்கொள்ளவும் · இது க்ஷயரோகம் அக்னிமாந்த்யம் என்னும் பசியின்மை ச்வாஸம் காஸம் அரோசகம் பாண்டுரோகம் கடுமையான கிரஹணீ ரோகம் கிருத்ரிம விஷ கோளாறுகள், மற்றும் பலவகையான விஷ

---

1 உலோஹங்கள் இரஸத்துடன் கூடினால் அவற்றிலுள்ள தோஷங்கள் நீங்கும்; இரஸமும் உலோஹங்களின் சேர்க்கையினால் தோஷம் அற்றதாகும். ஆகையால் எந்த லோஹத் தயும் இரஸம் சேர்க்காம · பஸ்மம் செய்யலா ாது ' இரஸ ஸ கேத கலி ா.

2. எந்த லோஹத்தின் பஸமத்தையானாலும் எலுமிச்சம்பழச் சாற்றில் குழைத்து இரும்பாலான த்தியில் தட அது செ ணிற ம ட்தால் அதைக் ொண்டு பஸ்மம் ன்கு நி ற வேறியதாகத் தெரிந்து ொள்ளவே டும்: இரஸஸ கேத கலி ா.

ம்பந்தமான விகார கள் ஆகியவற்றைப் பரிஹரிக்க உதவும் மேலும் ஓ ரதாதுவை இது விருத்தி செய்யும் தேஹவலிமை யையும் அதிகரிக்கச் செய்யும்.[1] 20

## இரஜதம் வெள்ளி.

மூன்றுவித வெள்ளிகள்.

வெள்ளியானது ஸஹஜம் கநி ம் க்ருத்ரிமம் என்று மூவகைப் படும். இவற்றுள் க்ருத்ரிமத்தினும் கநிஜம் சிறந்தது அதைக் காட டிலும் ஸஹஜம் சிலாக்கிய மானது. (1) கலை முதலிய மாமலைகளில் உண்டான வெள்ளி ஸஹஜ ரஜதம எனட் படும். அ த மனிதர் பரிசித்தாலே வியாதிகள் நீங்கும். (2) இமாலயம் முதலான பர்வதங்களில் உண்டாகும் வெள்ளி கநிஜ ரஜதம் என்று வழங்கப்படுகிறது. அது மிகச் சிறந்த இரஸாயந குணமுடையது. (3) ஸ்ரீராமனுடைய பாதுகைகளின் ஸம்பந்தத்தினால் ங்தெந்த வங்கம் வெள்ளியாக மாறிவிட்டதோ அது க்ருத்ரிம ரஜதம எனக் கூறப்படுகிறது இதற்குப் பாதரஜதம் என்றும் பெயருண்டு இது எல்லா ரோகங்களையும் தீர்க்கும். 21 25.

சிற த வெள்ளியின் இலக்ஷண ள்.

கனமாயிருத்தல் நிர்மலம் குருத்தன்மை ஸ்நிக்த்தத்தன்மை காய்ச்சினும் வெட்டினும் வெண்மையாயிருத்தல் மிருதுத்தன்மை நிறம் முதலியதில் ச குபோன்றிருத்தல் வழுவழுப்பு கொப்புளம் அல்லது புள்ளிகள் இல்லாதிருத்தல் ஆகியவை சிறந்த வெள்ளியின் குணங் ள். 26.

வெள்ளியின் தோஷங்கள் எட்டு.

எந்த வெள்ளியைக் காய்ச்சினால் சிவப்பு அல்லது பசுமை அல்லது கருப்பு ஆகிய நிறத்தை அது பெறுகின்றதோ ரூக்ஷத்தன்மையையும் பளுவின்மையையும் காய்ச்சியபிறகு பருத்திருப்பது போன்ற தோற்றத்தையும் நயப்பின்மையையும் அடைகின்றதோ அடிக்கும்போது பிளவுறுகின்றதோ அது தோஷமுள்ள வெள்ளியாம் ஆகவே வெள்ளிக்கு முற்கூறிய எட்டு தோஷங்கள் உண்டு. 27.

---

1. இத பிறகு பலஞ் ச வீர்யம் ஹரதே ச ' என்கிற ச்லோகம் அதி ப்படிய கவும் பிரக்ஷிப்தமாகவும் தெரிவதால் அவ்விஷயம் இங்கு மொழிபெயர்க்கப்படவில்லை. இதே விஷயம் ' அசுத்தஸ் ர்ணத்தால் உண்டாகும் தீ மைகள் '' என்று இதற்கு முன் கூறப்பட்டுள்ளது.

2. வங் ம் முதலியதோடு இரஸத்தைக் கூட்டுவதால் வெள்ளி போன்ற வஸ்து உண்டாகும் து க்ருத்ரிம ரஜத ' எனப்படும். ஆயுர்வேத ப்ரகாசம்.

3. டினத்தன்மை, ரூக்ஷத்தன் ம, சிவப்பு பசுமை, செதிள் செதிகளாக விறிதல் இலேசாயிருத்தல் ஆகியவை வெள்ளியி தோஷங்கள்: ஆயுர்வே த ப்ர ாசம்,

வெள்ளியானது மதுர விபாகமுள்ளது[1] துவர்ப்பு புளிப்பு ஆகிய சுவைகளுடையது• சீத வீர்யம்• மலம் முதலியதை நெகிழச் செய்வது• லேகநம் என்னும் தோஷங்களைத் தூண்டி வெளிபடுத்தும் குணமுள்ளது நாக்குக்கு நற்சுவையைத் தருவது• ஸ்நிக்த்தம் வாத கபஹரம்• ஜாடாராக்னியை உத்தீபநம் செய்வது• தேஹபலத்தை மிக்க விருத்தி செய்வது• நீண்ட ஆயுளைத் தருவது• புத்தியை விருத்தி செய்வது ஆகியவையாம்• மேலும் குணத்தில் குருவானது• இரஸாயந முறைப்படி யுபயோசிக்க எல்லா வியாதிகளையும் தீர்க்க வல்லது. 28 29

வெள்ளியின் பொது குணங்கள்.

வெள்ளியைச் சுத்தி செய்யாமலும் பஸ்மமாக்காமலும் உபயோகித்தால் அது ஆயுளைக் குறைக்கும்• புருட வீர்யத்தையும் தேஹ வன்மையையும் போக்கும்• உடலில் அழற்சியையும் மலபந்தத்தையும் மற்றும் பல ரோகங்களையும் உண்டுபண்ணும்• ஆகவே வெள்ளியைச் சுத்தி செய்வதோடு அதை பஸ்மமாச் செய்தும் உபயோகிக்க வேண்டும். (1) வெள்ளியை உருக்கி நல்லெண்ணெயிலும் மோரிலும் பசுமூத்திரத்திலும் கொள்ளைப் பக்குவம் செய்தெடுத்த காடியிலும் முறையே எவ்வேழு தடவை ஊற்றவும். இந்தச் சுத்திமுறை பொன் முதலியவற்றின் ரேக்குகளைச் சுத்தி செய்யவும் சிறந்ததாம். (2)வெள்ளியை உருக்கி அதில் சிறிது துத்தநாகப் பொடியையாவது வெண்காரப் பொடியையாவது தூவினால் வெள்ளி சுத்தமாகும். (3) வெள்ளியை உருக்கி வாலுளுவைத் தைலத்தில் மூன்றுமுறை வார்த்தெடுத்தாலும் அது சுத்தமாகும் (4) ஒரு கப்பரையில் சாம்பலும் சுண்ணும்பும் கூட்டி அதனால் சுற்றிலும் வரம்பு கட்டவும்• ஈயம் கலந்துள்ள வெள்ளியை அவ்வரம்பினிடையில் வைத்து ஈயம் முற்றிலும் பிரிந்து அழியும் வரையில் நெருப்பில் வைத்து அடிக்கடியும் ஊதவும்• இவ்விதம் சுத்தி செய்த வெள்ளியை இரஸௌஷத முறைகளில் உபயோகிக்கலாம். 30 341.

அசுத்த வெள்ளியாலுண்டாம் தீக்குணங்கள்.

வெள்ளியின் சுத்திமுறைகள்.

(1) எலுமிச்சம்பழச்சாற்றையும் பாதரஸத்தையும் சேர்த்து ஆட்டி அக்குழம்பினால் வெள்ளி ரேக்குகளைப் பூசவும்• ஒரு மூசையினுள் அடியில் சிறிது கந்தகம் வைத்து அதன்மீது இவ்வெள்ளிரேக்கை வைத்து மீண்டும் சிறிது கந்தகத்தை அதன்மீது போடவும். பிறகு அதை வாலுகா யந்திரத்தில் வைத்து ஒருநாள் முடியவும் பெருந்தீயிட்டு

இராஜத பஸ்ம முறைகள்.

---

1. விபாக: ஆயுர்வேத முறைப்படி எப்பொருளும் உண்ணும்போது நாக்கில் ஒருவித சுவையுள்ளதாகவும், குடலில் ஜீர்ணமாகும்போது வேறுவித சுவையுள்ளதாகவும் இருக்கும். அவ்விதம் குடலில் தோன்றும் இரஸமே விபாக ரஸம் எனப்படும்.

எரிக்கவும். பிறகு அதை ஆறிப்போனவுடனே யெடுத்து அதி லுள்ள மெழுகை வெளியில் எடுத்து அத்துடன் சிறிது தாளகமும் காடியும் சேர்த்துப் புடமிடவேண்டும். இவ்விதமாகப் பன்னிரண்டு புடங்களிட வெள்ளி பஸ்மமாகும். (2) ஸ்வர்ணமாக்ஷிகப் பொடியை யும் கொடிமாதுளைச் சாற்றையும் ஆட்டி அதை வெள்ளிரேக்கு களில் தடவி புடமிடவும். இவ்விதம் முப்பது புடம் போட பொன் நன்கு பஸ்மமாகும். (3) கள்ளிப்பாலில் பொன் நிமிளையை பாவனை செய்யவும். அந்தக் களிம்பை வெள்ளி ரேக்குகளின்மேல் நன்று கப் பூசி முறைப்படி புடமிட பொன் நன்கு பஸ்மமாகும். (4) பஸ்ம மிடவேண்டிய வெள்ளிக்கு நாலிலொரு பங்கு சுத்த தாளகம் எடு த்து, அதை எலுமிச்சம்பழச்சாற்றால் ஆட்டி அக்களிம்பை வெள்ளிரேக்குகளின் மேல் பூசவும். பிறகு இந்த அந்த மூஷையி லிட்டு[1] உலர்த்தி முப்பது வறட்டிகளைக் கொண்டு புடமிடவும். இவ்வாறு பதினாலு புடங்களிட்டால் வெள்ளி நிருத்தமா[2] பஸ்ம மாகும். 35 41.

இரஜதத்ருதி அல்லது வெள்ளித் திராவகம்.

தேவதாளி யென்னும் மூலிகையைச் சிறுநீரில் ஏழு முறை பாவனை செய்தெடுக்கவும். பிறகு அம்மூலிகையை உலர்த்தி நன்கு சூர்ணம் செய்து உருக்கிய வெள் ளியிலாவது பொன்னிலாவது அச்சூர்ணத்தை ஆவாபம் செய்ய உருகிய அந்த உலோஹங்கள் திரவமான நிலையிலேயே இருக்கும். 42.

இரஜத ரஸாயனம்.

நன்கு பஸ்மம் செய்த வெள்ளி ஒரு பங்கு அதற்குச் சம யெடை அப்ரக பஸ்மம் அதே எடை தாம்ர பஸ் மம் இவ்வனைத்துக்கும் சமயெடை த்ரிகடு சூர்ணம் த்ரிகடு சூர்ணத்துக்குச் சமமாகத் திரிபலா சூர்ணம் ஆக இவற்றைக் கூட்டி தேனும் நெய்யும் கலந்து விடியிற்காலையில் உட்கொள்ளவும். இவ்விதம் செய்ய க்ஷயரோகம் பாண்டு ரோகம் மஹோதரம் மூலம் ச்வாஸரோகம் காஸரோகம் நேத்திர ரோகங்கள் ஆகியவைகளும் ஸகல பித்த ரோகங்களும் தீரும். 43.

## தாம்ரம் செம்பு

தாம்ரம் இரண்டு விதம்.

தாம்ரமானதும் ம்லேச்சம் என்றும் நேபாளம் என்றும் இருவகை ப்படும். அவற்றுள் நேபாள தாம்ரம் சிறந்தது. நேபா ளதேசத்தைத் தவிர்த்து மற்ற விடத்துக் கனிகளி லுண்டாகும் செம்பு ம்லேச்சம் எனப்படுகிறது.

---

1. அந்த மூஷை இதுவே வஜ்ரமூஷை யென்றும் கூறப் படும். பத்தாம் அத்தியாயத்தில் விஸ்தாரம் காண்க.

2. நிருத்தம் எந்தச் சரக்கும் பஸ்மமாகச் செய்யப்படும் பக்ஷத் தில் மீண்டும் அது பழைய நிலைமையை அடைய முடியாமற் போகும். அவ்விதம் செய்யப்படும் பஸ்ம முறை நிருத்தம் எனப்படும்.

3. ஆவாபம். எட்டாம் அத்தியாயத்தில் பரிபாஷைகளைப்

(1) மலை தாமரமானது வெளுப்பு கறுப்பு சிவப்பு ஆகிய நிறங்கள் கலந்ததாகவும் அதிக வாந்தியுண்டுபண்ணுவதாகவும், அதிக கடினமாகவும் எவ்வளவு கழுவிய போதிலும் மீண்டும் கருநிறம் பெறுவதாகவும் இருக்கும். (2) வெகு ஸ்நிக்த்தமாகவும் மிருதுவாகவும் செந்நிறம் பொருந்தியதாகவும் வலிய அடிகளைத் தாங்கி விறிவுற்றதாகவும் பளுவுள்ளதாகவும் எவ்வித மாசுகளற்றதாகவும் உள்ளது பேளதாம்ரம் இது குணத்திற் சிறந்தது. நிறத்தில் வெளுப்பு கறுஞ்சிவப்பு, இலேசாயிருத்தல் எளிதிற் சிதைவுறுந்தன்மையதாயிருத்தல் ஸூக்ஷ்மமான உருவமுடைமை சிதள்களோடு கூடியிருத்தல் ஆகிய தன்மைகளைப் பெற்ற தாம்ரம் இரஸௌஷத முறைக்குத் தகுந்ததல்ல. 44 4.

தாம்ரத்தின் குணங்கள்.

செம்பானது சுவையில் கைப்பும் துவர்ப்பும் உடையது விபாகத்தில் புளிப்பும் மதுரரஸமுமுள்ளது வீர்யத்தில் உஷ்ணமானது பித்தம் கபம் இவற்றைப் பரிஹரிக்கும் குடலைப்பற்றிய நோய்கள் அல்லது மஹோதரம் குஷ்டம், ஆமதோஷம் கிருமிரோகம் இவற்றைத் தீர்க்கும் வாந்தியையும் விரேசனத்தையும் உண்டுபண்ணி குடலைச் சுத்தம் செய்யவல்லது விஷத்தை வெளிப்படுத்தும் யக்ருத்தாலீ யென்னும் கல்லீரல் வீக்கத்தைப் போக்கும் பசியை விருத்தி செய்யும் மூலரோகம் க்ஷயம் பாண்டு ரோகம் இவற்றையும் தீர்க்கும் நேத்திர ரோகங்களில் உபயோகமானது லேகநம் என்னும் தோஷங்களைக் கல்லி வெளிப்படுத்தும் குணத்திற் சிறந்தது. 48.

அசுத்த தம்ரத்தாலுண்டாம் தீங்குகள்

(1) சுத்தி செய்யப்படாத செம்பானது ஆயுளைக் குறைக்கும் உடலின் ஒளி வீர்யம் தேஹவன்மை இவற்றைப் போக்கிவிடும் வாந்தி மூர்ச்சை தலைச்சுற்றல் வாயில் நீரூறல் ஆகிய துர்க்குணங்களையும் உண்டுபண்ணும். பஸ்மம் செய்யப்படாத தாம்ரத்தை யுபயோகித்தால் குஷ்டரோகத்தையும் சூலை யென்னும் வயிற்றுளைத்தலையும் அது உண்டுபண்ணும். (2) குமட்டல் பேதி தலைச்சுற்றல் தாபம் மயக்கம் ஆகியவை தம்ரத்தின் ஐவித தோஷங்களால் உண்டாகும் துர்க்குணங்கள். அவை கடுமையானவை. சுத்தி செய்தால் அது இத் தோஷங்கள் நீங்கி இரஸத்திலும் வீர்யத்திலும் விபாகத்திலும் அமுதத்திற்குச் சமானமாகும். 49 – 50

தாம்ர சுத்தி முறைகள்.

(1) தாம்ரத்துடன் யவக்ஷாரம் முதலிய க்ஷாரங்களையும் காஞ்ஜிகம் என்னும் காடியையும் கூட்டி நன்றாக் காய்ச்சி யுருக்கி சிறிது காவித்தூள் சேர்த்து எருமை மோரிலும் சாணத்திலும் அதை ஊற்றவேண்டும்:- இவ்விதம் ஏழு முறை செய்ய தாம்ரமானது பஞ்ச தோஷங்கள் நீங்கியதாம். (2) பளபளப்புள்ள செப்பு ரேக்குகளின்மீது இந்துப்பை எலுமிச்சம்பழச்சாற்றால் அட்டிப் பூசி நன்றாக அக்னியில் இட்டு

தி காடியிற் போடவும் ' இவ்விதம் எட்டுமுறை செய்தால் செம்பு நன்கு சுத்தமாம். (3) எலுமிச்சம்பழச்சாற்றால் இந்துப்பை ஆட்டி அதைச் செப்புரேக்குகளின் மீது பூசி நெருப்பிற் காய்ச்சி நொச்சியிலைச்சாற்றில் அவற்றைத் தோய்க்கவும் ' இவ்விதம் எட்டு முறை செய்தால் தாம்ரம் சுத்தமாகும். (4) செப்புத்தகுட்டைப் பசுமூத்திரத்திலிட்டு கடுந்தீயிட்டுச் சமைக்க அது சுத்தமாகும். 51 54

தாம்ரபஸ்ம முறைகள்.

( ) இரஸம் கந்தகம் இவற்றை எலுமிச்சம்பழச்சாற்றால் ஆட்டி செப்புத்தகடுகளின்மீது பூசி அத்தகடுகளை அகலில் வைத்துக் கவசமிட்டு மூன்று முறை புடமிட செப்பு பஸ்மமாகும். (?) பஸ்மம் செய்த தாம்ரத் த ஏதேனும் ஒரு அம்லவஸ்துவை விட்டு ஆட்டி உருண்டையா ச் செய்து அதை ஒரு கருணைக்கிழங்கினுள் வைத்து மேலே நன்றாக மண் முதலியதால் பூசி உலர்த்தி அப்பால் கஜ புடத்திற் பக்குவம் செய்யவும் ' இவ்விதம் செய்வதால் செம்புக் குள்ள எல் ாத் தோஷங்களும் நீங்கி ஸந்நிபாத தோஷங்களையும் அது நிவ்ருத்தி செய்யக் கூடியதாகும்; வாந்தி தலைச்சுற்றல் விரேசனம் ஆகியவற்றையும் அவ்வித பஸ்மம் உ டுபண்ணுவதில்லை [1]. (3) மெல்லிய செப்புத்தகடுகளைப் பசுவின் மூத்திரத்தில் ஐந் யாமநேரம் போட்டு வைத்து எடுத்து ஒரு பாத்திரத்தில் அதற்குச் சமயெடை இரஸமும் இருமட கு கந்தகமும் சேர்த்து அவ்விர டையும் புளியரணைச்சாற்றால் அரைத்து அக்கல்கத்தைச் செப்புத்தகடுகளின்மேல் பூசி ஒரு பாத்திரத்தினுள் அதை வைத்து சீலை மண் செய்து ஒரு யாமகாலம் கடுந்தீயிட்டு எரி கவும் ' அவ்விதம் செய்ய செம்பு பஸ்மமாகும்; அதை மு றப்படி வியாதிகளில் உபயோகிக்கலாம். 55 60

ஸோம ாத தாம் .

ப குவம் செய்யவேண்டிய தாம்ரத்திற்குச் சம அளவாகச் சுத்த ரஸம் எடுத்துக்கொள்ளவும் ' அதே எடை சுத்த கந்தகமும் அதிற் பாதியெடை தாளகமும் தாளகத்திற்பாதி யெடை மனச்சிலையும் கூட்டி இரஸம் முதலிய நான்கையும் வெகு வழவழப்பான கஜ்ஜலியாக ஆட்டியெடுக்கவும் ' மிகக் கறுப்பான அக்க ஜலியை யந்திரவிதி அத்தியாயத்திற் கூறப்படும் கார்ப்பயந்திரத்தினுள் அடியில் வத்து அதன்மீது செப்புரே குகளை வைக்கவும் ' அப்படியே மாற்றி மாற்றி இவற்றை ஒன்றன்மீது ஒன்றாக வத்து மூடியிட்டு ஒரு யாமகாலம் எரித்துப் பக்குவம் செய்யவேணும் ' பிறகு தானாகவே ஆறியதும் உள்ளே பக்குவமாயிருக்கும் செம்பையெடுத்து நன்றாகப் பொடி செய்து கொள்ளவும். இவ்விதம் ப குவம் செய்த

தாம்ரத்தை இரண்டு வல்லங்களின் அளவாக அந்தந்த ரோகத்தின் பரிஹாரத்திற்காக உபயோகிக்கப்படும் சரக்குகளை அநுபான மாகக்கொண்டு உட்கொள்ளலாம்; அது பரிணாமசூலை மஹோதரம் வயிற்றுளைத்தல் பாண்டுரோகம் ஜ்வரம் குல்மம் ப்லீஹரோகம், யக்ருத் என்னும் கல்லீரல் வியாதி க்ஷயம் பசியின்மை மேஹ ரோகங்கள் மூலரோகம், கடுமையான கிரஹணீரோகம் ஆகிய வற்றைப் போக்கும். இது ஸோமநாத தாம்ரம் எனப்படும். 61 64.

தாம்ர ரஸாயநம்.

பாதரஸம் ஒருபங்கு செப்புத்தகடு இரண்டுபங்கு இவற்றைச் சோற்றுக் கற்றாழைச் சாற்றில் ஊறவைத்து அப்பால் தாம்ரத் தகடுகளுக்குச் சமபாகம் கந்தகம் எடுத்து ஒரு மட்பாத்திரத்தில் அக்கந்தகத்திற் பாதியைப் போட்டு அதன்மீது தாம்ரம் முதலியதை வைத்து மற்றப்பாதி கந்தகத்தையும்தாம்ரத்திற்கு மேலே சேர்த்து அதன்மீது ஒரு அகலை மூடவும்· அவ்வகலின்மேல் சிறிது உப்பைப் பரப்பி, அதன் மேலும் மற்றொரு அகலைக்கொண்டு மூடிவிடவேண்டும். பிறகு நாலு யாமகாலம் தீயிட்டெரிக்கவும். அது ஆறிய பிறகு தாம்ரத்தை யெடுத்து சூர்ணம்செய்து அதில் இரண்டு குன்றுமணி யெடை ஔஷதத்தைத் திப்பிலிப்பொடி தேன் இவ்வநுபானங்க ளோடு பொதுவாக எல்லா வியாதிகளிலும் உட்கொள்ளலாம். இது முக்கியமாக ச்வாஸம் காஸம் க்ஷயம் பாண்டு பசியின்மை அரோசகம் குல்மம் ப்லீஹவீக்கம் யக்ருத் என்னும் கல்லீரல் வீக்கம் மூர்ச்சை யிற்றுளைத்தல் ஆகியவற்றிற்குச் சிறந்த ஔஷதம். மேலும் ஸந்நிபாததோஷத்தாலான வியாதிகளையும் நன்கு நிவ்ருத்தி செய்ம்· ஜ்வரத்திற்கு உசிதமான ஔஷதங்களா லாகிய அநுபானத்துடன் இதைக் கூட்டியுபயோகிக்க தாதுக்களைப் பற்றிய ஜ்வரமும் தீரும். முற்கூறிய அளவின்படி வேறு இரஸௌ ஷதமுறைகளிலும் இரஸாயன முறைகளிலும் இவ்வௌஷதத்தை யும் உபயோகிக்கலாம். 65 69.

## அயஸ அயம்.

### (லோஹம்.)[1]

அயம்.

அயமானது முண்டம் தீக்ஷ்ணம் காந்தம் என்று மூவகைப் படும். $69\frac{1}{2}$.

அவற்றுள் முண்டம் என்னும் லோஹம் மிருது என்றும் குண்டம் என்றும் கடாரம் என்றும் மூன்று விதம்.

முண்ட லோஹம் மூன்று விதம்.

(1) அவற்றுள் மிருதுலேஹம எளிதில் உருகும்· விறிவடையாது· கெட்டியாயிருக்கும்· நயப்பும் மிருதுத் தன்மையுமுடையது· இந்த அயம்

[1] பொன் வெள்ளி, செம்பு, அயம் முதலிய எல்லாவற்றிற்கும் லோஹம் என்னும் பெயர் பொதுவாக வழங்கப்படுவதோடு அயத் திற்கு முக்கியமாக அப்பெயர் வழங்கப்படும்.

சிறந்தது. (2) சம்மட்டியால் அடிக்கப்படுகையில் எது எளிதில் அகலுவதில்லையோ அது குண்டலோஹம் எனப்படும்· இது குணத்தில் மத்திமமானது. (3) அடிக்கப்படுகையில் எது எளிதில் விறிந்து விடுகிறதோ பிளந்தவிடத்தில் கருநிறமாயிருக்கின்றதோ அது டார லோஹம் எனக் கூறப்படும. இது இழிவான குணமுள்ளது. 70 72.

முண்ட லோஹத்தின் கு ங்கள். முண்டலோஹமானது அதிலும் முக்கியமாக மிருதுலோஹம் கபதோஷம் வாததோஷம் சூலமென்னும் வயிற்று நோய் மூலரோகம் ஆமதோஷம் மேஹரோகம் காமாலை பாண்டு குல்மம் ஆமவாதம் என்னும் கீல்வாதநோய் மஹோதரம் ஆகியவற்றைத் தீர்க்கும்· மேலும் டாராக்னியை விருத்தி செய்யும்· சோபமென்னும் வீக்கத்தைப் போக்கும்· இரத்தத்தை விருத்திசெய்யும்· குடலைச் சுத்திசெய்யும்.—73.

அசுத்த லோஹ. திலுண்டாம் தீங்குகள். சுத்தி செய்யப்படாத அயம் ஹிதமானதல்ல. அதைப்பயோகித்தால் அது ஆயுளையும் தேஹவன்மையையும் தேஹகாந்தியையும் நிச்சயமாய் ஒடுக்கிவிடும். இருதயத்தில் பீடையையும் உடலுக்குப் பொதுவாகச் சுகவீனத்தையும் வேறுவித நோய்களையும் அம துண்டுபண்ணும். ஆகவே லோஹத்தைச் சுத்தி செய்தே பயோகிக்க வேண்டும். 74.

தீக்ஷ்ணலோஹ ஆறுவிதம். தீக்ஷ்ணலோஹம் என்னும் உருக்கிரும்பானது கரம் ஸாரம், ஹ்ருந்நாளம் தாராவட்டம் வாஜிரம் காலலோஹம் என்று ஆறு வகைப்படும். (1) உரத்ததாகவும் மயிர்ச்சுருள் போன்ற இரேகைகளற்றதாகவும் உடைத்தால் உட்புறத்தில் பாதரஸம் போன்ற ஒளியுள்ளதாகவும் வளைத்தால் விறியுந்தன்மையதாகவும் இருப்பது கரலோஹம எனப்படும். மயிர்ச்சுருள் போன்ற இரேகைக்கு அ க க்ஷயா என்றும் வங்கம் என்றும் 'போகரம் என்றும் மூன்று பெயர்களுண்டு. உலோஹத்தில் சுருண்ட உரோமம் போன்ற யாதோர் உருவமுண்டோ அது தான் போகரம் எனப்படுகிறது.[1] (2) வேகமான தாக்குதலால் எதன் கருக்கு சிதைந்து விடுகின்றதோ அது ஸாரலோஹம் எனப்படுகின்றது· மேலும் ஸாரலோஹம் ஒருவகையான போகரமுள்ளதாகவும் வெண்ணிற நிலத்தில் ற்பத்தியாவதாகவும் இருக்கும். (3) வெண்கறுப்பான நிறமுள்ளதாய் ஆமண் கு விதை போன்று பருத்த போகரமுள்ளதாய் எளிதில் வெட்டமுடியாதவாறு கடினமாயிருப்பது ஹ்ருந்நாளலோஹம் என்று

1. போ ரம் உ.ரு கிரும்பில் பளபளப்பான கா தியோடு யிர்ச்சுருள் அல்லது மயிரிழை போன்று துலங்கும் ஒருவித சாயை.

வழங்கப்படும். (4) வஜ்ரத்திற்கு இருப்பவைபோன்ற போகரங்களோடும் ஸூக்ஷ்மமாகவும் அடர்த்தியாகவுமுள்ள இரேகைகளோடும் கூடியதாய் கறுத்த உருவமுமுள்ளதாயிருக்கும் தீக்ஷ்ணலோஹம் வாஜிரம எனக் கூறப்படுகிறது. (5) கறுத்த நீலச்சாயையுடையதாய் வெகு அழுத்தமானதாய் மழமழப்பாய் பாரமுள்ளதாய் பளபளப்பாய் சம்மட்டியால் பலமாக அடித்தாலும் ஒடியாத கருக்குள்ளதாயுமிருப்பது நால லோஹம் எனப்படுகிறது. 75 81

தீக்ஷ்ண லோஹத்தின் குணங்கள்.

(1) காலோஹமானது[1] குணத்தில் ரூக்ஷமானது; விபாகத்தில் மிகவும் மதுரமாயிருக்கும்; சீதவீர்யம்; சிறிது கைப்பும் உஷ்ணகுணமும் உள்ளது; கபஹாரம்; பித்தஹாரம்; குஷ்டம் மஹோதரம் ப்லீஹரோகம் ஆமதோஷம் பாண்டுரோகம் இவற்றில் உபயோகமானது; சூலம் என்னும் வயிற்றுநோய் யக்ருத் என்னும் கல்லீரலைப்பற்றிய வியாதிகள் க்ஷயம் இவற்றைத் துரிதமாக நிவ்ருத்திக்கவல்லது; மூத்தனத்தை எளிதில் வராமல் தடுக்கும்; மேஹரோகங்கள், ஆமவாதம் இவற்றையும் தீர்க்கும்; அக்னிதீபநம் உண்டுபண்ணும்; சிறந்த இரஸாயநகுணமும் பலத்தை விருத்தி செய்யும் தன்மையும் உடையது; மூலரோகத்தையும் அழற்சியையும் போக்கும். (2) கர லோஹத்தினும் மற்ற ஐந்து வித தீக்ஷ்ண லோஹங்களும் ஒன்றைவிட மற்றொன்று மேன்மேலும் முறையே நூறுமடங்கு அதிகமான குணங்களுடையன. 82 83.

காந்தலோஹம் ஐந்து விதம்.

பிராமகம் சும்பகம், கர்ஷகம் திராவகம் உரோம காந்தம் என்று காந்த லோஹம் ஐந்து விதமாம். (1) இவற்றுள் ஒவ்வொன்றும் ஒரு பாரிசத்தில் முகமுடையது[4] இரண்டு முகமுடையது, மூன்று முகமுடையது நான்கு முகமுடையது ஐந்து முகமுடையது எல்லாப் பக்கங்களிலும் முகமுடையது என்று பலவகைப்படும். ஒரே பாரிசத்தில் முகமுடைய காந்தம் குணத்திற் குறைந்தது; இரண்டு

---

1. கரலோஹத்திற்குக் கூறுகிற குணங்கள் 1 பங்கானால் ஸாரலோஹத்தின் குணங்கள் 100-பங்கு; ஹ்ருந்நாளத்தினுடையவை 200-பங்கு; தாராவட்டத்தினுடையவை 300-பங்கு; வாஜிரத்தினுடையவை 400-பங்கு; கால லோஹத்தினுடையவை 500-பங்கு.

2. விபாகம்—குடலில் உணவு பக்குவமாதல்; பாகம் என்றும் வழங்கப்படுகிறது.

3. 'காஸாரம், ஹோத்ராக்ரம் தாராவர்த்தம் பிடம், நால லோஹம், கஜம் என்று தீக்ஷ்ணலோஹம் ஆறுவிதம்'; இரஸஸாரம்.

4. காந்தமானது அதன் எந்தப் பக்கத்தினால் உலோஹத்தை ஆகர்ஷணம் செய்கிறதோ அந்தப் பக்கம் அதற்கு முகம் எனப்படுகிறது. அவை முறையே ஏகமுகம் நீந்தம், த்வி முக காந்தம், த்ரிமுக காந்தம் சதுர்முக காந்தம், பஞ்சமுக காந்தம், ஸர்வதோமுக காந்தம் என்று ஆறுவிதமாக வழங்கப்படும்.

அல்லது மூன்று முகங்களுள்ளது குணத்தில் மத்திமமானது; நான்கு அல்லது ஐந்து முகங்களுள்ளது குணத்திற் சிறந்தது; எல்லாப் பாரிசங்களிலும் முகமுள்ளது மிகவும் உத்தமமானது. (2) அங்ஙனமே அவை ஒவ்வொன்றும் தனித்தனியே பசுமை கறுப்பு சிவப்பு ஆகிய நிறங்களில் ஏதேனும் ஒன்றைப் பெற்றிருக்கும்; முறையே அவற்றில் பிரம்மதேவனும் விஷ்ணுவும் சிவனும் இருப்பதாகக் கருதப்படுகிறது. (3) அவற்றுள் பசுமை நிறமான பீதகாந்தம பரிசவேதியாகவும் [1] கருநிறமான கிருஷ்ண காந்தம் இரஸாயநவேலையிற் சிறந்ததாகவும் செந்நிறமான இரக்த காந்தம் இரஸத்தைக் கட்டுவதிற் சிறந்ததாகவும் உபயோகமாகின்றன. (4) மேலும் பிராமகம் குணத்தில் இகழ்ந்தது; சும்பகம் மத்திம குணமுள்ளது; கர்ஷகம் உத்தமகுணமுள்ளது; திராவகம் அனைத்தினும் குணத்தில் மிகச்சிறந்தது. (1) பிராமகம அருகில்வந்த உலோஹத்தூள்களைத் தன்னைச் சுற்றிலும் சுழலச்செய்யும் காந்தம். (2) சும்பகம் இரும்பை இழுத்துத் தன்னுடன் சேர்த்து ஒட்டிக் கொள்ளச் செய்யும் காந்தம். (3) கர்ஷகம்:—சற்றுத் தூரத்திலுள்ள உலோகத்தைத் தன்னிடம் இழுக்கும் சக்தியுள்ள காந்தம். (4) திராவகம்: உலோகத்தைத் தனது சேர்க்கையால் திரவிக்கச் செய்யும் காந்தம். (5) உரோம காந்தம: பிளவுண்ட விடத்தில் உரோமங்களைப் போன்ற சுணைகள் தோன்றும் காந்தம். (1) பிராமகம் சும்பகம் இவ்விரண்டும் வியாதிநிவாரணத்திற் சிறந்தவை. (2) கர்ஷகமும் திராவகமும் இரஸௌஷத முறையிலும் இரஸாயந முறைகளிலும் உபயோகமானவை. 84 91½.

காந்தம்கிரஹிக்கத்தகுந்த பூமி.

(1) பாதரஸமானது மத்தகஜம்போல் கட்டுக்கு அடங்காதது; அதை அடக்கிக் கட்டுவதற்குக் காந்தம் மாவட்டியெனத் தகுந்தது. (2) விஷயமறிந்தவன் க்ஷேத்திரமறிந்து பெருமுயற்சி கொண்டு அதை வெட்டியெடுக்கவேண்டும். பெருங்காற்றும் வெயிலும் அடித்து வரட்சியடைந்த பூமியிலுள்ள காந்தம் உபயோகமற்றதென விலக்க வேண்டும்.

காந்தலோஹத்தைப் பரீக்ஷிக்கும் நான்கு முறைகள்.

(3) சிறந்த காந்தத்தினாலாகிய பாத்திரத்தில் தண்ணீர் வைத்து அத்தண்ணீரில் எண்ணெய்த் துளியை விட அது தண்ணீரில் பரவாமலிருக்கும். அப்பாத்திரத்தில் ரயத்தைப் பூச அது மணமிழக்கும். அங்ஙனமே வேப்பிலை கல்கத்தைப் பூச அதன் கைப்பு ஒழியும். அப்பாத்திரத்திற் பாலை காய்ச்சினால் அது கோபுரம் போல் பொங்கி யெழும்புமேயன்றி வெளியிற் பொங்கி வழியாது. இவ்விதமான காந்தமே சிறந்தது; வேறுவிதமான இலக்ஷணங்களைப்பெற்றது இகழ்ந்ததாம். 92 94.

---

1. பரிசவேதி பரிசத்தினால் சாரணையில்லாத அயத்தில் சாரணையுண்டாக்கும் தன்மயது; அல்லது இரஸ ரத முறையில் வேதம் என்றும் வேலையைச் செய்வது.

காந்தமென்னும் அயம் மிகவும் உத்தமமான இரஸாயநம்' ஆரோக்கிய நிலைமையிலிருப்பவனுக்கு ஆயுளை மிகவும் விருத்தி செய்யும்' ஸ்நிக்த்த குணமுள்ளது' மேஹரோகஹரம்' ஸந்நிபாததோஷத்தைப் போக்கும்' வயிற்றுளைத்தல் ஆமதோஷம் மூலரோகம் இவைகளைத் தீர்க்கும். மேலும் குல்மம் ப்லீஹரோகம் யக்ருத் என்னும் கல்லீரல் வியாதி க்ஷயரோ ம் பா டுரோ ம் மஹோதரரோகம் ஆகியவற்றையும் பரிஹரிக்கும். சுவையில் ப்பும் சிறிது உஷ்ணகுணமும் விசேஷமாகச் சீதவீர்யமும் உடையது' அன்றியும் அந்தந்த வியாதிகளுக்கு ஏற்ற ஔஷத முறைகளோடு சேர்த்து உபயோகித்தால் எல்லா வியாதிகளுமே இதனுல் தீரும். 9ο.

கா தத்தி பொது குண கள்.

காந்தமென்னும் அயம் தேஹத்திற்குச் சிறப்பான காந்தியைத் தரும்' பாண்டுரோகத்தை வேரறுக்கும்' க்ஷயரோகத்தைத் தொலைக்கும்' கரவிஷத்தைப் போக்கும்' ஸந்நிபாதத்தைத் தீர்க்கும்' பலவகையான குஷ்டங்களையும் பரிஹரிக்கும்' சுரு கச் சொல்லில் எல்லா வியாதி ளையும் தீர்க்கவல்லது' தேஹத்திற்கு வன்மை தரும்' விருஷ்யம்' தி மான வயதை நிலைக்கச்செய்யும்' சிரேஷ்டமான இரஸாயநம்' பூலோகத்திற்கான அமுதம் இதையன்றி வேறில்லை.[1] 111.

கா தத்திற்கு இரஸவிந்து விற் கூறிய கு ங ள்.

## உலோஹத்தின் சுத்தி பஸமாதி முறைகள்.

(1) அநேக வகையான ஔஷத கல்பங்களுக்குள்[2] செம்மையாகச் செய்த உலோஹகல்பமே சிறந்ததாம். ஆகவே எல்லாவகையிலும் உலோஹத்தைப் பஸ்மம் செய்ய முயலவேண்டும். (2) அயத்தை ஐந்து பல களுக்குக் கு றவாகவாவது பதின்மூன்று பலங்களு கு அதிகமாகவாவது ஒரு தடவையில் ப குவம் செய்வது தகாதென்பர் சிலர். (3) முதலில் மந்திர மோதி பிறகுதான் அயத்தைச் சுத்தி முதலியது செய்யவேண்டும்: ஓம் அம்ருதோத்பவாய ஸ்வாஹா என்கிற மந்திரத்தை யோதி உலோஹத்தை பஸ்மம்செய்ய வேண்டும். (4) முற் கூறிய உலோஹவகைகளில் யாவும் முந்தியதினும் பிந்தியது மேன்மேலும் இலக்ஷம் மடங்கு குணத்திற் சிறப்புடையதாம்.

உலோஹ த்தி மார ணதி ளைப் பற்றிய பொது விதிகள்.

1. இந்த விஷயமா ச்லோக மூலத்தில் லோஹபஸ்ம மு ற ளுக்கு இடையில் 110-வது ச்லோகத்திற்குப் பிறகு எழுதப்பட்டிரு கிறது அவ்விஷயம் இவ்விடத்திலேயே இருக்க வே டி து உசிதம். அவ்விடத்தில் ஏதோ ஒழு குத்தவறுதலால் அச்சிடப்பட்டிருக்க வே டும். ஆ வே அந்த 111 ம் ச்லோக விஷயம் 95-வதுக்குப் பிறகு இங்கே எழுதப்பட்டிருக்கிறது.

2. த்ரிபலாகல்பம், சால்மலீகல்ப முதலிய வ. மற்றுமுள்ள ஔஷதக ப ளைப்பற்றி அஷ்டா க ஹ்ருத ம் ல்பஸத்தாநம்பார் .

ஆனால் காந்தலோஹம் மாத்திரம் மற்றவைகளினும் குணத்திற் கோடியத்தனை அதிகச் சிறப்புள்ளதாம்[1]. 96 98.

லோஹ சுத்தி முறைகள்.

(1) அயத்தின் மீது முயல் இரத்தத்தை தடவி அக்னியிலிட்டுக் காய்ச்சவும். இவ்விதம் மூன்று முறை செய்யமுண்டம் முதலான எல்லா லோஹமும் அவற்றிலடங்கிய ஸகல தோஷங்களும் நீங்கியவைகளாய் விடும். (2) பதினாறு பலம் த்ரிபலையை எட்டுப் பங்கு ஜலத்தில் சேர்த்து அது நாலிலொரு பங்காகக் காய்ந்ததும் அக்கஷாயத்தில் தகடுகளாக அடித்த ஐந்து பலம் உலோஹத்தைக் காய்ச்சித் தோய்க்கவும். அவ்விதம் ஏழு முறை காய்ச்சித் தோய்க்க மலை முதலியவற்றிலிருந்து பற்றியிருந்த தோஷம்[2] நீங்கிவிடும். (3) அயத்தின் மீது கரியுப்பைக் குழைத்துப் பூசி அக்னியிற் காய்ச்சி த்ரிபலாகஷாயத்தில் தோய்க்க அதிலுள்ள கிரிதோஷம் நீங்கும். (4) புளியம்பழத்தை கரைத்துக் கொதிப்பித்து அதில் அயத்தை ஊறவைத்தாலும் சுத்தமாகும். (5) அல்லது பசு மூத்திரத்தில் த்ரிபலையைச் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி அதில் சிறிது நேரம் அயத்தைப் பக்குவம் செய்யவும். பிறகு கஷாயத்தை வடித்து விட்டு அயத்தை யெடுத்து ஒரு கப்பரையிற் போட்டு நெய் கூட்டி வறுக்கவும். அதில் துரும்பையிட அது எரியும் நிலைமை வரும்வரையில், ஓர் இரும்புத்துடுப்பால் கிளறிக் கொண்டிருக்க வேண்டும். இவ்விதமாக மீண்டும் கஷாயத்திலிட்டு நெய் கலந்து ஐந்து முறை வறுத்தெடுக்கவும். (6) அல்லது நெல்லிக்கனி ரஸத்திலாவது த்ரிபலாகஷாயத்திலாவது அயத்தைக் காய்ச்சி முன் போல் வறுத்து சுத்தி செய்யலாம். 99 105.

லோஹபஸ்ம முறைகள்.

(1) முற்கூறிய விதமாகச் சுத்திசெய்த அயத்தை நாலுமுறை புடம்போட அது நீரில் மிதக்கக் கூடிய விதமாய் பஸ்மமாகும். (2) அயப்பொடியை பசுமூத்திரத்திலும் மஞ்சள் டு காய் இவற்றின் கல்கரஸத்திலும் கலந்து

1. "கிட்டத்தினும் முண்டம் நூறு மடங்கும் அதினும் தீக்ஷ்ணம் நூறு பங்கும் தீக்ஷ்ணத்தினும் காந்தம் இலக்ஷம் பங்கும் உபயோகிப்பவருக்குக் குணத்தைத் தரும். ஆகவே கிழத்தனமும் மரணமும் சீக்கிரம் நேரிடாமலிருப்பதற்கு எப்பொழுதும் காந்தத்தை உபயோகிப்பது நலம்: இரஸரத்னாகரம்.

கிரௌஞ்சம் காலிங்கம், கலி பத்ரம் வஜ்ரம் பாண்டி நிரங்கம், காந்தம் என்று உலோஹம் எட்டு விதம்: இரஸேந்திரசிந்தாமணி.

2. மிகவும் பாரமாயிருத்தல், மினுமினுத்தமை சிவப்பு அழுக்குப் பட்டிருத்தல் அழற்சியைத் தருதல் கல் ஸம்பந்தமான தோஷம் துர்நாற்றம் ஆகிய ஏழும் அயத்தின் தோஷங்களாகும்: பாவப்ரகாசம். இவற்றுள் கல் ஸம்பந்தமான தோஷமே அச்ம தோஷம் என்றும் கிரி தோஷம் என்றும் கூறப்படும்.

3. எந்த பஸ்மமும் நன்கு பக்குவமானால் நீரில் மிதப்பது இயல்பு. அதற்கு வாரிதரம் என்று பரிபாஷைப் பெயர்.

ஊறவைத்து பிறகு எண்ணெயிலும் பிசறி வறு க வேண்டும் இவ் விதமே ஏழு முறை வறுத்தெடுத்த அயத்தை எல்லாப் பிணிகளிலும் உபயோகிக்கலாம். (3) தீக்ஷ்ண லோஹத் த செதிள் செதிளாக வராமல் மெல்லிய தகடுகளா அடித்து கடுந்தீயிலிட்டு தியெடுத்து உடனே தண்ணீரிற் போடவும். அத்தகடுகளை யெடுத்து ஒரு கற்பாறையின்மேல் வைத்து கனமான இரும்புச்சம்மட்டியால் ஓங்கியோ கி யடித்துச் சிறு து டு களாகச் செய்யவும். இவ்விதம் துண்டித்த பிறகு பருமபடியாயுள்ள தீக்ஷ்ணலோஹத்துண்டுகளை ஒரு சட்டியிற்போட்டு மற்றொரு சட்டியால் மூடி நன்று எரிக்கவேண்டும். பழுக்கக் காய்ந்ததும் அத்துண்டுகளை யெடுத்து தண்ணீரிற் போட்டு மீ டும் முன்போலவே சம்மட்டியால் இடித்துப் பொடியாக்கவும். அத் தீக்ஷ்ணலோஹப்பொடியோடு இரஸமும் கந்தகமும் கலந்து புடமிடவும். ஒவ்வொரு தடவையிலும் அதை நன்றாக அரைத்து அரைத்து இருபது முறை புடமிட தீக்ஷ்ணலோஹம் பஸ்மமாகும். இப்பஸ்மத் த அந்தந்த ரோகத்தில் யுக்தப்படி யுபயோகி லாம்.[1] (4) ஐந்து பலம் லிங்கத்தை முலைப்பால் விட்டு ஆட்டவும். அதை ஐந்து பலம் லோஹத்தகடுகளின் மேல் பூசவும். அதை கஜபுடத்திலிட்டு எரிக்கவும். மீண்டும் த்ரிபலாகஷாயத்திலாவது எலுமிச்சப்பழச்சாற்றிலாவது காடியிலாவது இருபதிலொரு பங்கு லி கத்தை அரைத்து மீண்டும் அந்த லோஹத் தகடுகளின்மீது பூசி முன்போல் புடமிட வும். மறுபடி முன் கூறிய கஷாயாதி திரவங்களால் அதைப் பக்குவம் செய்யவும். இவ்வாறு ாதிலி கத்தை அரைத்தரைத்துப் பூசி நாற்பது புட களிட்டால் காந்தம் தீக்ஷ்ணம் முண்டம் என்னும் இம்மூன்று லோஹ ளும் ஸந்தேஹமின்றியே பஸ்மமாம் (5) பிறகு முற்கூறிய தீக்ஷ் லோஹத்தை வெள்ளைச்சாறடை ஆடாதோ ட இவற்றின் சாற்றால் அரைத்து அரைத்து முப்பது முறை புடமிட அது ஸிந்தூரம் போன்ற நிறமுள்ளதாய் மிகச் செந்நிற கொள்ளும். (6) அல்லது தீக்ஷ்ண லோஹத்தகடுகளை மிக மெல்லிய பொடிகளாகச் செய்து அதை த்ரிபலா கஷாயமும் சிறிது அன்னமும் கூட்டி அரைத்துப் பிசைந்து வட்டமாகச் சக் ரம்போல் செய்து நன்று உலர்த்தி யெடுத்து ஐந்து முறை புடமிடவும். அது மிகச் செந்நிறமான பஸ்மமாகும். அதை அந்தந்த ரோகம் பார்த்துப் பிரயோகிக்கவும். (7) பொன்னா கண்ணி கந்தகம் காயம் இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றால் ஆட்டி எந்த லோஹத்தின்மீதும் நன்றாகப் பூசவும். பிறகு பொன்னாங்க ணி யிலைகளை அரைத்துக் கல்கமாய் உருட்டி அக்கல்கத்தினுள் அந்த லோஹத்தை வைத்து அக்

1. இவ்விடத்தில் மூலத்தில் 'காந்தாய: ...... என்கிற ச்லோகத்தின் மொழி பெயர்ப்பு "கா தத்தின் பொது கு ள்' என்கிற விஷயத்துக்குப் பின்னால் சேர் ப்பட்டிரு கிறது

ளியிலிட்டு இரட்டைத் துருத்தி ா டு ஊதி த்ரிசூலம் போன்ற ஜ்வாலை கிளம்பும் வரையில் எரி வும் பிறகு அதைப் பசுமூத்திரத்திற் ாய்ச்சிய த்ரிபலாகஷாயத்தில் எடுத்துப்போடவும் அதை அ கஷாயத்திலிருந்தெடுத்து நன்று ச் சம்மட்டியால் அடிக்க அதிலிருந்து உதிரும் பஸ்மத்தை யெடுத்துக்கொண்டு மற்ற அய த்தை முன்போலவே புடமிட்டு பஸ்மமாக்கவும். (8) கந்தகத்தைப் பொடித்துச் சேர்த்து த்ரிபலாகஷாயம் வெல்லம் இவற்றையு கூட்டி புடமிடவும் இவ்வாறு முப்பது தடவை புடம்போட அயம் நிருத்தமான பஸ்மமாகும். (9) கந்தகமும் அயப்பொடியும் ஸம அளவா க் கூட்டி கற்றாழைச்சாற்றால் அரைத்து சிறிது காலம் அ தக் கோபுரம் போலச் சேர்த்து மூடி வைத்திருந்தால் அது தாஞ வே பஸ்மமாய்விடும். (10) லி கத்தை எலுமிச்சம்பழச் சாற்றில் கூட்டிவைத்து அதில் அயத்தை காய்ச்சி அநேக முறை புடமிட அயம் பஸ்மமாகும். (11) த்ரிபலையைப் பசுமூத்திரத்திற் கஷாயமி டு அக்கஷாயத்தில் அயத்தை மூன்று வாரங்களளவும் பாவனை செய்யவும் பிறகு அதே கஷாயத்தினுல் ஒருநாள் நன்றாக அதை ஆட்டி யெடுத்து கஜபுடத்தில் ஒரு நாள் எரிக்கவும் மீண்டும் ப லெல்லாம் முன்போலவே அரைத்து இரவெல்லாம் புடமிட்டு எரிக்கவேண்டும் இவ்வாறு இருபத்தோரு நாள் இருபத்தோரு புடமிட மூன்றுவிதமான லோஹங்களும் பஸ்மமாகும் 106 128.

தீக்ஷ் த்ருதி முறை

(1) பேய்ப்பீர்க்க காயை உலர்த்தியெரித்து அச்சாம்பலைப் பசுமூத்திரத்தில் இருபத்தோரு முறை பாவனை செய்து உலர்த்தியெடு கவும் அச்சாம்பலை மூ சயிற் காயும் தீக்ஷ்ணலோஹத்தில் ஆவாபம்[2] செய்ய அந்த லோஹம் திரவமாகும். (2) கடற்பாலையைச் சமூலம் சாம்பராக்கி அதைப் பசுமூத்திரத்தில் இருபத்தோரு முறை கலக்கி வடித்தெடுத்து உலர்த்தி மூசையிற் காயும் தீக்ஷ்ணலோஹத்தில் ஆவாபம் செய்ய அது லம் போல் நீராகும். 129 130

லோஹ ரஸாய ம்.

இவ்விதம் முற்கூறியவாறு அபுநர்ப்பவமாகச் செய்த லோஹ பஸ்மமானது தேவாம்ருதம் போன்றதாய் ஸித்தர்களால் பு ழப்பெற்ற சிறந்த இரஸாயநமாகும். இதை நிஷ்கமளவில் த்ரிகடு வாய்விடங்கம் நெய் தேன் இவற்றுடன் கூட்டி யுட்கொள்ள கிழத்தனம் மரணம் ஆகியவையும் எளிதில் நெரு கமாட்டா. திடசாலியான புத்திரனுண்டாகவும் அது காரணமாம் முன்னுல் காலயவனன் என்பவனை உ டாக்குவதற்கு அவனது பிதாவுக்குச் சிவபெருமானுல் இந்த லோஹ ரஸாயந முறை உபதேசிக்கப் பெற்றதாம். 131.

---

1. நிருத்தம் அபு ர்ப்பவ 8- ஆ அத்தியாய பார் க.
2. ஆ ாபம் 8- அத்தியா பார்க் .
3. நிஷ் ம்— ஶார் 4 உளு து எ ட.

இராமராஜி முறைப்படி ா் த லோஹாதிளின் சுத்தி- பஸ்மாதிகள்.

(1) ா் த பரீக்ஷை: காந்த லோஹமயமான பாத்திரத்தில் ஜலம் வைத்து அதில் எண்ணெய்த் துளி யவிட அந்த எண்ணெய் லத்திற் பரவுவதில்லை. மேலும் அவ்வித காந்தம் வெள்ளியோடும் எளிதிற் லந்து விடும். அவ்விதமான காந்த லோஹமே அயம் ஸம்பந்தமான சரக்குகளுக்குள் மிகச் சிறந்தது. (2) ந்த சுததி முறை:- அவ்விதமான காந்த லோஹத்தை மெல்லிய தகடுகளாக அடித்து அதைக் ாய்ச்சிக் காய்ச்சி த்ரிபலா கஷாயத்தில் தோய்க்கவும். (3) இவ்விதம் சுத்தமான லோஹங்களை ஏதேனுமொரு அம்லம் விட்டு அரைத்துக்கொள்ளவும். அவற்றின்மீது அவற்றிற்குக் கால் பங்கு இரஸபஸ்மத்தைப் பூசி புடமிட்டு எரிக்கவும். (4) அல்லது தாளகம் கந்தகம் மனச்சிலை இரஸம் இவற்றைச் சமயெடையாகக் காந்தத்துடன் கூட்டி முயல் இரத்தத்தினுல் அரைத்து உருட்டியெடுக்கவும். அதன்மீது யவக்ஷாரத்தைக் காடியில் அரைத்து மேலே பூசி அக் ியிற் காய்ச்சவும். இவ்வாறு சுத்தி செய்தால் காந்த லோஹம் எல்லாத் தோஷங்களும் நீ் கியதாய் விடும். (5) அக்னியிலலா பஸமமுறை: சுத்தமான பாதரஸம் ஒரு பங்கும் சுத்த கந்தகம் இரண்டு ப் கும் கூட்டி கல்வத்திலிட்டு க் ஜலியாகச் செய்து அவ்விர ் டு் கும் ஸமயெடை அயப்பொடியை் கூட்டி கற்ருழைச் சாற்றுல் இரண்டு யாமகாலம் பலமாக அரைக்கவும். பிறகு அதை உருட்டியெடுத்து ஆமணக்கிலைகளால் கவசம் செய்து செப்புப் பாத்திரத்தில் சேமித்து வைக்கவும். பிறகு அரை யாமத்திற்கெல்லாம் அது மிகச் சூடுள்ளதாகும். அப்பால் அதை யெடுத்து நெற்களஞ்சிய மொ் றுக்குள் அடக்கம் செய்யவும். பின்பு மூன்று நாட்கள் செ் ற பின் அதை யெடுத்து நன்ருக அரைத்து வஸ்திர ாளநம் செய்தெடுக் வும். இது உண்மையில் வாரிதரமான பஸ்மமாகும்.[1] இதே முறையினுல் ா் தம தீக்ஷ்ணம முண்டம ஆகிய மூன்று அயங்களும் நிருத்தமா பஸ்மமாகும். (6) இம்முறைப்படியே ஸ்வர்ணம் முதலியவைகளையும் நன்ரு ப் பொடித்து அயத்தைப் போலவே செய்யலாம். இது ஸித்தலோஹம என்று பெயர் பெற்றது. ஸித்தர்களுடைய பொய்யா முகத்திருற் கூறப்பட்டதாகும். ஸகல ரோகங்களைப் பரிஹரிப்பதற்கும் மூப்பைத் தடுப்பதற்கும் உபயோகிக்கப்பட்ட அனுபவஸித்தமுறை. (7) அநுபா ம்: இதை த்ரிபலை தேன் இவற்றுடன் கலந்து எல்லாப் பிணிகளிலும் உபயோகிக்கலாம். (8) லோஹத்தின் குணங்கள்: லோஹமானது கிருமி ரோகம் பாண்டு வாதக்ஷயம் பித்த வியாதிகள் மேதோரோகம் மூலரோகம் கிரஹணி ஜ்வரம் கபதோஷம் சோகை பிரமேஹம் குல்மம் ப்லீஹரோகம் விஷக்கோளாறுகள் குஷ்டம் அ் னி

---

1. அக்னியிற் புடமிடாமற் செய்யப்படும் இ் த லோஹபஸ் முறை் கு ஸோ நுத என்று பெயர். ஆயு் வேதப்ராகாச் .

மாந்த்யம் இவைகளைத் தீர்க்கவல்லது; தேஹவன்மையை விருத்தி செய்யும்; ஆரோக்கியத்தை நிலைநிறுத்தும்; சிறந்த இரஸாயநம்; மரணத்தையும் தடுக்கும். காந்தம் முதல் கிட்டம் வரையில் லோஹம் அனைத்துக்கும் இக்குணங்கள் உண்டு. லோஹங்கள் பஸ்மமானால் இரஸௌஷதங்களைப் போலவே ஆய்விடுகின்றன; அவை முறைப்படி யுபயோகிக்கப்பட்டால் மஹத்தான வியாதிகளையும் தீர்க்கும். நீடித்த நாள் வழக்கமாக உபயோகித்துவந்தால் திடமான தேஹ ஸித்தியையும்[1] தரும். 132 142.

லோஹ சத்யாதிமுறையில் வேறு சில வகைகள்.

(1) நன்றாகக் கனிந்த நாவற்பழம் போன்ற நிறமுடையதே சிறந்த காந்தமாகும். (2) கடற்பாலை யச் சமூலம் சாம்பராக்கி அதைச் சிறுநீரால் காளநம் செய்து அதிலிருந்து வரும் க்ஷாரத்தை இருபத்தோரு முறை காந்தத்தில் ஆவாபம் செய்ய காந்த பஸம மாகும். (3) கந்தகத்தையும் காந்த லோஹத்தையும் ஸமபாகம் எடுத்துச் சூர்ணம் செய்து உருகிய லோஹத்தில் பிரதீவாபம் செய்ய எட்டுவித லோஹங்களும் திரவமாகும். (4) கடற்பாலைச்சாற்றில் கந்தகத்தை ஏழு நாள் பாவனை செய்யவும்; அக்கந்தகத்தை ஆவாபம் செய்தால் லோஹங்கள் இரஸம்போல் திரவமாகப் போகும்[4]. 143 146

மண்டூரத்தின் சுத்தி பஸ்மம் உபயோகம் முதலியன.

(1) தான்றி மரக்கட்டைகளின் தழல்களால் லோஹ கிட்டத்தை நன்றாய் எரித்து அதை யெடுத்துத் தான்றி மரத்தாலாகிய பாத்திரத்தில் வைத்துள்ள பசுமூத்திரத்தில் தோய்க்கவும்; இவ்விதம் ஏழு முறை செய்யவும்; மண்டூரம் என்று வழங்கப்படுகிற இதை மிகவும் மிருதுவாகப் பொடித்து அயத்தைப் போலவே பிரயோகிக்கவும். (2) த்ரிபலையைப் பசுமூத்திரத்திற் சேர்த்து கஷாயமாகக் காய்ச்சவும்; லோஹ கிட்டத்தைப் பழுக்கக் காய்ச்சி அக்கஷாயத்தில் மெதுவாகத் தோய்க்க

1. தேஹ ஸித்தி யோகாதிகளால் பெறக்கூடிய அணிமாதி ஸித்திகள்; கிழத்தனம் மரணம் முதலியதைத் தடுக்கும் திறமையையும் இது குறிக்கும்.

2. காளநம் வடித்தல். நீரில் கரைந்துள்ள கனவஸ்துவிலிருந்து நீரைத் தனியாக வடித்தல். மிருதுவான நுண்ணிய வஸ்துக்களைப் பருமனான வஸ்துக்களிலிருந்து பிரிப்பதற்கான சலிக்கும் வேலையும் காளநமாம்.

3. பிரதீவாபம் ஆவாபம். 8-ம் அத்தியாயம் பார்க்க.

4. யாதாமொரு ஔஷத முறையில் ஸ்வர்ணமாவது வெள்ளியாவது சேர்க்கப்பட வேண்டியிருந்து அவை சமயத்திற் கிடைக்காமற் போனால், காந்தம் அவற்றிற்குச் சற்றேறக்குறையச் சமானமான குணமுடையதாகையால் அவற்றிற்குப் பதிலாக காந்தலோஹத்தை அம்முறையில் உபயோகிக்கலாம்; இரஸஸாரம்.

வும் இவ்விதம் சுயமாகப் பொடிப் பொடியாகச் சிதறும் வரையில் அதைக் காய்ச்சிக் கஷாயத்தில் தோய்க்கவேண்டும் அந்த மண்டூரத்தை நன்றாக அரைத்து உபயோகிக்கவும். (3) பஸ்மமாக்கிய முண்ட லோஹத்திற்கு எக்குணங்கள் உண்டோ அவை லோஹகிட்டத்திற்கும் உண்டு ஆகவே அயத்தை யுபயோகிக்கக் கூடிய எல்லாப் பிணிகளிலும் மண்டூரத்தையும் பிரயோகிக்கலாம். (4) லோஹௌஷதங்களை யுபயோகிப்பவருக்கு முண்டமானது கிட்டத்தினும் பத்தத்தனை குணத்தையும், தீக்ஷ்ணமானது முண்டத்தைவிட நூறு மடங்கு குணத்தையும் காந்தமானது தீக்ஷ்ணத்தினும் லக்ஷமடங்கு அதிக குணத்தையும் மனிதருக்குக் கொடுக்கும் ஆகவே கிழத்தனமும் மரணமும் எளிதில் நேரிடாமலிருக்கக் கருதி காந்த லோஹத்தை மனிதர் எப்பொழுதும் உட்கொள்ளலாம். [1] 14 150.

அசுத்த லோஹத்தி ன் தீக்குணங்களும் சுத்த லோஹத்தின் குணங்களும்.

( ) சுத்தி செய்யாத லோஹத்தையுபயோகிப்பதால் ஆயுளும் தேஹபலமும், காந்தியும் அழியும்; இருதயத்திற் கோளாறு உண்டாகும் பொதுவாய் தேஹாரோக்கியம் சிற்கெட்டுப் பல வியாதிகள் தோன்றும் ஆகவே அயத்தைச் சுத்தி செய்தே பஸ்மம் செய்யவும். (2) சுத்தி செய்த அயமோ ஆயுளை விருத்தி செய்யும் தேஹபலம் வீர்யம் இவற்றைக் கொடுக்கும்; பலரோகங்களைத் தீர்க்கும் ஆண்மையை அதிகரிக்கச்செய்யும் அயத்திற்குச் சமானமாக அவ்வளவு சிறந்த இரஸாயநம் வேறொன்று மில்லை. [2] 151 152.

## வங்கம

வங்கம் இரண்டுவிதம்.

வங்கமானது குரகம் மிச்ரகம் என்று இறண்டு வகையாம். அவற்றுள் குரகம் குணத்திற் சிறந்தது மிச்ரகம் உபயோகமானதன்று. (1) குரவங்கம் வெண்மையானது மிருதுவானது; ஸ்நிக்த்தமானது துரிதமாய் உருகும் கனமானது; தட்டினால் சப்தமுண்டாகாது. (2) மிச்ர வங்கம் நிறத்தில் வெண் கருமையானது.- 153 154.

1. லோஹமுபயோகிப்பவனுக்குப் பத்தியம்: பூசணி, நல்லெண்ணெய் உளுந்து கடுகு, மதுபானம், புளிப்புள்ள உணவுப்பொருள்கள் ஆகியவை அயமுட்கொள்பவனுக்குத் தகாதவை: இரஸஸங்கேத கலிகா.

2. இவ்விஷயம் அனைத்தும் வேறு கிரந்தத்திலிருந்து சேர்க்கப்பட்டதாகத் தெரிகிறது.

3. வங்கம் வெள்ளீயம் எனப்படும். இதற்கு ...கம், த்ரபு, பிச்சடம் என்றும் பெயர்களுண்டு.

வங்கமானது திக்தரஸமும் உஷ்ணவீர்யமும் ரூக்ஷத்தன்மையுமுள்ளது; வாததோஷத்தைச் சிறிது பிரகோபிக்கச் செய்யும்; மேஹரோகங்கள், கபதோஷத்தாலான வியாதிகள் மேதோரோகம் கிருமிரோகம் ஆகியவற்றைப் பரிஹரிக்கக்கூடியது. 155.

வங்கத்தின் பொது குணங்கள்.

(1) குரவங்கத்தை உருக்கி மஞ்சள்பொடி கலந்த கருநொச்சியிலைச் சாற்றில் ஊற்றவும்; இவ்விதம் மூன்று முறை செய்ய குரவங்கம் சுத்தமாகும். (2) மிர வங்கத்தைப் புளித்த மோரிலும் வெள்ளைச்சாரடைச்சாற்றிலும் ஆடாதோடைச்சாற்றிலும் எட்டிக்கொட்டைக் கஷாயத்திலும் பேய்ச்சுரையின் சாற்றிலும் தனித்தனியே உருக்கிச் சேர்த்தால் சுத்தியடையும். 156 57.

இரு வங்கங்களுடையவும் சுத்திமுறை.

(1) உருக்கிய வங்கத்தைக் கருநொச்சியிலைச் சாற்றில் ஊற்றுவதோடு அதில் நொச்சி வேரின் சூர்ணத்தை ஆவாபம் செய்து வெயிலில் வைக்கவும்; இவ்விதம் ஏழு முறை செய்ய வங்கம் சுத்தமாம். (2) இப்படியே நாகம் வெண்கலம் செம்பு இவற்றையும் சுத்தி செய்யலாம்.[2] 158.

வங்கம், நாகம், வெண்கலம், தாம்ரம் இவற்றிற்குப் பொதுவா சுத்தி முறை.

(1) வங்கத்தை மெல்லிய தகடுகளாக அடித்து எருக்கம்பால் விட்டு ஆட்டிய தாளகத்தை அத்தகடுகளின் மேல் தடவி அரசம்பட்டை புளியம்பட்டை இவற்றிலிருந்தெடுத்த க்ஷாரங்களுக்கிடையில் அத்தகடுகளைப் புதைத்து இலகுவாகப் புடம் போடவும்; பிறகு அரைத்தெடுத்து அப்பஸ்மத்தை இரஸௌஷத முறைகளின்படி உபயோகிக்கவும். (2) ஒரு பாணலியில் வங்கத்தை உருக்கி அதில் பதினாறிலொரு பங்கு இரஸத்தைச் சேர்த்து தாளகத்தையும் சிறுகச் சிறுக அதன்மேல் பொடித்துத் தூவிக் கொண்டே காட்டுப் பருத்தி மாத்திரனலான துடுப்பினால் தேய்த்துக் கிளறிக் கொண்டிருந்தால் வங்கம் பஸ்மமாகும்; இதுவும் இரஸௌஷத முறைகளிற் சேர்த்துப் படிக்கப்படுகிறது. (3) பலாசம் வேரின் சாறு விட்டு ஆட்டிய தாளகத்தை வங்கத்தகடுகளின் மேல் பூசி அப்

வங்க பஸ்ம முறைகள்.

1. வங்கமானது இலகு, ஸரம் (எளிதில் தாதுக்களிற் பரவுந்தன்மை), ரூக்ஷம் உஷ்ணம் மேஹஹரம் கபஹரம் கிருமிஹரம்; பாண்டுரோகம் காஸ ச்வாஸம் இவற்றைப்பரிஹரிக்குந் தன்மை சிறிது பித்தத்தை விருத்தி செய்யும் தன்மை ஆகியவையும் அதற்கு உண்டு; நேத்திரத்திற்கும் அது ஹிதமானது. ஆயுர்வேத ப்ராகாசம்.

2. அங்ஙனம் தக்க சுத்தி செய்யப்படாத வங்கமானது குஷ்டம், குல்மம், பாண்டு, பிரமேஹம் வாதரக்தம் முதலான பல கடுமையான கோளாறுகள் ஆகியவற்றை உண்டு பண்ணும்; பலத்தைப் போக்கும்: வைத்திய சிந்தாமணி.

பால் புடமிட ஐயமின்றி அது பஸ்மமாகும். (4) வங்கத்தின் மேல் சேராங் கொட்டைத் தைலத்தைப் பூசி அதன் மேல் சிலை செய்யவும்; புளி அரசு பலாசு இவற்றின் கட்டையை எரித்து அதனால் அதைப் புடமிட பஸ்மமாம். 159 163.

வங்க ரஸாயநம். வங்கபஸ்மம் காந்தபஸ்மம் அப்ரகபஸ்மம் இவற்றைச் சமவெடையாக எடுத்து அவற்றை ஊமத்தையிலைச் சாற்றால்[1] முதலில் அரைக்கவும்; பிறகு வேப்பிலைச் சாற்றாலும் மாதுளையிலைச்சாற்றாலும் நாயுருவிச்சாற்றாலும் தனித்தனியே அரைக்க வேண்டும்; அதன் பிறகு வங்கபஸ்மத்திற்குச் சம அளவாக இராஜாவர்த்த பஸ்மத்தையும் கூட்டி கோமூத்திர சிலாஜதுவின்[2] குழம்பால் நன்றாக ஆட்டவேண்டும்; பிறகு வெண் குன்றியை குழம்பு விட்டு எட்டு நாட்கள் அரைத்து உலர்த்தி மீண்டும் பொடியாக்கி அச்சூர்ணத்திற்குச் சமஅளவாகப் பொரித்தெடுத்த இலவம் பிசினையும், வாலுழுவை விதையின் சூர்ணத்தையும் கூட்டிக் கலந்து வஸ்திரகாளநம் செய்து தகுந்த சிமிழில் வைத்துக் கொள்ளவும்; வங்க ரஸாயநம் எனப்படும் இதை இரண்டு குஞ்ஜாப்பிரமாணமாகப் பசுவின் மோரிற் குழைத்த மஞ்சள் சூர்ணத்தினுள் அநுபானத்துடன் உட்கொள்க. இதனால் இருபது வகையான மேஹரோகங்கள் நிவாரணமாகும். சம்பா அரிசி பயற்றம்பருப்பு வெண்ணெய் நல்லெண்ணெய் புடல், காட்டுக்கோவை இவை இவ்வெளஷத முபயோகிக்கையிற் பத்தியமான உணவாம். 164 170.

## ஸீஸம்

(நாகம் கருவங்கம்)

ஸீஸத்தின் இலக்ஷணங்கள். ஸீஸமானது துரிதமாய் உருகும்; அதிக பாரமுள்ளது; அறுத்தால் அறுபட்டவிடத்தில் கறுப்பாகப் பளபளப்புள்ளதாயிருக்கும்; ஒருவித துர்நாற்றமுடையது; வெளிப்புறம் கறுப்பாயிருக்கும்; இவ்வித மிருப்பதுதான் சுத்தமான ஸீஸம்; இவ்வித இலக்ஷணங்களைப் பெறாதது இதற்கு எதிரிடையான குணங்களைப் பெற்றது. 171.

1. கநகாம்போபி:' எ[ன்]பதற்குப் பதிலாக க[ன]ய ாம்போபி:' என்று இரஸரத் ஸமுச்சய போதிநியில் கூறப்படுகிறது; அப்பொழுது ...ற்ற ...ழச்சாறு எ[ன்]று பொருள் கூறவேண்டும்

2. 'கோமூத்ரக சிலாஜதுஜலே." என்கிற மூலவாக்கியத்திற்குப் பசுமூத்திரத்தினாலும், சிலாஜதுக்குழம்பாலும்' என்றும் பொருள் கூறலாம்.

3. ஒ[வ்]வொரு திர[வ]த்தினாலும் எவ்வேழு மு[றை] அ[ரை]க்க வே[ண்]டுமென்று "இரஸரத்நஸமுச்சய போதிநி."

4. 'உச்சித்தில ம் எ[ன்]கிற ஒரு வேலன் பிசினோடும், ஈச்வரவல்லிவிதையி[ன்] சூர்ணத்தோடும் கூட்டிய ரக்கவும் எ[ன்]று" வே[]றுபாடம்.

ஸமானது வீர்யத்தில் மிகவும் உஷ்ணமானது; குணத்தில் ஸ்நிக்த்தமானது; சுவையில் கைப்பு; வாத-கப ஹரம்; மேஹதோஷஹரம்; தீபகம்; ஆமவாத வியாதியைப் பரிஹரிக்கவல்லது. 172.

வீஸத்தின் குணங்கள்.

வீஸத்தை உருக்கி அதில் வெண்ணொச்சிவேர், அரேணுகம் மஞ்சள் இவற்றின் சூர்ணத்தைச் சேர்த்து பிறகு கருநொச்சியிலைச் சாற்றில் ஊற்றவும்; இவ்விதம் மூன்று முறை செய்ய வீஸம் சுத்தமாகும். இச்சுத்தி முறையினால் நாகம் கறுப்பான நிலைமையையும், வெடித்துப் பொடியாகும் தன்மையையும் பெறுது.- 1 3 1 3½.

வீஸ சுத்தி.

(1) குறுக்காக நீட்டுருவத்தில் அமைத்த அடுப்பின்மீது குறுக்காக நீண்ட முகமுள்ள ஒரு சட்டியை[1] வைத்து அச்சட்டியின் வாய்ப்புறம் தவிர மற்றெல்லாப் பாகத்தையும் மண்பூசி நன்கு மறைத்துவிடவும் இது பிரஷ்டயந்திரம் எனப்படும். (2) அச்சட்டியில் (1) இருபது பலம் சுத்த வீஸத்தைப் போட்டு கடுந்தீயிட்டு எரித்து வீஸம் உருகும்போது அதில் கால் பல மெடை சுத்த ரஸம் சேர்த்துக் கலக்கவும்; பிறகு அர்ஜுநக்ஷாரம் அக்ஷக்ஷாரம் மஹாசாகக்ஷாரம் தாடிமக்ஷாரம் அபாமார்க்கக்ஷாரம்[2] இவற்றில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பலம் அதிற் கூட்டி, துடுப்பால் நன்றாக மசிக்கவும்; இவ்விதமாகக் கடுந்தீயிட்டு இருபது நாள் இரும்புத்துடுப்பால் மசித்து வந்தால் ஸமானது சென்னிறமான அல்லது மாப்புறு நிறமான பஸ்மமாக மாறும்; தோஷம் நீங்கியதான இந்த நாகபஸ்மம் சிறந்த இரஸாயநமாகும். (2) நாகத்தை ஒரு முறை ஒருவாறு பஸ்மமாக்கவும்; அதை ஊர்த்வபாதந யந்திரத்தைக்கொண்டு மீண்டும் நாகமாகச் செய்துகொள்ளவும்; இவ்விதமே அதைப் பத்துமுறை செய்தால் அந்த வீஸம் ஸகத்தோஷமும் நீங்கி மிகச்சிறந்த பஸ்மமாகும்; அது இரஸாயநமாகும். (3) ஒரு பாத்திரத்தில் ஸத்தைப் போடவும்; அரசம்பட்டையையும் புளியம்பட்டையையும் சாம்பராக்கி அச்சாம்பரை வீஸத்திற்கு நாலிலொரு பாக அளவில் சேர்த்து இரும்புத்துடுப்பால் கிளறவும்; இவ்விதம் செய்ய ஒரு யாமத்தில் அது பஸ்மமாகும்; அப்பஸ்மத்தை யெடுத்து அதற்குச் சமயெடை மனச்சிலையைக் கூட்டி எலுமிச்சம் பழச்சாற்றாலாகிலும் காடியினாலாவது ஆட்டி உலர்த்தி புடமிடவும். மீண்டும் அதை ஆறிய பிறகு எடுத்து இருபதிலொரு பங்கு மனச்சிலை சேர்த்து காடிவிட்டு

பிரஷ்ட யந்திரம்.

வீஸபஸ்ம முறைகள்.

1. வறுக்கும் சட்டி, அல்லது வறையோடு.

2. அர்ஜுநக்ஷாரம் மருதம்பட்டையை எரித்தெடுத்த உப்பு. அக்ஷக்ஷாரம் தான்றிமரப்பட்டையை யெரித்தெடுத்த உப்பு. மஹாசாகக்ஷாரம் பெரு தேக்கம்பட்டையிலிருந்தெடுத்த உப்பு. தாடிமக்ஷாரம் மாதுளம் உப்பு. அபாமார்க்கக்ஷாரம் நாயுருவியுப்பு.

ஒரு யாமகாலம் அரைத்து முன்போலவே புடமிடவேண்டும். இவ்விதம் அறுபது புடமிட்டால் நாகம் நிருத்தமாக பஸ்மமாகும. (4) ஸீஸத்தை மெல்லிய தகடுகளாகச் செய்து அதன்மேல் மனச் சிலையையும் எருக்கம்பாலையும் அரைத்துப் பூசவும்· பிறகு புடமிடும் முறைப்படி பக்குவம் செய்ய நிருத்தமாக [1] பஸ்மமாகும். 184 184½.

மூற் கூறியவகைகளில் புடமிட்டெடுத்த நாகபஸ்மம் ஒரு பங்கு, தாளகபஸ்மம் அரைப்பங்கு தாம்ரபஸ்மம் கால்பங்கு விமலபஸ்மம் கால்பலம் காந்தஸத்வம் அப்ரகஸத்வம் ஸ்படிகஸத்வம் இவையும் வகைக்குக் கால்பங்கு· ஆக இவ்வளைத்தையும் ஒன்றுகக் கூட்டி த்ரிபலாகஷாயம் சேர்த்து முப்பது வறட்டிகளைக் கொண்டு முப்பது முறை புடம் போட்டு அரைத்து வைத்துக்கொள்ளவும். இதை இரண்டு குன்றுமணி யெடை யெடுத்து அதற்குச் சமயெடை த்ரிகடு வாய்விடங்கம் இவற்றின் சூர்ணத்தைக்கூட்டி தேன் அல்லது நெய்யிற் கு மூத்து அந்தந்த அநுபானங்களுடன் உட்கொள்ள எண்பது வகையான வாத ரோகங்களும் முக்கியமாக தநுர்வாதமும் எல்லாவிதமான கபரோகங்களும் மூத்திர ரோகங்களும், ச்வாஸம் காஸம் க்ஷயம் பாண்டு - சோகை குளிர் ஜ்வரம் - கிரஹணி ஆமவாதம் கடுமையான அக்னிமாந்த்யம் கபோதரம் முதலிய மற்றெல்லா நீர் ரோகங்கள் ஆகியவைகளும் தீரும்.[2] 185 191.

ஸீஸரஸாயநம்.

## பித்தளை [3].

ரீதிகா என்றும் காகதுண்டி என்றும் பித்தளை இரண்டு விதப்படும். (1) எது காய்ச்சப்பட்டுக் காடியில் இட செப்பு நிறங்கொள்ளுகிறதோ அப்பித்தளை ரீதி r. எனப்படும். (2) எது அவ்விதம்செய்தால் கறுப்பு நிறமாகுமோ அது காகதுண்டி எனப்படும். -- 192 192½.

பித்தளை இரண்டுவிதம்.

(2) ரீதிகா என்னும் பித்தளை சுவையில் கைப்பு· ரூக்ஷ குணமுடையது· கிருமி ஹரம்· இரக்த பித்த ஹரம்· தகுந்தஅநுபானங்களுடன் உபயோகித்தால் குஷ்டமும் இதனால் தீரும்; உஷ்ண சீத வீர்யங்கள் கலந்தது. (2) காக

பித்தளைகளின் கு ங்கள்.

---

1. நிருத்தம் 8-ம் அத்தியாயம் பார்க் .

2. ஸீஸத்திற்கு முன்பு ஜஸதம் என்கிற ஒரு லோஹம் ஆயுர்வேத ப்ரகாசத்திற் கூறப்படுகிறது. 'ஜஸதம் என்பது ங் ம் போ . றது· அது பித்தளையு 'டாவதற்கும் காரண ஸ்து. ங்கத்தைப் போலவே சுத்தி பஸ்மமுறைகளும்.' ஜஸதம் துத்த ாகம்.

3. 'ரீதி யென்னும் பித்தளையானது தாம்ரம் ஜ தம் இவற்றின் சேர்க்கையாலான உபதாதுவே யாகும். ஆகவே பித்தளை அதற்குக் க ரண வஸ்துக்களின் குணங்களைப் பெற்றிருக்கும்; சேர்க்கை முறைகளிலுள்ள வித்யாஸங்களையனுஸரித்து பித்தளையின் கு ங்களும் பல வாறு மாறுபடும். பாவப்ரகாசம்.

துண்டி யென்பது ரூக்ஷமானது ' திக்த ரஸமும் ஷ்ணவீர்யமு முடையது ' ய ருத் என்னும் ஈரல் ப்லீஹம் இவற்றின் வியாதி களைப்போக்க வல்லது ' சிறிது சீதவீர்யமுமுடையது.—193 194.

பித்தளையிற் சிற ' ததும், இகழ் ' ததும்.

(1) பாரம் மிருதுத் தன்மை பசுமை நிறம் வன்மை அடித் தால் சிதறுமல் அடிகளைத் தாங்குந் தன்மை மிக வும் ஸ்நிக்த்தமா யிருத்தல் மழமழப்பு ஆகிய இலக்ஷணமுள்ளது சிறந்த பித்தளையாம். (2) வெண் பசுமை நிறம் சுறசுறப்பா யிருத்தல் ரூக்ஷத் தன்மை வன்மையின்மை அடி தாங்காமை காய்ச்சும்போது ஒரு வித துர்நாற்ற முண்டாக்குதல் பாரமின்மை ஆகிய இலக்ஷணங் கள் தாழ்ந்த பித்தளையைக் குறிப்பிடும்' அவ்வித பித்தளை இர ஸௌஷத முறை ருக்கு உபயோகமானதன்று. 195 196.

பித்தளையி ' த்திமுறை.

ஒரு பாத்திரத்தில் மஞ்சள் பொடி கலந்த கரு நொச்சி யிலைச் சாற்றை வைத்து அதில் பித்தளையைக் காய்ச்சித் தோய்க்கவும் ' அவ் ிதம் ஐந்து முறை காய்ச்சித் தோய்க்க பித்தளை நன்கு சுத்தமாகும். 197.

பித்தளை த்ருதி.

பொன்னிறமான பித்தளையைப் பொடித்து கொழுத்துக் கறுப்பான இளம் ஆட்டுக்குத் தீனியில் கலந்து வைத்து அதை யுண்ணச் செய்யவும் ' பிறகு அது இடும் சாணத்தை யெடுத்து ஒரு கப்பரையினுள் பூசி அடுப்பில் வைத்து அதைக் காய்ச்ச அச்சாணத்திலிருந்து சிறந்த பித்தளைத் திரவம் வடியும் ' அது பதினுறு மாற்றுப் பொன்னுக்கு நிகரான காந்தி யுடையதா யிருக்கும் ' அது தேஹத்திற்கு நல்ல வன்மை யைத் தருவதற்கும் உலோஹ முறைக்கும் இரஸாயந முறைக்கும் உபயோகமானது. 198 200.

பித்தளைபஸ்மம்.

(1) மனச்சிலை கந்தகம் இவற்றை எலுமிச்சம் பழச்சாற்ருல் அ ரத்து பித்தளை ரேக்குகளின்மேல் கனமாகக் கவசம் செய்வது போலப் பூசி புடமிடவும் ' இவ் வாறு எட்டுமுறை புடமிட்டால் பித்தளை ப ஸ்மமாகும் ' பிறகு அதை முறைப்படி யுபயோகிக்கலாம். (2) பித்தளையைத் தாம்ரத் தைப் போலவே பஸ்மம் செய்து அவசியமான எல்லாவற்றிலும் உபயோகிக்கலாம். 201 201[1].

பித்தளை இரஸாய ம்.

பித்தளை பஸ்மம் காந்தபஸ்மம் அப்ரகபஸ்மம் ஆகிய மூன் றையும் ஸம அளவா ச் சேர்த்துக் கலந்து கொள்ள வும் ' த்ரிகடுகம் வாய்விடங்கம் பலாசம்வித்து ஓமம் சித்திரமூலம் சேரா ' ெ ாட்டை எள்ளு இவற்றைச் சம அளவாக எடுத்து நன்கு சூர்ணம் செய்து இச்சூர் ணத்தை முற்கூறிய மூன்று பஸ்மங்களோடும் ஸம ாடையாகக்

---

1. உயர் ' த வகையான ரீதிகா என்னும் பித்தளையானது சிற ' த மஞ்சள் நிறமானது; ஆ ே அது ஸ ° ரீதி . என்றும் வழங் ப் படும். பித்தளை ' கு ஆ கூட என்றும் பெயர்.

கூட்டிக் கொள்ளவும். இவ்வெளஷதத்தை நிஷ்கப் பிரமாணமாக உட்கொண்டுவந்தால் வயிற்றிற் சேரும் கிருமிகள் ஒழியும் • குஷ்ட ரோகத்திலும் மிக முக்கியமாக வெண் குஷ்டத்திலும் இது உப யோகமானது • தீபநம் பாசநம் என்னும் குணங்களும் இதற் குண்டு.[1] 202 204.

## வெண் லம்.

(காம்ஸ்யம் கோஷம்.)

வெ ் கலம் லப்பு லோஹம்.

தாம்ரம் எட்டு மடங்கு குரவ ்கம் இரண்டு பங்கு • இவ் விரண்டையும் உருக்கிக் கூட்டுவதால் உண்டாகும் உலோஹமே வெண்கலம் அல்லது காம்ஸ்யம் எனப்படுகிறது • அதில் ஸௌராஷ்ட்ர தேசத்திய வெண்கலம் சிரேஷ்டமானது. 205.

வெண்கலத்திற் சிறந்ததும் இகழ்ந்ததும்.

(1) ணீரென்று சப்திதல் • மிருதுத்தன்மை • ஸ்நிக்தம் • சிறிது கறுநீரோட்டதுடன் கூடிய வெண்மை • களங்கமில்லாத பளபளப்பு • காய்ச்சினால் சென் னிறமடைதல் • ஆக இவ்வாறும் சிறந்த வெண் லத் தின் குணங்களாம். (2) காய்ச்சினால் பசுமை நிற ்கொள்ளுதல், ஸாதாரண நிலைமையிற் சென்னிறமா யிருத்தல் கடி னத் தன்மை ரூக்ஷத்தன்மை அடிதாங்காமை மந்தமாகச் சப்தித் தல் பளபளப்பின்மை ஆக இவ்வேழும் வெண்கலத்தின் துர்க் குணங்க ளாகையால் அவ்வித வெண்கலத்தை ஔஷத முறை யில் உபயோகிக்கக்கூடாது. 206 207.

வெ ண்கலத் தின் குணங்கள்.

(1) வெண்கலம் இலகுகுணமுள்ளது • சுவையில் கைப்பு • உஷ்ண வீர்யம் • லேகநம் • நேத்திரத்திற்குத் தெளிவைத் தருவது • கிருமி ஹரம் • குஷ்ட ஹரம் • வாத பித்தஹரம் • தீபநம். (2) வெண்க லத்தில் நெய் ஒன்றைத் தவிர்த்து மற்றெல்லாவற் றையும் வைத்திருந்து உட்கொண்டால் ஆரோ ்யமும் சுகமும் உண் டாகும் • அவ்வித உ வுகள் ஸாத்மியமுமாகும்." 208 209.

ாம்ஸ்யத்தின் சுத்தியும்,பஸ்ம முறை ளும்.

(1) வெ ண்கலத்தைக் காய்ச்சி பசுமூத்திரத்தில் தோய்த் தெடுத்தால் அது சுத்தமாகும். (2) கந்தகமும் தாளகமும் கூட்டி வெண்கலத்தை ஐந்து புடமிட நிருத்தமான பஸ்மமாகும். (3) மூன்று க்ஷாரங்

---

1. பித்தளை இர ீதி என்றும் பிரமரீதி யென்றுங் கூட இர ்டு விதமாக வழங்கப்படுவதுண்டு

2. லேக ம் தேஹததிலுள்ள தாதுக் ளையாவது ம ங் ளை ய வது வரளச் செய்து அவற்றைக் கழியச் செய்யும் கு ம்.

3. ாத்மியம் பத்தியமாகாத வ ்துவு ் அப்யா வசத்தால் தேஹத்திற்கு இதமாய்விடுதல்.

4. மூன்று க்ஷாரங் ள் ய க்ஷாரம் ஸர்ஜக்ஷாரம் ட்ங் க்ஷாரம் எ ்பன ா ்.

கள் பஞ்ச லவணங்கள்[1] இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றில் பாவனை செய்யவும். அவ்விதம் ஏழு முறை பாவனை செய்த க்ஷாராதிகளை வெண்கலம் பித்தளை இவற்றின் தகடுகளின் மேல் கனமாகத் தடவி கஜபுடத்தில் வைத்துப் பக்குவம் செய்ய வெண்கலம் சுத்தமான பஸ்மமாகும். 210 211.

## வர்த்தலோஹம.

வர்த்தலோஹம். வெண்கலம் தாம்ரம் பித்தளை அயம் நாகம் ஆகியவற்றின் சேர்க்கையாலான லோஹம் வர்த்தலோஹம்[2] எனப்படும். உலோஹதத்துவ மறிந்தவர் இதையே பஞ்சலோஹம என்றும் வழங்குவர். 212.

வர்த்தலோஹத்தின் குணங்கள். (1) வர்த்தலோஹம் சீதவீர்யமும் கடுரஸமும், ரூக்ஷகுணமுமுடையது. கப பித்தஹரம். அரோசகத் தைப் போக்கும். சர்ம ரோகங்களில் ஹிதம் செய்யும். கிருமிஹரம். நேத்திரத்திற்கு ஹிதமானது. மலத்தை நன்கு வெளிப்படுத்தும். (2) வர்த்தலோஹத்தினலான பாத்திரத்தில் சமையல் செய்த அன்னம் வியஞ்ஜநங்கள் பருப்பு முதலியதெல்லாம் தீபநம் பாசநம் என்னும் குணங்களை விருத்தி செய்வதிற் சிறந்ததையாம். ஆனல் புளிப்புள்ள எவ்வஸ்துவையும் வர்த்தலோஹத்தினலான ஔஷதமுபயோகிப்பவர் விலக்கிவிடவேண்டும். 213 214.

வர்த்தலோஹ சுத்தியும் பஸ்மமும். (1) வர்த்த லோஹத்தைக் கடுந்தீயிட்டு எரித்து உருக்கிக் குதிரையின் சிறுநீரில் ஊற்ற அது சுத்தமாகும். (2) அவ்விதம் சுத்தி செய்த வர்த்தலோஹத்துடன் கந்தகமும் தாளகமும் கூட்டி புடமிட அந்த லோஹம் பஸ்மமாகும். முறைப்படி அப்பஸ்மத்தை அந்தந்த யோகங்களில் உபயோகிக்கலாம். 215 216.

## இரஸ ஸித்தியும பஸ்மங்களும்.

இரஸ-லோஹ பாஷாணதிக பஸ்மா பிறகே இரஸ முறக்கு உபயோகம். (1) இரஸங்கள் உபரஸங்கள் லோஹங்கள் முதலியவை சிறந்த இனங்களாகவும் சுத்தி செய்யப்பட்டவையாகவும் முறைப்படி பஸ்மம் செய்யப் பெற்றவையாகவும் இருந்தால் அவற்றைக் கொண்டு இரஸம்[4] ஸித்தமாகுமேயன்றி வேறுவிதமாயாகாது. (2) இரத்தினங்கள் உலோஹங்கள் கவடி சிப்பிகள் பாஷாணவகைகள், குளம்புகள் மான் கொம்பு முதலிய

---

1. பஞ்ச லவணங்கள் ஸௌவர்ச்ச லவணம் ஸைந்தவலவணம், பிடால லவணம், ஔத்பித லவணம், ஸாமுத்ர லவணம்.

2. வர்த்தலோஹத்தை நீலலோஹம் என்றும் கூறுவர். வர்த்தலோஹம் வெண்கலம், பித்தளை இம்மூன்றும் மிச்ரலோஹங்கள் எனப்படும்.

3. இரஸங்கள் மஹாரஸங்கள் எனப் பொருள்.

4. இரஸம் பாதரஸம் என்னும் பாரதம்.

கொம்புகள் எலும்பு மஹாரஸாதிகளில் உருவத்திற் கடினமாயுள்ள சரக்குகள் ஆகிய இவைகளும் நன்கு பஸ்மம் செய்யப்பட்டால்தான் இரஸௌஷதமுறைகளில் உபயோகிக்க உதவும். 217 218.

## பூநாக ஸத்துவம்.[1]

இரஸ வஜ்ரங்களில் பூநாக ஸத்துவத்தின் உபயோகம்.

வஜ்ரம் முதலிய இரத்தினங்களைத் திரவமாகச் செய்வதற்கு உபயோகமான பூநாகங்களென்கிற நாகப்பூச்சிகளிலிருந்து ஸத்துவமெடுக்கும் முறை மொழியப்படுகின்றது. ஸூதராஜனென்கிற இரஸம் வஜ்ரம் இவ்விரண்டுக்கும் ஒளியை மிக்க விருத்தி செய்வதற்கு அச் சத்துவமே ஏற்றது. 219.

பூநாக ஸத்துமெடுக்கும் முறை.

(1) நாகப்பூச்சிகளைக் கொண்டுவந்து நன்றாகக் கழுவி சாம்பராகச் செய்து அச்சாம்பரைக் கரிசிலாங்கண்ணிச் சாற்றால் மூன்று நாட்களும் எலுமிச்சம்பழச் சாற்றால் மூன்று நாட்களும் நொச்சியிலைச் சாற்றால் மூன்று நாட்களும் அரைக்க வேண்டும். பிறகு அதை திராவணவர்க்கச் சரக்குகளாலும்[2] ஆட்டியெடுத்து வடகங்களாகச் செய்யவும். அவ்வடகங்களைப் பிடமூஷையில் அடைத்து கடுந் தீயிட்டு இரண்டு யாமகாலம் எரிக்கவும். பிறகு அது தானே ஆறியதும் மூஷையிலிருந்து கடுகுபோன்று சிறியனவாயுள்ள வெள்ளை ரவைப் பொடிகளை வஸ்திரத்தில் கொட்டி காளநம் செய்தெடுக்கவும். அத்துடன் பணிரெண்டில் ஒரு பங்கு தாம்ரத்தையும் கூட்டி நன்றாகத் தீயிட்டு எரித்து ரவைகளாகச் செய்யவும். அந்த ரவைகளை யெடுத்து நன்றாகக் கழுவி வஜ்ரம் முதலியவற்றைத் திரவமாக்குவதற்கு முறைப்படி யுபயோகிக்கலாம். இந்த ரவைகள் கடினமா யிருக்குமாகயால் இச்சரக்கு **கரஸத்துவம** எனப்படும். இது உத்தமமான இரஸாயநமாகவும் உபயோகப்படும். ஒரு தடவை மூஷையிலடைத்து முன்கூறியவாறு ஊதினாலும் இச் சத்துவம் வெளியாகும். இல்லையேல் மூன்று முறை மூஷைகளில் அடைத்து எரிக்க ஸத்துவம் வெளி வருவது திண்ணம். (2) பொன் வெள்ளி செம்பு சாந்த லோஹம் ஆகிய லோஹங்கள் உற்பத்தியாகும் பூமிகளில் உண்டான நாக்குப் பூச்சிகளை நான்கு பிரஸ்தம் அளவு கொண்டுவந்து மஞ்சள் நீரால் முதலிற் கழுவி பிறகு குளிர்ந்த நீராலும் கழுவி அப்பூச்சிகளைப் பட்டிணியால் வருந்தும்

1. பூநாகஸத்துவம்—நாகப்பூச்சிகளிலிருந்து எடுக்கப்படும் சத்து. இது ஓர் உபரஸம் என்று வத்யக சப்தஸிந்து. நாகம் என்னும் லோஹத்தின் ஸத்துவமே பூநாக ஸத்துவம் என்றும் சிலர்.

2. திராவ வர்க்கம் 10-ம் அத்தியாயத்தில் விவரம் பார்க்க. வடகங்கள் சிறிய அடைகளைப்போல ஔஷதங்களைச் செய்து லர்த்தினால் அவை வடகங்கள் எனப்படும்.

மயிலுக்காவது சுறுசுறுப்பான கோழிக்கா ்து இரையாகப் போடவும் அவற்றைத் தி ்ற அப்ப றவையிடும் மலங்களைக் கவன மாகச் சேர்த்து அவற்றை க்ஷார வர் க ் களும்[1] அம்ல வர்க்கங்க ளும்[2] கூட்டி அரைததது, நல்ல ெவயிலில் உலர்த்தி யெடுக்கவும் பின்பு அதை ஓர் அகன்ற அகலிலிட்டு எரித்து மையாக்கவும் அந்த மையை திராவண வர்க்கச் சரக்குகளால்[3] ஆட்டி யெடுத்து மூஷை யில் அடைத்து குப்மட்டியி லிட்டு இரண்டு நாழிகை நேரம் நன் ருக எரிக்கவேண்டும் பிறகு மூஷையை வெளியிலெடுத்துத் தானே ஆறிய பிறகு அதனுள்ளிருக்கும் ே ாடத்தை[4] யெடுத்து நன்கு அரைக் வும் ரவைகளுருவமான ஸத்துவத்தைச் சிதறும லெடுத்து அலம்பி ஸமமெடை பொன் கலந்து, நெருப்பிலிட்டு உ தி அச்சத்துவத்தைக் குப்பியில் எடுத்து வைக்கவும் சில நாள் பழகிய பிறகு அதை யுபயோகிக்க வேண்டும். 220 230.

பூ ாக ஸத்து வ அங்குலீயக மும் அதன் குணங்களும்.

நாகப்பூச்சிகளிலிருந்து எடுக்கப்படும் ஸத்துவம் இரஸ முறை களில் உபயோகிக்கச் சிறந்ததென்றும், அடியில் வரு மாறு அதையுபயோகிப்பது நலமென்றும் ஸ்ரீஸோம தேவர் என்னும் ஸித்தர் கூறுகிறார். இரண்டு சாணமெடை பொன்னுடன் அதிற் கால் பங்கு அளவாக அச்சத்துவத்தைக் கூட்டி ஒன்ருக்கி மோதிரம் ஒன்று செய்து அம்மோதிரம் கழுவிய ஜலத்தை விஷம் தீ டியவிட ் களிற் பூச ஸ்த்தாவர விஷங்களும் ஜங்கம விஷ ் களும்[7] தீரும் மேலும் நேத்திரரோகங்கள் வயிற்றுளைத்தல் மூலரோகம காது நோய்கள் ஸூதிகாரோகங்கள் ஆகியவைகளு ் தீரும். 231.

1. க்ஷாரவர்க்கம் 10 ம் அத்தியாயம் பார்க்க.

2. அம்லவர்க்கம் 10 ம் அத்தியாயம் பார்க்க.

3. திரா ண வர்க்கம் 10-ம் அத்தியாயம் பார்க்க.

4. கோடம் இரஸத்தை ஜாரணம் ப ் வும் கட்டுவதற்கும் உபயோகமான ஸத்துவம்.

5. ாகப்பூச்சிகளைக் கொ ் டுவந்து மயிலையாவது வலிவுள்ள கோழி யயா து அவற்றைத் தின்னும்படியாகச் செய்து, பிறகு அவை யிடும் மலத்தையும் நீரையும் முதலில் இடுவ ்தத் தவிர்த்து மற்ற வகளைக் கிரஹித்து, க்ஷாரங்கள்-தேன-நெய் இ ற்ருல் அ ற்றை ஆட்டி, நன்ருகத் தீயிட்டு ஊதி அப்பால் வெளிவரும் தாம் ரம் போன்ற ஸத்து த்தை யெடுத்துக் கொள்ளவும். அச்சத்து த்தி ஞலா மோதிரத்தைக் கையிலணிந்து கொண்டு தண்ணீர் அருந்த ஸகல விஷமும் தீரும். இரஸே ்திர சி ்தாமணி.

6. ஸ்த்தாவர விஷங்கள் செடிகொடி மரங்கள் முதலிய ற்றைச் சேர்ந்த விஷங்கள அலரிவேர், எட்டிக்கொ ் டை அபினி முதலியன.

7. ஜங்கம விஷங் ள். பிராணிகள் ஸப ்தமான விஷங்க ் பாம்புகள் சிலந்திகள், ாய்முதலியவற்றின் விஷங்கள்.

## தைலபாதந முறை [1].

அங்கோல பீஜதைலம்.

(1) ஆற்றுத்தும்மட்டி வேர்களை யெடுத்து இடித்துக் காடியிற் போடவும்; அவ்விதமே ஏறழிஞ்சிற் கொட்டைகளிலிருந்து சோறு எடுத்து இடித்து அதையும் அதிற் சேர்க்கவும்; அதில் நெய்போல் தோய்ந்துள்ள தைலத்தை முறைப்படி [2] கிரஹிக்கவேண்டும். (2) ஆற்றுத்தும் மட்டியிலைகளையும் வாலுழுவையிலைகளையும் காடி விட்டு அரைத்து அக்கல்கத்தைக் கொண்டு ஏறழிஞ்சில் வித்துகளின் சூர்ணத்தை நன்றாக அரைத்தெடுத்து அவ்வரைத்ததையும் வலைபோன்ற வஸ்திரத்திற் கட்டி கடும்வெயிலில் ஒரு கழியிற் கட்டித் தொங்கவிட்டு அதனடியில் ஒரு கிண்ணத்தை வைக்கவும்; அக்கிண்ணத்தில் வடியும் தைலத்தை யெடுத்துவைத்துக் கொள்ளவும்; அது ச்வித்ரம் என்கிற வெண்குஷ்டத்தைப் போக்கும். (3) ஏறழிஞ்சிற் கொட்டைகளைச் சூர்ணம் செய்து காடியில் ஒரு இரவு முடியவும் ஊற வைத்து நன்றாக அரைத்து ஒரு பிண்டமாக உருட்டி கந்துகயந்திரத்தில் [3] வைத்து இரண்டு நாழிகை காலம் ஸ்வேதநம் [4] செய்ய வேண்டும்; அப்பிண்டத்தை ஒரு கெட்டி வஸ்திரத்திற் கட்டி கனத்த இரு கழிகளால் [5] அழுத்தி நசுக்கிப் பிழிய அடியில் வைத்த பாத்திரத்தில் எண்ணெய் வடியும். அத்தைலத்தை யெடுத்து ஏற்ற வியாதிகளில் உபயோகிக்கவும். இவ்விதமே கந்துகயந்திரத்தைக் கொண்டு வேறு எல்லாச் சரக்குகளிலிருந்தும் தைலத்தை வடித்தெடுக்கலாம். (4) வெண்குன்றுமணியைச் சமூலமாகக் கொண்டு வந்து சாறு பிழிந்து அச்சாற்றால் ஏறழிஞ்சில் வித்துகளை அரைத்து முன்போலவே தைலமெடுக்கலாம். 232 238½.

பலவேறு சரக்குகளிலிருந்து தைலம் இறக்கு முறைகள்.

(1) வாலுழுவை (2) தேவதாளி இவற்றின் விதைகளைப் பெரும் பூசணி வேர்களின் சாற்றால் அரைத்தும் முன்போலவே தைலம் எடுக்கலாம். (3) நாயுருவிச் சாற்றால் எட்டிக் கோட்டையை அரைத்து அதிலிருந்தும் தைலமெடுக்கலாம். (4) கற்றாழை வேரின் சாற்றால் பேயாள விதைகளை ஆட்டி, அதிலிருந்தும் தைலம் இறக்கலாம். (5) சிறந்த நாயுருவி வேரின் கஷாயத்தினால் வாலுழுவைவித்துக்களை அரைத்து அவற்றிலிருந்து தைலமெடுக்கலாம். (6) திப்பிலி (7) வெண் குன்றுமணி இவற்றைச் சூர்ணம் செய்து, மிக்க மிருதுவான காந்தலோஹப் பொடியையும்

1. தைலமு சில விதை முதலியவற்றின ஸத்துமாகையால் இவ்விஷயம் இங்கே குறிக்கப்படுகிறது.

2. முறைப்படி யென்றால் காய்ச்சியோ நசுக்கிப்பிழிந்தோ எடுப்பது எனக் கருத்து

3. கந்துகயந்திரம் 9-ம் அத்தியாயம் பார்க்க.

4. ஸ்வேதநம் 8-ம் அத்தியாயம் பார்க்க.

5. இரு கழிகளாலான இடுக்கிமாதிரியான கருவி கிட்டி எனப்படும்.

அத்துடன் கூட்டி தானியக் களஞ்சியத்திற் புதைத்து வைத்து பிறகு ஒரு பக்ஷம் கழித்து எடுத்து முன்போலவே தைலம் இறக்க லாம்.[1] 239 242.

## ஆரும் அத்தியாயம்
### சிஷ்யோபநயநம்[2].

இரஸ சாஸ்திரப் பிரகடனத்திற்கு முகாந்தரம்.

இரஸ ஸம்பந்தமான விஷயங்களைக் கூறும் நூல்களனைத்தையும் நன்றாகப் பரிசீலனை செய்து ஸாதகர்களின்[3] நன்மையைக் கருதி கிரமப்படி[4] இதில் விஷயங்கள் வெளியிடப்படுகின்றன. கிரமமில்லாமல் சாஸ்திரமில்லை. சாஸ்திரமின்றி கிரமமுமில்லை. ஆகவே கிரமத்துடன் கூடிய சாஸ்திரத்தைக் கற்றறிந்து எவன் காரியம் செய்கிருனே அவனே ஸித்தி பெறுவான். 2.

இரஸ சாஸ்திர குருவின் இலக்ஷணங்கள்.

இரஸசாஸ்திரம் கற்பிக்கும் ஆசாரியர் அறிஞனாகவும் திறமைசாலியாகவும் இரஸ சாஸ்திரத்தில் தேர்ந்தவனாகவும் மந்திரஸித்தி பெற்றவனாகவும் மனோ திடமமைந்தவனாகவும் சிவபக்தனாகவும் தேவீ பக்தனாகவும் வேள்விகளைச் செய்பவனாகவும் இருத்தல் வேண்டும். மேலும் எல்லாச் சாஸ்திரங்களிலுள்ள விசேஷங்களையும் அறிந்து இரஸச் சரக்குகளின் வேலைகளில் ஸாமர்த்தியம் பெற்றவனாகவும்

---

1. பலவேறு சரக்குகளிலிருந்து தைலமிறக்கும் முறை என்னும் இத்தலையங்கத்தின்கீழ் கூறப்படும் 7 வித முறைகளும் கந்துக யந்திரத்தின் உதவியினால் செய்யப்படுபவை. இவற்றுள் முதல் முறை ப[illegible]தகீ தைலம், இரண்டாவது தேவதாளீதைலம், மூன்றாவது விஷமுஷ்டி தைலம், நான்காவது ஜைபால தைலம ஐந்தாவது [illegible] தகீ தைலம் ஆருவது கிருஷ்ண தைலம், ஏழாவது, துண்[illegible] தை[illegible] என்று முறையே வழங்கப்படும்.

2. மஹாரஸாதிகள் நன்கு பக்குவம் செய்யப்படுவதற்கும் அவற்றைக்கொண்டு ரஸத்தை நன்கு ஸித்தம் செய்வதற்கும் ஏற்ற முறைகளைச் சாஸ்திர ரீதியாகக் கற்க வேண்டுமாதலால் தகுந்த குருவும், ஏற்ற சீடனும் அவசியமாகையால், சீடன் முறைப்படி குருகுலவாஸம் செய்து இரஸ சாஸ்திரம் கற்க வேண்டிய முறை இங்கு விவரிக்கப்படுகிறது. சிஷ்யனைப் பயில்விக்கும் அத்தியாயம் எனப் பொருள்.

3. ஸாதகர்—இரஸத்தை முறைப்படி பக்குவம் செய்து அதனால் அணிமாதி அஷ்ட மஹாஸித்திகளையடையும் உபாயங்களைக் கற்பவர்.

4. கிரமப்படி முறைப்படி; முன்பின் ஒழுங்கு தவருதபடி: என்றால் ஸ்வேதநம்-மூர்ச்சநம்-உத்தாபநம் முதலான ஸம்ஸ்கார முறைகளின் ஒழுங்கை யனுஸரித்து என்று பொருள். அல்லது அநுஷ்டான முறை தவருமல் என்னும் பொருள் கூறலாம்; சாஸ்திரத்திற் கூறிய முறைகளை அனுபவத்தில் தான் செய்தும் பிரயோகித்தும் பார்த்து என்பது கருத்து.

5. இரஸசாஸ்திரத்திற் கைதேர்ந்த ஸித்தனுவான் எனப் பொருள்.

இருக்கவேண்டும்' இவ்வித இலக்ஷணங்களுடன் கூடிய புருஷனே இரஸ சாஸதிரத்திற்குக் குருவாகாலாம். 3 4½.

இரஸசாஸ்திரம் பயிலும் மாணுக்கனது இலக்ஷணங்கள்.

சீடர்கள் குருவினிடம் பக்தர்களாகவும் நல்லொழுக்கமுள்ளவராகவும் ஸத்தியந் தவருதவராகவும் விரதாநுஷ்டானங்களைச் செய்வதில் திடமான பற்றுதலுள்ளவராகவும், சோம்பலற்றவராகவும் தமது தர்மங்கள் எவையென்பதை யறிந்தவராகவும் குருமாரது கட்டளைகளுக்கு எப்பொழுதும் காத்திருப்பவராகவும் இருத்தல்வேண்டும்; மேலும் ஆடம்பரம் துவேஷம் ஆகியவை நீங்கியவனுகவும் தொன்று தொட்டுவரும் ஆசாரங்களில் தீக்ஷை பெற்றவராகவும் சாந்தி குணம் நிரம்பியவராகவும், மந்திர சாஸ்திரத்திலும் தேவதைகளைப் பூஜிப்பதிலும் நோக்கமுள்ளவராகவும் சிறந்த ஸாதகர்களாகவும் உள்ள சிஷ்யர்களே இரஸ ஸம்ஸ்கார முறையில் கைதேர்ந்தவராவர். 5 7.

இரஸபாகங்களில் ஸஹாயகர்கள்.

ஸஹாயகர்கள் இரஸச்சரக்குகளைப் பக்குவம் செய்யும் வேலைகளில் எப்பொழுதும் சுறு சுறுப்புள்ளவராகவும் சீடர்களைவிட அதிக அடக்கமுள்ளவராகவும் குலசீலர்களாகவும், யஜமானனிடம் பய பக்தியுள்ளவராகவும் இருக்கவேண்டும்' அத்தகைய ஸஹாயகர்களே இரஸ வேலைகளில் உபயோகமுள்ளவராயிருப்பர். 8.

இரஸவித்தயில் ஸித்தி பெறவியலாதவர்.

நாஸ்திகர்கள் நல்லொழுக்கமற்றவர் மிகச்சொற்ப அறிவுடன் ஆடம்பரம் செய்யுந்தன்மையர் ஆகியவர்கள் கள்ளத்தனமாகவும், கபடமாகவும் மூர்க்கத்தனமாகவும் குருவினிடமின்றி வேறிடங்களிலிருந்தும் வித்தையைக் கைக்கொள்ள விரும்புவர். அத்தகயவர்களுக்கு மணி மந்திர ஔஷதங்கள் சிறிதும் பயன்படமாட்டா' ஒருக்கால் மூடத்தனத்தினல் ஏதேனும் இரஸ முறைகளை அவர்கள் செய்தால் தம்பொருளை அவர்கள் அழித்துக்கொள்ள நேரிடும். அவர்களுக்கு இவ்வுலகிலும் மேலுலகிலும் இன்பமே இல்லை. ஆகையினல் சீடன் பக்தி விசேஷத்தைக்கொண்டு குரு முற்றிலும் மனங்களிக்குமாறு நடந்து இரஸவித்தையைத் தான் அதில் ஸித்தியடையும் பொருட்டுப் பயில வேண்டும்' சீடன் சிரத்திற் கைகூப்பி வணங்கி ஆசிரியினிடமிருந்து ஆசியைப் பெற்று இரஸவித்தையை நன்கு ஸாதிக்கவேண்டும். 9 12.

இரஸசாலையின் அமைப்பு.

1. மனேஹரமான ஓரிடத்தில் இரஸசாலையை அமைக்கவேண்டும்; அவ்விடம் பிணிகள் பரவக் கூடாததாகவும் அறநெறிதவருது ஆளப்படும் இராஜ்யத்தைச் சேர்ந்ததாகவும் பார்வதி பரமேச்வரர்கள் கோயில் கொண்டிருப்பதாகவும் நகரத்திற்குச் சமீபமாய் நீர்வளம நிலவளங்களால் செழிப்புள்ளதாகவும் இருத்தல் வேண்டும். அத்தகையவிடத்திலேயே இரஸ வேலைகளைச் செய்து ஸித்தி

பெறலாம். இது இரஸசாலைக்கேற்ற தேசம ஆம். (2) நகரத்திற்கு அருகில் மனதைக் கவரக்கூடியதான தோட்டமொன்றில் இரஸ சாலையை அமைக்க வேண்டும். அத்தோட்டத்திற்குச் சுற்றிலும் நாற்புறமும் வாயிற்படிகளுடன் கூடியதாய் மதிற்சுவர் இருக்கவேண்டும்' அச்சாலை வெகு விஸ்தாரமாகவும் இரம்யமாகவும் போதியவளவு பெரிதான பெரிய சாளரங்கள் அமைக்கப்பெற்றதாகவும் நிருமிக்கப்படவேண்டும். அதற்கு அருகில் ஸமமாகவும் நல்ல வெளிச்சமுடையதுமாக இரஸமண்டபம ஒன்று அமைக்கப்பட வேண்டும்' அதுவும் நன்கு விசாலமாகவும் அனைவரும் நடமாடக்கூடாது ஏகாந்தமாகவும் கதவும் தாழ்ப்பாளும் அமைக்கப் பெற்றதாகவும் இருக்கவேண்டும்' அவ்விடத்தில் தரையானது மேடுபள்ளமில்லாமல் ஸமமாகவும் கெட்டியாகவும் கண்ணாடிபோல் வழவழப்புடன் பளபளப்புள்ளதாகவும் இருக்கவேண்டும். அதன் மத்தியில் அழகாக ஒரு திண்ணையும் அமைக்கப்படவேண்டும். 13 18

இரஸலிங்கமும் அதன் பூஜை முறைகளும்.

பொன்ரேக்கு மூன்று நிஷ்கப்பிரமாணம்• இரஸேந்திரம் [2] ஒன்பது நிஷ்கப்பிரமாணம்' இவ்விரண்டையும் காடிவிட்டு ஒரு யாமகாலம் ஆட்டவும்' அது தக்கொண்டு ஒரு லிங்கம் செய்யவும்' அந்த லிங்கத்தை ஓர் எலுமிச்சம் பழத்தினுள் அடக்கம் செய்து, காடியுள்ள பாத்திரத்தில் டோலாயந்திரத்தில் ஒரு நாள் எரித்துப் பக்குவம் செய்யவும். அந்த லிங்கத்தை முற்கூறிய மண்டபத்தில் வைத்து முறைப்படி பூஜை செய்யவும்' ஒரு இரஸலிங்கத்தைப் பூஜை செய்தால் ஆயிரங்கோடி லிங்கங்களை அர்ச்சித்த பலன் உண்டு; இரஸலிங்கத்தைத் தரிசிப்பதாலும் பரிசிப்பதாலும் ஸகல பாவங்களும் தீரும்' முத்தியும் பெறலாம்' எனச் சிவபெருமான் கூறியுள்ளார். ஆக்நேய திசையில் ஹ்ரீம் என்று அகோர மஹாமந்திரத்தையும் கூறி இரஸ லிங்கத்தைப் பூஜிக்கவேண்டும். பதினெண் புயங்களோடும் ஐந்து முகங்களோடும் மூன்று நேத்திரங்களோடும் கூடியதாகவும் வெண்ணிறமாகவும் நீலநிற கண்டமுள்ளதாகவும் பிரேதத்தில் ஏறியிருப்பதாகவும் இரஸலிங்கஸ்வரூபம் தோன்றுவதாகத் தியானிக்கவேண்டும். இரஸலிங்கத்தின் மடியில் ஒரு முகத்தோடும் நான்கு கைகளோடும் பொன்னிற வஸ்திரத்தோடும் உருக்கிய தங்கநிறமாய் மஹாதேவியார் வலது கரத்தில் ஜபவடத்தையும் இடது கரத்திற் பாசத்துடன் கூட அபயமுத்திரையையும் தரித்துக் கொண்டு வீற்றிருப்பதாகவும் தியானம் செய்ய வேண்டும். வாங்மாயா ஸ்ரீ: காமராஜ சக்திபீஜம். ரஸாங்குசா ய

ஸ்வாஹா· த்வாதசாம்சைவ[1] ஜ்ஞேயா வித்யா ரஸங்குசா என்னும் மந்திரமோதி ஸுகந்தங்கள் புஷ்பம் அக்ஷதை முதலியவற்றைக் கொண்டு தேவீபூஜையைச் செய்யவும். இரஸசாலையின் கீழ்த்திசையில் நந்தீச்வரனையும் தென்திசையில் ப்ருங்கிச்வரனையும் மேற்கில் மஹாகாலேச்வரனையும் வடதிசையில் குளீரேச்வரனையும் பிரதிஷ்டைசெய்து ஒவ்வொருவருக்கும் பிரணவத்தை முதலிலும் நம: என்பதை முடிவிலும் வைத்து நாமமந்திரங்களைக் கூறி[2] பூஜிக்க வேண்டும். இவ்வாறு ஆங்கு இரஸஸித்தியின் பொருட்டு இரஸலிங்கார்ச்சனையை நாள்தோறும் செய்யவேண்டும். இவ்விதம் சிவபெருமான் கூறிய இரஸவித்தையை முற்கூறிய விதிகளின்படி ஸாதகனுக்கு குரு மிகவும் மனங்குளிர்ந்து அனுக்கிரஹ பூர்வகமாய் உபதேசிக்கவேண்டும். சிறந்த நக்ஷத்திரத்தில் நல்ல முகூர்த்தத்தில் நீர் நிரம்பிய கும்பமொன்றை பொன் இரத்தினங்கள் கனிகள் ஆகியவற்றுடன் கூடியதாய் இரஸ சாலையில் இரஸலிங்கத்தின் முன்னிலையில் ஸ்தாபிக்கவேண்டும்· அக்கும்பத்தின் மேல் சிறந்த வஸ்திரத்தைச் சுற்றவும்· ஸுகந்தம் புஷ்பம் அக்ஷதை தூபம் நைவேத்யம் முதலியவற்றால் பக்தியுடன் அதைப் பூஜிக்கவும். பூஜையின் முடிவில் முக்கோணவடிவமான ஹோமகுண்டத்தில் எள்ளு நெய் பாயஸம் சதகுப்பி முதலியவற்றின் புஷ்பங்கள் ஆகியவற்றைக் கொண்டு அகோரமந்திரத்தையும் இரஸாங்குசமந்திரத்தையும் ஓதி ஹோமம் செய்யவும். அதன் முடிவில் சீடனை அழைக்கவேண்டும்· அவன் காலினீ தேவதையின சக்தியைப் பெற்றவனாகவும் இரஸஸித்தி பெறுவதிற் பற்றுள்ளவனாகவும் இருக்கவேண்டும். இவ்வித சக்தியைப் பெற்ற சீடனே சிறந்த குருவினிடம் தீக்ஷையைப் பெறவேண்டும். சுத்தமாக ஸ்நானம் செய்து வந்த சிஷ்யனை முற்கூறியபடி மந்திரத்தினால் பரிசுத்தமான கும்பஜலத்தினால் அபிஷேகம் செய்து வைத்து அகோரவித்தையையும் அங்குசவித்தையையும் சிஷயனுக்கு உபதேசிக்கவேண்டும். அவரவரது சக்திக்கியன்றவளவு சிஷ்யன் குருவுக்கு தக்ஷிணையும் அளிக்கவேண்டும். குருவின் கட்டளைப்படி அகோரமந்திரத்தையும் இரஸாங்குசமந்திர

---

1 இரஸாங்குச வித்யை "ஓம், ஐம் ஸ்ரீம் க்லீம், ஹ்ரீம் ரஸாங்குசாய நம:" எனகிற பன்னிரண்டு அக்ஷரங்களடங்கிய மந்திரம், அல்லது ஓம் காமராஜ சக்தி பீஜரஸாங்குசாயை நம:.

2. "ஓம் நந்தீச்வராய நம:, ஓம் ப்ருங்கீச்வராய நம: ஓம் மஹாகாலாய நம: ஓம் குளீராய நம:" என்றவாறு.

3. இரஸதீக்ஷை இரஸத்தை ஸம்ஸ்காரம் செய்யு முறைகளுள்பட அதற்கான மந்திர தந்திராதிகளைச் சிஷ்யனுக்கு உபதேசிக்கும் சடங்கு.

4. அகோர மந்திரம் 'ஓம் ராம் ஹ்ரீம், ஹ்ரூம் அகோரதர ப்ரஸ்ப்புட ப்ரஸ்ப்புட ப்ரகட ப்ரகட கஹ கஹ, சமய சமய ஜாத ஜாத தஹ தஹ பாதய பாதய ஓம் ஹ்ரீம் ஹ்ரைம், ஹ்ரௌம் ஹ்ரூம் அகோராய பட்."

த்தையும் தனித்தனியே இலக்ஷம் முறை ஜபிக்கவும். முடிவில் த்ரிகோண ரூபமான குண்டத்தில் ஜபத்தின் எண்ணிக்கையிற் பத்தி லொரு பாகம் தடவைகள் ஜாஜிப் பூக்களை த்ரிமதுரத்தில்[1] நனைத்து நனைத்து ஹோமம் செய்யவேண்டும். இறுதியில் முற்கூறிய காலி நீ கன்னிகையைக் கொண்டு இரஸ லிங்கத்துக்கு அரச்சனை செய் விக்கவும். இதை யெல்லாம் நிறைவேற்றிய பின் இரஸ சாலையிற் பிரவேசிக்கலாம. 19 42.

இரஸசாலை பரிசுத்தமாக ும் மெழுகப்பெற்றதாகவும் பெரிய திண்ணையுள்ளதாகவும் இருக்கவேண்டும். அத் திண்ணையில் ஸிந்தூரத்தைக்கொண்டு இரண்டி ரண்டு முழம் விஸ்தீர்ணமுள்ளவையாய் வட்டமான ஆறு கோணங்கள் வரையவும். திண்ணைக்கு வெளி யிலும் அவ்விதமே எட்டு வட்டங்களை வரைக

*இரஸ சாலையில் இரஸா தி ளை வைக்கும் முறை.*

அத்திண்ணைக்கு நான்கு வாயிற்படிகளமைத்து ஒவ்வொரு வாயிலி லு நான்கு கோணங்களான இரேகைகளுக்கிடையில் தாமரை தள கள் நான்கு வரைக. அனைத்துக்கும் இடையில் கர்ணிகை இருக்குமிடத்தில் கல்வத்தை வைக்கவும். அக்கல்வம் இரும்பாற் செய்யப்பட்டு பொன்னுலாகிய இரேகைகளைப் பெற்றிருத்தல் நலம். அக்கல்வத்தில் நூறு பலம், அல்லது ஐம்பது பலம் அல்லது இருபத் ைதந்து பலம் இரஸத்தைச் சேர்த்து இரஸலிங்கத்துக்குச் செய்த து போலவே பூஜை செய்யவும். ( ) வஜ்ரம் வைக்ராந்தம் வஜ்ராப் ரகம் காந்த லோஹம் டங்கணமென்னும் வெங் காரப் பூநாகஸத்துவம் ஆகிய இவ்வாறும் இரஸ திகள் எனப்படும். இவற்றை முறையே முன் வரையப்பட்ட ச கிரத்தில் ஆறு மூலைகளில் வைத்து பூஜிக்கவும். (2) கந்த கம் தாளகம் அன்னபேதி மனச்சிலை கங்குஷ்டம் ஸௌராஷ்ட்ரம்ருத்திகை இராஜா வர்த்தம்[2] கை ரிகமென்னும் காவி ஆகிய இவ்வெட்டும் உபரஸங்களாம். இவற்றை முற்கூறிய சக்கிரத்தில் முறையே கிழ்த்திசையிலுள்ள தளம்முதற் கொண்டு ஈசான திசை வரையிலுள்ள எட்டு திக்குகளிலுமுள்ள தளங்களில் வைக்க வேண்டும். (3) இரஸகம் விமலம் ஸ்வர்ண மாக்ஷிகம் சபலம் பால் துத்தம் இரஸாஞ்ஜனம், வி கம் மயில்துத்தம் என்பவை மஹாரஸங்களாம். இவற்றைச் சக்கிரத்தின் முனையிலுள்ள எட்டு தளங்களின் முனைகளிலும் கிழக்கு முனையாரம்பித்து ஈசான மூலையிலுள்ள தளம் வரையில் முறையே வைத்துப் பூஜிக்கவும். (4) பிறகு கிழக்கு வாயிலில் ஸ்வர்ணத்தையும வெள்ளியையும் வைக்கவும். தாம்ரம்

*இர சக்திகள்.*

*உபரஸங்கள்.*

*மஹார ங்கள்*

1. த்ரிமதுரம் மூன்று இனிப்புகள்: அவை: தேன் சர்க்கரை, நெய். இராஜ நிக டு. 'மதுத்ரயம்'' என்றும் கூறப்படும்.

. இராஜாவர்த்தம் இரத்தினங்களைச்சேர்ந்ததாயிருந்தும், இரஸ வித்தி முறையில் இது உபரஸங்களில் ஒன்ருகக் கருதப்படுகிறது.

ஈயம் இவற்றைத் தெற்கு வாயிலிலும் வங்கம் காந்தம் இவ்விரண்டையும மேற்கு வாயிலிலும் முண்டம் தீக்ஷ்ணம் இவற்றைவடக்கு வாயிலிலும் வைத்து இவ்வனைத்தையும் அகோரமந்திரத்தைக்கொண்டும் இரஸாகுச மந்திரத்தைக்கொண்டும் பூஜிக்கவேண்டும். (5) வாயிற்படிக்கு வெளியில் அடியில் வரும் பொருட்களையும் கருவிகளையும் வைக்கவேண்டும்: பிடம்[1] காஞ்ஜிக மென்னும் காடி யந்திரங்கள் க்ஷாரங்கள்[3] மண்கள்[4] இலவண கள் கோஷ்டிகள் மூஷைகள் வங்கநாளம் உமி தழல் ராட்டுவறட்டிகள் துருத்தி பலவகைக்குறடுகள் அம்மி கல்வ கள் உரல் தட்டான் வைத்துக்கொள்ளும் கருவிகள் எல்லாவிதமான நிறைகளோடு கூடிய பலவகைத் திராசுகள் மண் மரம் செம்பு உலோஹம் இவற்றாலாகிய பலவகைப்பாத்திரங்கள் திவ்யமான ஓஷதிவர்க்கங்கள்[7] இரஞ்ஜக[8] ஸ்நேஹநச்சரக்குகள் ஆகியவைகளாம் இவற்றையெல்லாம் பஞ்சாக்ஷர மென்னும் மூலமந்திரத்தினால்[1] பைரவதேவதையையும் ஆ கு பிரதிஷ்டை செய்து பூஜிக்க வேண்டும். அப்பொழுது இரஸகர்மத்தில்

அஷ்டலோஹங்கள்.

இரஸ கர்மத்தில் உதவும் கருவி முதலின.

---

1. பிடம்- இரஸத்தை ஜாரணம் செய்வதற்குபயோகமான க்ஷாரரூபமான சரக்கு. வெங்காரத்தைப் பலாசம் பட்டையின் சாற்றில் நூறுமுறை பாவனை செய்யவும்; இது அ நிழ பிட ம எனப்படும் இது எல்லாவற்றையும் ஜாரணம் செய்ய உதவும்" என்று இரஸேந்திரசி தாமணி. பிடம் பலவகைப்படும்.

2. ய திர கள் 9-வது அத்தியாயத்திற் கூறப்படுப வ.

3. க்ஷார ள் ஸர் ஜக்ஷாரம், டங்கணக்ஷாரம் ய க்ஷாரம்.

4. 'புற்றும ஓட்ட ட காவிக்கல் செங்கல் உப்புமண் ஆகிய இவ் ந்தும் பஞ ருத்திகை எனப்படும்."

5. கோஷ்டிகள் 10 வது அத்தியாயம் பார்க்க.

6. வங்க ாள ொருப்பை ஊது தற்கான ஒருவித கருவி.

7. ஓஷதிவர்க்கங்கள் ஜீவநீயாதிகணங்களைச் சேர் த மூலிகைகள் முதலியன.

8. இரஞ் கம்—நிறமுண்டுபண்ணும் ஸ்துக்கள். 'மஞ்ஜிஷ்டி பலாசு கருங்காலி செஞ்சந்தனம், அலரி, தேவதாரு ஒருவித மட்டிப்பால் போன்ற பிசினுண்டாகும் ஸரளதேவதாரு, மஞ்சள், மரமஞ்சள் மற்றுமுள்ள சி ந்த புஷ்பங்கள் இவற்றைச் செவ்வரக்குக் குழம்பால் ஆட்டி தைலம் காச்சவும். அத்தைலத்தினால் பீஜம் முதலியதற்குச்சாயமேற்றலாம்." என்று இரஸேந்திர சிந்தாமணி.

9. ேஹ ம்- -சரக்குகளுக்கு ஸ்நிக்த்தத்துவம் என்னும் எண்ணெய்ப் பசை ய யுண்டா கும் சரக்குகள்.

10. மூல ந்திரம் வாக், மாயா, ஹ்ரீம் க்ஷேம் க்ஷமம்' என்பது பஞ்சாக்ஷர மூலம திரம் என்று கூறப்படுகிறது.

ஸித்திபெற்ற ஸகல ஸித்தர்களுடைய யும் அடியில் வரும் நாம கௗச் சங்கீர்த்தனம் செய்யவேண்டும்: வியாளாசார்யர்[1] சந்திரஸேநர் ஸுபுத்தி[2] நரவாஹனர் நாகார்ஜுனர் இரத்னகோஷர் ஸுராநந்தர் யசோதனர் இந்திரதூமர் மாண்டவ்யர் சர்ப்படி சூரஸேனர் ஆகமர் நாகபுத்தி[7] கண்டர் காபாலிகர் காமாரி தாந்த்ரிகர் சம்பு லங்கர்[10] லம்படர் சாரதர்[11] பானுஸுரன்[12] முனிச்ரேஷ்டர்[13] ரவிந்தர் கபிலர் பலி ஆகிய இவ்வனைவரும் இரஸ ஸித்தியைப் பெற்று மிகவும் தேஹமனோபலமும் பெற்றவர் பூதகளையும் வென்று வசப்படுத்தியவர் சிரஞ்ஜீவிகளாயிருந்து இன்பத்தி லாழ்ந்தவராய் உலகமெங்கும் ஸஞ்சரிப்பவர் இவ்விருபத்தேழு ஸித்தர்களும் இரஸஸித்தி யளிக்கக்கூடிய சக்தியுள்ளவர்கள் வணங்கி வழிபாடு செய்வதற்கேற்றவர். இந்த நாம ஸங்கீர்த்தனத்திற்குப் பிறகு சிரத்தையுடன் இரஸபூஜை செய்யவேண்டும். பின்னர் இஷ்டதைவங்களையும் தொழுதுக் களிப்புறச் செய்ய வேண்டும். இவ்வாறு இரஸசாலையில் ஸகலத்திரவ்யங்களையும் ஒழுங்காகச் சேமித்து வைத்து இரஸோத்ஸவத்தை நிறைவேற்றவேண்டும் அத்திருவிழா இரஸஸாதந வேலையில் ரத்தடங்கலும் உண்டாகாமற் செய்யக்கூடியதா யிருப்பதோடு இஷ்டஸித்தியடையவும் பயன்படும். அப்படிக்கின்றி விஷயமறியாமல் ஒருவன் இரஸ ஸம்பந்தமான மந்திரதீக்ஷையில்லாமலும் குரூடதேசமின்றியும் இரஸக்கிரியையைச் செய்ய விரும்பினால் அவன் பெரு முயற்சி செய்தும் அதில் ஸித்திபெறமாட்டான். ஆகவே எம் முயற்சி செய்தேனும் சாஸ்திரத்திற் கூறிய வண்ணம் இரஸக் கிரியையைச் செய்யவேண்டும்:43 66.

இருபத்தேழு ஸித்தர்கள்.

---

1. வியாளாசார்யர் வியாளர் அல்லது வியாடி.
2. ஸுபுத்தி கோமுகர் என்றும் கூறப்படுவர்.
3. இரத்ன கோஷர் இரத்ன கோசர்.
4. இந்திர தூமர் இந்திரதர்.
5. சர்ப்படி ஹரி.
6. ஆகமர் ஆதிமர்.
7. நாகபுத்தி நாகபோதி.
8. காமாரி காபாலி.
9. தாந்த்ரிகர் ஸாத்விகர்.
10. லங்கர் லங்கேசர்.
11. சாரதர் விசாரதர்.
12. பானுஸுரன் பாஸ்கரர்.
13. முனிச்ரேஷ்டர் பிரம்மா.
14. பலி மத்தர்.

இரஸவித்யையைக் கற்க விரும்புபவர் பிடம் முதலான [1] உபாயங்களைக் கசடறத் தெரிந்து கொள்வதிற் பெரிதும் முயற்சியுள்ளவராயிருக்கவேண்டும். குருமார்களை யடுத்து வித்யையைக்கற்கவேண்டும். அத்தொழிலுக்கு அவச்யமான அதிகாரத்தை அரசாங்கத்தினிடமிருந்து பெற்றிருந்தால்தான் அவர் நன்கு விளங்குவர். இரஸ வித்யையைத் தவிர்த்து வேறு எப்பணியிலும் அவர் கருத்தைச் செலுத்தக் கூடாது. இரஸக்கிரியைகளை நன்கு நிறைவேற்றப்போதுமான திரவ்ய வான்களாகவும் அத்தொழிலைச் செய்வதற்கு ஜனங்களால் வேண்டப்பெற்றவராகவும் இருத்தல்வேண்டும். இரஸாதிகளின் பரிமாணங்களையும் பக்குவ முறைகளையும் அவற்றிற்கு அவசியமான யந்திரங்களையும் நன்றிந்து அவற்றைப் பிரயோகிப்பதில் திறமையுள்ளவராகவும் எல்லா ஔஷதங்களையும் பக்குவம் செய்து உபயோகிப்பதிற் சமர்த்தர்களாகவும் இருக்கவேண்டும். கிழத்தனம் மரணம் வியாதிகள் முதலான பீடைகளினின்றும் மீட்டு மனிதரைக் கரையேற்றி வைக்கும் பிரபாவமுள்ள பாதரஸமானது முற்கூறிய குணமுள்ளவருக்கே ஸித்தியைத் தருமன்றி வேறு வகையிற் பயன் தராது. 67.

இரஸவித்திபெறுவதற்கான யோக்யதைகள்.

(1) இரஸசாஸ்திரத்தை அந்தணர்களுக்கு தர்மத்தின் பொருட்டும் க்ஷத்திரியர் வைசியர் இவர்களுக்கு விருத்தியின் பொருட்டும் மற்றவர்களுக்கு ஊழியம் செய்வதற்கும் உபதேசிக்க வேண்டும். (2) இரஸ வித்தையைத் தோன்றியவாறு அனைவருக்கும் வெகு பஹிரங்கமாகக் கூறுவதால் அச்சாஸ்திரத்தின் மஹிமை குன்றுமாகையால் கூடுமானவரையில் அதை கோப்யமாக வைத்திருப்பது நலம். (3) ஔஷதமும் அப்படியே. ரோகிகளும் வேறு பலரும் அறிய ஔஷதங்களைச் செய்வதும் சிகித்ஸைகளை நிறைவேற்றுவதும் உசிதமல்ல. அப்படிச் செய்வதால் ஔஷதாதிகளுக்குள்ள வீர்யம் பெருமையுறுது. 68 71.

இரஸ சாஸ்திரோபதேசத்திற்குப் பாத்திரமானவர்கள்.

1. பிடம் இதைப் பற்றி 8 ம் அத்தியாயம் பார்க்க.

'இரஸமனது மனிதருக்கு நேரிடும் பலவகையான பிணி கிழத்தனம், மரணம் இக்காரணங்களாலுண்டாகும் பயத்தைப் போக்கி, அவர்களைக் கடைத்தேறச் செய்வதால் பதம் என்று கூறப்கிறது: இரஸேச்வரதர்சனம்.

# ஏழாம் அத்தியாயம்.

## இரஸ சாலை

**இரஸ சாலை அமைக்கப்பட வேண்டிய வகை**

வெயிற் காற்று முதலியவைகளாலுண்டாகக் கூடிய எவ்வித தீமையுமணுகாத சிறந்ததோர் இடத்தில் இரஸ சாலையை நிரூமிக்கவேண்டும். எல்லா மூலிகைகளும் கிடைக்கக் கூடியதாகவும் சிறந்த கிணறுகளுள்ளதாகவும் மிகச் சுத்தமாய் மனோஹரமானதாகவும் அவ்விடம் இருக்கவேண்டும். இரஸ சாலைக்கு உபயோகமான ஒரு தோட்டத்தில் அதன் வடதிசையிலாவது ஈசான்ய திக்கிலாவது கிழக்குப் பக்கத்திலாவது வெகு விமர்சையாக அச்சாலை அமைக்கப்படவேண்டும். அதில் அவசியமான அநேக சரக்குகளும் கருவிகளும் பாத்திரம் முதலிய மற்றெல்லா உபகரணங்களும் சேமித்து வைக்கப்பட்டிருக்க வேண்டும். 1 2.

**இரஸசாலையில் எதெது எவ்வெவ்விடத்தில் அமைக்கப்பட வேண்டுமென்பது.**

இரஸ சாலையின் கிழக்குப் பக்கத்தில் இரஸ பைரவனை ஸ்தாபிக்க வேண்டும். தென் கிழக்கு மூலையில் அக்னியின் உதவியைக் கொண்டு செய்யவேண்டிய காரியங்களுக்கு வஸதிகளை அமைக்கவேண்டும். தெற்குப்பக்கத்தில் உடைப்பது இடிப்பது குத்துவது முதலான கல்லுரல் கல்வம் முதலியதிற் செய்யும் வேலைகளுக்கு இடமேற்படுத்தவேண்டும். தென்கிழக்கில் சஸ்திரகர்மங்களுக்கும் [4] மேற்கில் கழுவுதல் முதலியதற்கும் வடமேற்கில் சோஷணமென்னும் உலர்த்துவது முதலான வேலைகளுக்கும் வடக்கில் வேதநகாரியத்திற்கும் [5] வடகீழ் மூலையில் பக்குவ முறைகளால் முடித்துச் சித்தம் செய்யப்பட்ட சகல சரக்குகளையும் ஔஷதாதிகளையும் சேர்த்து வைப்பதற்கும் வஸதிகள் அமைக்கப் படவேண்டும். 3 4½.

இரஸாதிகளைச் சித்தம் செய்வதற்கு அவச்யமான ஸகல வஸ்துக்களையும் இரஸ சாலையிற் சேர்த்து வைக்கவேண்டும். அவை

1. முன் அத்தியாயத்தில் சுருக்கமாகக் கூறிய இரஸசாலை விஷயம் இச்சாஸ்திரத்தில் முக்கியமெனக் கருதி, அதே விஷயம் சிறிது விஸ்தரித்து இவ்வத்தியாயத்தில் விளக்கப் படுகின்றது.

2. இரஸ பைரவன் முன் அத்தியாயத்திற் கூறிய இரஸலிங்கம்.

3. அக்னியினலாகவேண்டிய காரியங்கள் உலோஹாதிகளை உலையிற் காய்ச்சுதல், உருக்குதல் புடமிடுதல் முதலியன.

4. தாது லோஹாதிகளை வெட்டுவது, அறுப்பது இழைப்பது முதலிய வேலைகளுக்கு உதவும் கருவிகள் இதனல் குறிக்கப்படுகின்றன.

5. வேதநம் வேதையென்றும் வழங்கப்படும்; இரஸேந்திரம் தாக்குவதாலே தாம்ராதிகள் சுய குணம் விட்டு ஸ்வர்ணாதிகளின் தன்மையைப் பெறுமாறு செய்யும் முறை வேதநம் எனப்படும்.

யாவன :—ஸத்வபாதந கோஷ்டி[1] காரகோஷ்டி பூமி கோஷ்டி சலத் கோஷ்டி பலஅளவான ஜலத்ரேணிகள் இரண்டு துருத்திகள் ஊதுவதற்கு மூங்கிற் குழல் ஒன்று இரும்புக் குழல் ஒன்று பொன் இரும்பு வெண்கலம செப்பு கருங்கல் ஆகியவற்று லான குடங்கள் சர்மகாரர்[4] உபயோகிக்கும் வெவ்வேறு வகையான கருவிகள் சிறிதும் பெரிதுமான அரைக்கும் உரல்கள் அவற்றிற்கு வேண்டிய சிறியவையும் பெரியவையுமான குழவிகள் கல்வங்கள் வட்டமான வாயையுடைய பெரிய கல்வங்கள் அதேவிதமான இரும்புக் கல்வங்கள் தப்தகல்வங்கள்[5] அவ்விதமே அரைக்கவும் இழைக்கவும் வேண்டிய குழவி முதலிய கருவிகள் மிகவும் நுட்பமான ஆயிரக்கணக்கான கண்ணறைகளையுடைய சல்லடை நன்றாகப் பதனிட்டுச் சுத்தமாயுள்ள அகன்ற தோல் துண்டுகள் சலாகைகள் புரிமணைகள் ஆகியவைகள் இரஸசாலையில் எப்பொழுதும் இருக்கவேண்டியவை.

இரஸசாலையில் இருக்க வேண்டிய வஸ்துக்கள்.

சல்லடை மூன்று வகைப்படும். அவற்றின் தன்மைகளாவன (1) மூங்கிற் சிம்புகளால் வேயப்பட்டு மெல்லிய கயிறுகளால் கட்டப்பட்டுள்ளது ஒருவித சல்லடை; இது கனத்த வஸ்துக்களைச் சலிப்பதற்கு உபயோகமானது. (2) மூங்கிற் சிம்புகளைக் கொண்டே சூர்ணங்களைச் சலிப்பதற்கேற்றவாறு சிறிய துவாரங்களுள்ளதாய் மற்றொரு சல்லடையும் செய்யப்படுவதுண்டு. (3) சரக்கொன்றை இலவன் இளமூங்கில் இவற்றின் கொடிபோன்ற மிகவும் மெல்லிய கழிகளால் சுற்றிலும் நாலு அங்குலம் உயரமுள்ள வரம்புகள் கட்டப்பட்டு அவற்றைப் பதனிட்ட ஆட்டுச் சர்மத்தினால் சுற்றிக் கட்டவும்; அவ்வரம்பு உயரத்தில் ஒரு பிடி அளவாகவாவது இருக்கலாம்; அதற்கு அடியில் குதிரை வால் மயிர்களைக் கிட்டக் கிட்ட அழுத்தமாகப் பின்னியாவது நல்ல வஸ்திரத்தைத் தைத்தாவது அடித்தலம் நிருமிக்கப்படவேண்டும். மிகவும் ஸூக்ஷ்மமான மிருதுவான சூர்ணம் வேண்டுமானால் இவ்வித சல்லடையினால் சலிக்கவேண்டும். மேலும் மூஷைகள் செய்வதற்குபயோகமான மண் உமி பஞ்சுகள் எரிமுட்டைகள்

மூன்றுவித சல்லடைகள்.

1. ஸத்வபாதந கோஷ்டி அங்காரகோஷ்டி·10 ம்அத்தியாயம் பார்க்க.

2. பூமி கோஷ்டி பாதாள கோஷ்டி; 10-ம் அத்தியாயம்பார்க்க.

3. சலத் கோஷ்டி எவ்விடத்திலும் எடுத்துப் போகக்கூடிய அரைக்கும் கும்மட்டி.

4. சர்மகாரர் தோல் வேலை செய்பவர்; செம்மான்கள்.

5. தப்தகல்வம் கல்வத்தின் கீழ் தீயிட்டு மருந்தைச் சுடப்பண்ணிக் கொண்டே அரைக்க உதவக்கூடிய சிறந்த கல்வங்கள். இதற்குச் சாதாரணமாய் இரும்பாலாகிய கல்வங்கள் உபயோகிக்கப்படுவது வழக்கம்.

மாவகைகள் மூ வித ஔஷதங்கள் முதலியன. தாதுத்திரவ்யங்களாலும் பிராணி ஸம்பந்தமான வஸ்துக்களாலும் மூலிகைகளாலும் ஆகிய மூன்று வித ஔஷதங்கள் கட்டைக் கரி பசுவின் காலால் பொடியாக்கப்பட்டு உலர்ந்துள்ள சாணத்தூள் மணல் மாக்கல் (1) கட்டைகள் எரிந்த பிறகு சாம்பராவதற்கு முன் நீர் ஊற்றி அணைக்கப்பட்ட கரிகள் சிகித்ரங்கள் எனப்படும். (2) கட்டைகள் எரிந்துவருகையில் நீரில்லாமல் மண் முதலியதில் அடக்கம் செய்து அணைந்துவிட்டால் அதிலிருந்துண்டாகும் கரிகள் கோகிலங்கள் என்று வழங்கப்படும்.

கரி முதலியன.

குப்பிகள் கிண்ணங்கள் முதலியன. பிஷ்டகம் சகணம் சாணம் உபலம் உத்பலம், கிரிண்டம் உபலஸாடி ஆகியவை உலர்ந்த சாணத்தின் பெயர்களாம். பீங்கான் இரும்பு மண் கவடி இவற்றாலாகிய குப்பிகளும் அவற்றாலாகிய கிண்ணங்கள் ஆகியவையும் வேண்டும். (1) கூபிகா குபிகா கோலா கிரிண்டிகா என்பவை குப்பியின் பர்யாய நாமங்களாம். (2) அங்ஙனமே சஷகம் கடோரீ வாடிகா காரிகா கஞ்சோலீ கிராஹிகா என்பவை ஔஷதாதிகளைப் பருகுவதற்கான கிண்ணங்களின் பெயர்களாம். மேலும் மூங்கிற் சிம்புகளாலாகிய சுளகுகளும் சிறிய முறங்களும் மற்றும் கூடை முதலியனவும் தேவை. சிறிய சங்குகளும் கத்திகளும் உறிகளும் மற்றும் அவ்விடத்தில் உபயோகப்படுபவையும் சேர்த்து வக்கப்படவேண்டும். பாலிகைகள் கூர்ச்சங்கள் காய் முதலியவை நறுக்க வேண்டிய கருவிகள் மற்றும் சாலையைக் கூட்டிச் சுத்தமாக்குவது முதலாக இரஸ பாகங்களைச் செய்து முடிப்பதீறாகவுள்ள எல்லாக் காரியங்களுக்கும் தேவையான வஸ்துக்களும் கருவிகளும் அவ்விடத்தில் ஆயத்தமாயிருக்க வேண்டும். இவ்வனைத்தையும் இரஸாங்குச மந்திரத்தினால் ஜபித்துச் சேமித்துவைக்க வேண்டும். 5 22½.

இரஸசாலைக்கு வைத்தியர்கள் பரிசாரகர் முதலானோர். (1) இரஸ சாஸ்திரத்தைக் கசடற வுணர்ந்தவர்களும் வைத்திய நிகண்டுவை யறிந்துள்ளவரும் சாஸ்திரதத்துவங்களை விரித்துரைக்க வல்லவரும் எல்லாத் தேச பாஷைகளைக் கற்றவருமான வைத்தியர்களையும இரஸஸாதகர்கள் உதவிக்குப் பெறவேண்டும். (2) அவ்விடத்திற் பரிசாரகர்கள் சுறுசுறுப்பாகவும் பரிசுத்தமாகவும் மிகத் திறமைசாலிகளாகவும் தேர்ந்த வலிமையுள்ளவர்களாகவும் இருக்கவேண்டும். (3) அறநெறிதவறுதவனாகவும் ஸத்தியம் பேசுபவனாகவும் படிப்பிற்றேர்ந்தவனாகவும் சிவன் விஷ்ணு இவர்களைப் பூஜிப்பவனாகவும் தயை கூர்ந்தமனத்தினனாக

---

1. பாலிகை வாயகன்ற பாத்திரம்.

2. கூர்ச்சம் குச்சு.

வும் பத்மஹஸ்தனுகவு[1] முள்ளவனுக்கே இரஸவைத்தியத்திற் பிரவேசமளிக்கலாம். (4) எந்த வைத்தியனது ஹஸ்தத்தில் பதாகை கும்பம் தாமரைப்பூ மத்ஸியம் தனுஸ் ஆகியவற்றைப் போன்ற இரேகைகள் இருக்கின்றனவோ மேல்நோக்கிய ரேகை அநாமிகையென்னும் ஆழிவிரலுக்கு அடிப்புறம் வரையில் நீண்டிருக்கின்றதோ அவன் **அமருத ஹஸதன்** எனப்படுகிருன். (5) தைவமிகழ்பவன், தயையில்லாதவன் உலோபி குருவினிடம் வித்தையைக் கற்காதவன் கையில் கறுப்புக் கோடுகளைப் பெற்றவன் ஆகிய இத்தகைய வைத்தியன் **தக்த்தஹஸதன்** எனப்படுகிருன். அவனுக்கு இரஸாதிக்ரியைகளில் அதிகாரமளிக்கக்கூடாது. 23 271.

அம்ருத ஹஸ்தன்.

தக்த்தஹஸ்த

(1) பூதங்களைஓட்டுவதற்கும் அடக்குவதற்கும் உபயோகமான மந்திரங்களை எவர் அறிந்திருக்கின்றனரோ அவர்களை நிதி ளை[2] டேபிடிக்கும் வேலையில் நியமிக்க வேண்டும். (2) தேஹவலிமையிற் சிறந்தவர்களும் ஸத்தியம் பேசுபவர்களும் சிவந்த நேத்திரங்களைப் படைத்துக் கறுத்த தேஹத்துடன் கூடியவர்களாய் பூதங்களை விரட்டும் வித்தையைக் கற்றவர்களாயுமுள்ள மனிதரையே **பலிஸாத வேலையில்** நியமிக்க வேண்டும். (3) உலோபிகளல்லாதவர்களாயும் ஸத்தியம் பேசுபவராகவும் தேவர்களையும் அந்தணரையும் வணங்கித்தொழுபவராகவும் இந்திரியங்களை அடக்கியாளுபவராகவும் பத்தியபோஜனமுபயோகிப்பவராகவுமுள்ள பிணியாளருக்கே **இரஸாயநம் அளிக்கப்பட** வேண்டும். (4) செல்வவான்களாகவும் கொடையாளிகளாகவும் ஸகல உபகரணங்களைப் பெற்றவராகவும் குருவின் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டவராகவுமுள்ள மனிதரையே **தாதுவாத வேலையில்**[4] நியமிக்கவேண்டும். (5) ஒவ்வொரு மூலிகையின் பெயரை அறிந்தவர்களாயும், பரிசுத்தர்களாயும் வஞ்சநெஞ்சல்லாதவராகவும் அநேகதேசபாஷை யுணர்ந்தவராகவு முள்ளவர்களையே **மூலிகைளைக் கிரஹித் வருவதற்கு** நியமிக்க வேண்டும். 28 32.

நிதிஸாதம், பலிஸாதம், இரஸாயம், தாதுவாதம் ஒஷதிக்கிரஹம்.

1. பத்மஹஸ்தன் அம்ருதஹஸ்தன். அத்தகைய வைத்தியன் கயால் செய்யப்படும் சிகித் ஸ ஆரோக்கியத்தையும் ஆயுளையும் விருத்தி செய்யும் எனக் ருதப்படுகிறது.

2. நிதி—புதையல்; இங்கு இரஸேந்திர மெ கிற பாதரஸம் இருக்கும் கனியே முக்கியமாக நிதி யெனப்படுகிறது.

3. பலிஸாதநம் தேவீபூஜை முதலியதற் ான பிராணிகளைச் சம்பாதித்தல் என்று ஒரு வியாக்யா ம் எழுதுகிறது. ஆனல் முதலில் இ ஸ்ஸ தநம கூறப்பட்டிருப்பதால் அடுத்தாற்போல **பலி** யென்பதற்கு ந்த ம் என்பதுதான் ஏற்ற பொருளாகும்.

4. தாதுவாதம் இரஸவாதம்.

இரஸ ஸித்தியும் பலனும்.

(1) பரிசுத்தமாகவும் ஸத்தியமே பேசுபவராகவும் ஆஸ்திகராகவும் தாராளமான கொள்கையுடன் தீரர்களாகவும் எதிலும் எச்சந்தேஹமுமில்லாத மனத்தையுடையவராகவுமுள்ள ஸாதகர்களுக்கே எப்பொழுதும் இரஸஸித்தியுண்டாகும். (2) இரஸத்தைப் பதினெட்டு வகையான ஸம்ஸ்கார முறைகளால் ஸித்தம் செய்தால் அவ்வித இரஸமே ஸித்தி பெறுவதற்கு மிகவும் ஏற்றதாகும். ஒரு முறை இரஸஸித்தியேற்படாவிடில் மறுமுறை அதை நிறைவேற்றிக்கொள்ள முயலவேண்டும். (3) இரஸஸித்தி பெற்ற மனிதன் கொடையாளியாவான்· இன்பங்களை யனுபவிப்பான்· அவன் வேறெவரிடமும் இரக்கமாட்டான்· கிழத்தனத்தைப் பெறான்· உலகத்தோரால் கொண்டாடப் படுவான்· நல்ல தேஹகாந்தியைப் பெறுவான்· எப்பொழுதும் ஆரோக்கியமாக வாழ்வான். 33 35.

•

# எட்டாம் அத்தியாயம்

## இரஸ பரிபாஷைகள்.

இரஸ பரிபாஷைகள்.

ஸோமதேவன் என்னும் ஸித்தராலும் வேறு ஸித்தர்களாலும் இயற்றப்பட்டுள்ள இரஸசாஸ்திரத்திலிருந்து இரஸத்தைப் பக்குவம் செய்வதற்கான முறைகளைப் பற்றிய பரிபாஷைகள் இவ்வத்தியாயத்தில் மொழியப்படும். 1.

**தன்வந்தரிபாகம்:** ஜாரணாதி முறைப்படி பக்குவம் செய்து ஸித்தமான இரஸௌஷதங்களிலும் தைலங்களிலும் கிருதங்களிலும் பாதி பாகத்தையும் லேஹ்யத்தில் எட்டிலொருபாகத்தையும் முறைப்படி பக்குவம்செய்து முடிக்கப்பட்ட உலோஹௌஷதங்கள் சூர்ணங்கள் குளிகைகள் ஆகியவற்றில் ஏழிலொரு பகுதியையும் அவற்றைத் தனக்காகப் பக்குவம் செய்யும் வைத்திய சிரேஷ்டனுக்குப் பிணியாளியானவன் அவ்வைத்தியனை தன்வந்தரியாகக் கருதி அளித்துவிடவேண்டும்· அக்கொடை அப்பிணியாளிக்கு முற்றிலும் ஆரோக்கிய சுகத்தையளிக்கும்· அவ்விதம் வைத்தியருக்குக் கொடுக்கப்படும் ஔஷதபாகம் தன்வந்தரிபாகம்[1] என்று வழங்கப்படும். 2.

**ருத்ரபாகம்:** (1) ஔஷதங்களுக்கான சரக்குகளைப் பிணியாளிக்காக விற்பனை செய்யும் வர்த்தகனிடமிருந்து விற்பனையிற் கிடைத்தத் தொகையிலிருந்து வைத்தியன் பதினொன்றிலொரு பகுதி திரவ்யத்தைப் பெறலாம்· அது ருத்ரபாகம் என்று மொழியப்படுகிறது. (2) ருத்ராம்சத்தை அதிகமாகக் கிரஹிப்பதும்

---

[1] தன்வந்தரிபாகம் இது அசவினீபாகம் என்றும் கூறப்படும். வைத்தியர்களிடம் தன்வந்தரியின் அம்சம் உண்டென்று நம்பப்படுவதால் இப்பெயர் வந்தது.

அப்படிக் கிரஹித்த ஔஷதத்தை லோபியான எவ்வைத்தியன் தாத விதமாகச் செய்து கொடுக்கின்றானோ அவன் நம்பிக் கத்திரோஹம் செய்தவனாவான். 3 4.

கஜ்ஜலி. தாதுத்திரவ்யங்களையும் கந்தகம் முதலியவற்றையும் திரவப் பொருள் சேர்க்காமலே வெகு மிருதுவாக அரைக்க மைமாதிரியாக அவ்வனைத்தும் மாறும்; கறுப்பாக மாறிய இக்கூட்டுச்சரக்கு கஜ்ஜலி[1] யென்று கூறப்படும். 5.

இரஸ பங்கம். முற்கூறிய சரக்குகளை ஏதேனும் திரவப்பொருள் கூட்டி அரைக்கச் சாந்துபோல் வருமானால் அது இரஸ பங்கம்[2] எனப்படும். 6.

பிஷ்டி. (1) அ ர நிஷ்கப் பிரமாணம் கந்தகம்; அதில் பன்னிரண்டி லொரு பாகம் இரஸம். இவ்விகிதப்படி எடுத்து கல்வத்திலிட்டு அதைக் கடும் வெயிலில் வைத்து இரஸத்தின் மீது சிறுகச் சிறுக கந்தகத்தைச் சேர்த்துக்கொண்டே அரைக்க அ வ வெண்ணெய் போன்று சாந்தாகும். அதற்கு பிஷடி யென்று பெயர். (2) இரஸத்தையும் கந்தகத்தையும் கல்வத்திலிட்டு ரால் விட்டு நன்றாகக் குழைத்து அரைத்தால் அவை சாந்து போலாகும்; இதையும் பிஷ்டியென்று சிலர் கருதுவர். 7 8.

பாத பிஷ்டி. இரஸம் ஒரு பங்கு ஸ்வர்ணம் அதில் நாலிலொரு பங்கு; இவ்விரண்டையும் கூட்டி நன்றாக அரைத்து பிஷ்டியைப் போலாக்கவும்; இது பாதநபிஷ்டி யெனப்படும்.[4] இது உத்தமமான இரஸஸித்திக்கு உபயோகமாகும். 9.

ஹேம க்ருஷ்டி, தார க்ருஷ்டி. (1) வெள்ளியையாவது ஸ்வர்ணத்தையாவது இரஸ கந்தகாதிகளுடன் கூட்டி பஸ்மமாகுமாறு பக்குவம் செய்யவும்; பிறகு பலமுறை பாதந யந்திராதிகளைக் கொண்டு அந்த லோஹங்களை உத்தாபநம் செய்ய அவை முறையே தாரக்ருஷ்டி யென்றும் ஹேம க்ருஷ்டி யென்றும் கூறப்படும். (2) பொன்னை உருக்கி அதனுடன் ஹேமக்ருஷ்டி யக் கூட்டினால் அப்பொன்னின் நிறம் குறைய மாட்டாது. (3) ஹேமக்ருஷ்டியினால் ஆகிய பீஜத்திரவ்யமானது[6] இரஸத்தைச் செந்நிறமாக்கவல்லது. 10 11.

---

1. கஜ்ஜலி மை யென்று பொருள்.
2. இரஸ பங்கம் சாந்து போன்ற இரஸம் அல்லது இரஸக் குழம்பு என்று பொருள்.
3. பிஷ்டி - நீர்விட்டுப் பிசைந்த மாப்பண்டம் போன்றது எனப் பொருள்.
4. ஊர்த்வபாத யந்திராதிகளால் இதைப் பக்குவம் செய்ய வேண்டியிருப்பதால் இப் பெயர் வந்தது.
5. உத்தாபநம் இதே அத்தியாயத்தில் பிறகு கூறப்படுகிறது.
6. பீஜத்திரவ்யம் இதே அத்தியாயத்தில் பிறகு விவரிக்கப்படுகிறது.

தாம்ரத்தையும் தீக்ஷ்ண லோஹத் தயும் உருக்கி கந்த ம் கலந்த எலுமிச்சஞ் சாற்றில் பலமுறை[1] ஊற்றவும்; அவ்விதம் உருக்கி யெடுத்த இந்த மிச்ரலோஹம் வரலோஹம் எனப்படும். 12.

ரலோஹம்.

அவ்வரலோஹத்தினுல் பொன்னுக்குச் செந்நிறம் அதிகமுண்டாக்கலாம்; அவ்விதம் செய்த ஸ்வர்ணம் ஹேம ரக்தி யென வழங்கப்படும். அந்த ஹேம ரக்தியை உருகிய ஸ்வர்ணத்திலிட்டால் அது அப்பொன்னுக்கு விசேஷமான சிறந்த நிறத்தை தக் கொடுக்கும். இது வெள்ளிக்கும் செந்நிறத்தைக் கொடுக்கும்; பீஜத்திரவ்யத்திற்குள்ள சி ப்பையும் உண்டுபண்ணும். 13, 13½.

ஹேம ரக்தி.

முற்கூறிய முறைப்படியே தார ரக்தி யயும் செய்யலாம்; அது பார்ப்பதற்கும் மனோஹரமாயிருக்கும். வெள்ளியைச் சிவப்பாக்குந் தன்மையுள்ளது. பீஜத்திரய் களையும் அவ்வாறு செய்யக்கூடியதாயிருக்கும். 14.

தார ரக்தி.

(1) பஸ்மமாகச் செய்த அல்லது க ்டப்பட்ட இரஸத்தினுலாவது பஸ்மமான வேறு உலோஹத்தினுலாவது பக்குவம் செய்து ஸித்தமான மற்றொரு உலோஹமானது வெண்மையையாவது மஞ்சள் நிறத்தையாவது அடைந்தால் அவ்விரண்டும் முறையே ந்திரதளம் என்றும் அக்னிதளம் என்றும் வழ கப்படும். (2) ஏதேனும் மூலிகைத்திரவ களில் பாவனை செய்து கட்டப் பெற்ற இரஸத்துடன் வேறொரு உலோஹத்தைக் கூட்டி அல்லது அவ்விதமே பாவனை செய்து பஸ்மாதி முறையிற் பக்குவம் செய்த ஒரு உலோஹத்துடன் மற்றொரு லோஹத்தை கூட்டி அவ்விதம் கூட்டப்பெற்ற உலோஹத்திற்கு வெண்மை நிறத்தையும் மஞ்சள் நிறத்தையும் உண்டுபண்ணுவதும் சந்திரதளம் என்றும் அக்னிதளம் என்றும் கூறப்படுவதுண்டு. 15 16.

ச ந்திரதளம்
அக்னிதளம்.

(1) தாம்ரத்தை மாக்ஷிகம் கூட்டி பஸ்மரூபமாகச் செய்யவும்; பிறகு அதை உத்தாபநம் செய்யவும்; இவ்விதம் பத்துமுறை அதை பஸ்மமாக்கி உத்தாபநம் செய்து எடுக்கவேண்டும். சுத்தி செய்த நாகத்தையும் அவ்விதமே பஸ்மமாக்கி பிரித்தெடுக்கவும். இப்படி யெடுத்த ஒவ்வொரு உலோஹமும் நான்கு பலம்; இவ்விரண்டையும் கூட்டி நீலாஞ் நம் சேர்த்து பஸ்மம் செய்து முன்போல் ஏழுமுறை உத்தாபநமு ற யிற் சுத்தம் செய்யவும். இவ்விதம் செய்து முடிவில் எடுக்கப்பட்ட ஒரு வித உலோஹத்தை சுல்ப ா ம்[2] என்பார்கள். (2) சுல்ப

சுல்ப ா ம்.

---

1. பலமுறை யென்பதற்கு ஏழுதடவை யெனக் ருத்தென்று போதினீ வியாக்யா ம்.

2. சுல்பநாகம் தா ரம் ல த வீஸம் என்று பொருள்.

ர த்தி ' உபயோ ம: சுல்பநாகத்தினுல் பக்குவம் செய்தெடுத்த இரஸத்தை வாயிலிட்டு அடக்கிக்கொண்டிருந்தால் ஒரு மாஸத்தில் எவ்விதமான மேஹரோகமும் தீரும்' அத்துடன் நன்கு பத்திய முறையில் உண ுகளை யுண்டுவந்தால் ஒரு வருஷத்தில் அம்மனிதன் நரை திரைகள் நீ ' கி பார்வையும் வெகு தீக்ஷணமடைந்து தேஹபுஷ்டியையுமடைந்து பல வகையிலும் ஆரோக்கியமுள்ளவனுவான். 17 20.

பிஞ்ஜரி. இரண்டு உலோஹ 'களை ' கடுந்தீயிட்டு ஊதி பிரத்தியேகமாக உருக்கி அப்பால் இரண்டையும் ஒன்ருகச் சேர்த்து ஏதேனும் திரவத்தில் ஊற்ற அது வெண் பசுமை நிறமடைந்தால் அந்த உலோஹம் பிஞ்ஜரியென்று[1] கூறப் படும். 21

சந்திரார்க்கம். பதினுறு பங்கு வெள்ளி பன்னிரண்டு பங்கு தாம்ரம் ஆக இவ்விரண்டையும் ஒன்ருகக் காய்ச்சி யுரு 'கி யெடுக்க அக்கூட்டு லோஹம் சந்திரா 'க் ம் என்று கூறப்படுகிறது. 22.

நிர் பணம். பக்குவம் செய்யவேண்டிய அல்லது பஸமம் செய்யவேண்டிய ஒரு லோஹம் ாய்ந்து வருகையில் அதில் வங்க நாளம் என்னும் குழலின் வழியாய் மற்ருரு உலோஹத்தை ஊற்றினுல் அது நி ;வாபணம் எனக் கூறப்படும். ப 'குவம் செய்யப்படவேண்டிய வஸ்துவில் நிர்வாபணத் திரவ்யத்தைச் சம அளவா ச் சேர் 'கவேண்டும். ஆவாபம்[2] செய்யவேண்டியபோது அவ்விதம் ஆவாபம் செய்யப்படும் வஸ்து அவ்வவ்விடத்தில் கூறப்படும் அளவை யனுஸரித்து ஆவாபம் செய்யப்படவேண்டும் 23 24.

ாரிதரம். ஒரு உலோஹத்தை மாரணம் செய்தபின் அதைத் தண்ணீரில் போட்டால் அதன்மேல் அப்பஸ்மம் மிதக்கும்' அவ்வித உலோஹ பாகத்தை வாரிதரம் என்பார்கள். நன்கு பக்குவமான உலோஹபஸ்மத்தை விரல்களாலெடுத்துத் தேய்த்துப் பார்க்க அது அவ்விரல்களின் இரேகைகளுக்குள் படிந்து ஒட்டினுல் அது சிறந்த ம்ருதலோஹம் எனக் கருதப்படுகிறது 25 26.

---

1. பிஞ்ஜரி யென்ருல் பசுமை நிறமுடையது என்று பொருள்.

2. ஆவாபம்-- இதே அத்தியாயத்தில் பிறகு விவரிக்கப் படுகிறது.

3. மாரணம் பஸ்மமாக்குதல்' பஸ்மமுறையே ம ' ம என் று ' ம்ருதியென்றும் வழங்கப்படும். ாரிதரம் என்ருல் நீரில் மிதப்பது எ ' று பொருள்.

வெல்லம் குன்றுமணி வெங்காரம் தேன் நெய் இவற்றுடன் கூட்டினால் எந்த பஸ்மம் ஒன்றாக கலந்துவிடுமோ [1]

அபுநர்ப்பவம். அக்னியிலிட்டு ஊதினால் எது பஸ்மமாவதற்கு முன்னிருந்த உலோஹாதி நிலைமையைப் பெற மாட்டாதோ அப்பஸ்மத்திற்கு அந்த நிலைமை அபுநர்ப்பவம் [2] எனப்படுகின்றது. 27.

ஊடநமம். உலோஹம் எதுவும் முற்கூறிய இலக்ஷணங்களுள்ளதாய் பஸ்மமான பின்பு அதிற் சிறிதளவு தண்ணீரில் போட்டு அப்பஸ்மத்தின்மீது தான்யம் முதலிய ஏதேனும் சிறிது கனமான வஸ்துவை வைக்க அத்துடன் அப்பஸ்மம் ,ண்ணீரின்மீது ஹம்ஸம் போல மிதக்க வேண்டும்' அவ்விதம் மிதக்கும் தன்மையைப் பெற்றால் அதை ஊ மம என்பார்கள். 28.

நிருத்தம். நன்கு பஸ்மமான உலோஹத்தை வெள்ளியுடன் கூட்டி உலையிலிட்டு நன்றாக ஊதினால் அது அவ்வெள்ளியுடன் நன்றாகக் கலந்துவிடவேணும்' அப்பொழுது அந்த உலோஹம் முற்கூறியவாறு அபுநர்ப்பவமாய்விடுகிற' அந்நிலைமையை நிருத்தம் என்று வழங்குவர். 29.

பீ' அல்லது உத்தர ம். முற்கூறிய நிர்வாபணக்கிரமத்தை அனுஸரித்து சில விசேஷ முறைகளில் ஸாத்யலோஹத்துக்குப் பிரக்ஷேபலோஹாதிகளின் அந்தந்த நிறமும் மெதுத்தன்மையும், பலவகையான மாறுபட்டத் தோற்றமும் உ' டாம்' அது பீஜம் என்று கூறப்படும். இதையே வைத்தியர் **உத்தரணம** என்பார்கள். 30 $30\frac{1}{2}$.

தாடநம். ஒன்றோடொன்று கலந்துள்ள இரண்டு உலோஹங்களுள் ஒன்றை வங்கநாளத்தினால் ஊதி யெரித்து அழித்துப்போடும் முறையானது தாடநம் என்று வழங்கப்படுகின்றது. 31.

---

1. தேன் ெய் குன்றுமணி, வெ' ரம் குங்குலியம் ஆக இவ்வைந்து சரக்குகளும் உலோஹாதி ளைக் கலக்க உபயோகமானவை யென்றும் இவற்றிற்கு மித்திரபஞ் ம் எனப் பெயரெ'றும் இரஸெ'திரஸாரம். இ'கே குங்குலியத்திற்கு பதில் வெல்லம் குறிக் ப் படுகிறது.

2. அபு ர்ப்பவம் மீண்டும் சுய ரூபத் த யடைய முடியாமை யெ'பது பொருள். இதற்கும் நிருத்தம் என்பதற்கும் விசேஷ பேத மி'லை.

3. ஸாத்யலோஹம் பஸ்மாதிகளாகப் ப'குவம் செய்யவேண்டிய உலோஹம்.

4. பிரக்ஷேபலோஹம் உருக்கிய உலோஹத்தில் வே று உலோஹங் ளைச் சேர்த்தால், அவ்விதம் சேர்க்கப்படுவது பிரக்ஷேப லோஹம் எனப்படு'.

தான்யாப்ரகம். அப்ரகத்தைச் சூர்ணம் செய்து, அத்துடன் நெல்லைக் கலந்து, அவ்வனைத்தையும் வஸ்திரத்திற் கட்டி, காடியில் அலசித் தேய்க்க அவ்வஸ்திரத்தின் கண்ணறைகளிலிருந்து, காஞ்ஜிகத்திற் படியும் மிருதுவான அப்ரகப்பொடி தான்யாப்ரகம் என்று வழங்கப்படும். 32.

ஸத்துவம். ஏதேனும் தாதுப்பொருளை[1] க்ஷாரங்கள்[2] அம்லங்கள்[3] திராவகச்சரக்குகள்[4] இவற்றுடன் கூட்டி, கோஷ்டியந்திரத்திலிட்டு[5] எரிக்கப்படுகையில் அத்தாதுவிலிருந்து யாதொரு ஸாரம் வெளியாகிறதோ அது ஸத்துவம் என்று கூறப்படுகிறது. 33.

ஏககோலீஸகம். குமட்டி யென்னும் கோஷ்டத்தில் கரியைக் குவியலாக நிரம்பவும் போட்டு அதனுள் மூசையை அமிழ்த்தி அதை அக்னியிட்டு ஊதிக்கொண்டே வந்தால் அக்கரிக்குவியலானது கிரமமாக அதனுள்ளடங்கிய மூசையின் கழுத்துக்குக் கீழ்வரையில் அடங்கிக் குறையும். அவ்விதம் குறைவதற்கான செய்முறை ஏககோலீஸகம் எனப்படுகிறது. 34.

திராவணாதி வேலைகளுக்குரியவிறகுகள். (1) திராவணங்களையும் ஸத்துவபாதனங்களையும் செய்வதற்கான வேலைகளில் இலுப்பைக்கட்டைகளும் கருங்காலிக் கட்டைகளும் ஏற்றவை. (2) எளிதில் திரவமாக்கவியலாத திரவ்யங்களை எரிப்பதற்கு மூங்கிலை விறகாக உபயோகிக்கலாம். (3) ஸ்வேதநம் என்கிற ஆவியிற் பக்குவம் செய்யும் வேலைக்கு இலந்தங்கட்டையை விறகாக உபயோகிப்பது நலம். 35.

ஹிங்குளாக்ருஷ்டம். ஹிங்குளம் என்கிற லிங்கத்தை இஞ்சிச்சாற்றால் ஆட்டி அதை வித்யாதரயந்திரத்தில் வைத்து எரித்து யாதொரு பாதரஸம் இறக்கப்படுகிறதோ அது ஹிங்குளாக்ருஷ்டம் எனப்படுகிறது. 36.

கோஷாக்ருஷ்டம். காம்ஸ்யமென்கிற வெண்கலத்துடன் சிறிதளவு தாளகம் கூட்டி வங்கநாளத்தினால் பலமாக ஊதுகையில் அதிலடங்கிய வங்கம் வேறுபட்டுப் போகும். அவ்விதம் வங்கத்திலிருந்து பிரித்தெடுத்த தாம்ரம் கோஷாக்ருஷ்டம்[6] எனப்படும். 37.

1. தாதுப்பொருள் அப்ரகம் சிலாஜது, அயம் வங்கம் முதலிய..

2. க்ஷாரங்கள் யவக்ஷாரம் ஸர்ஜக்ஷாரம் முதலியவை.

3. அம்லங்கள் காஞ்ஜிகம் முதலிய அம்லவர்க்கச் சரக்குகள்.

4. திராவகம் குன்றுமணி, வெங்காரம் முதலிய திராவகவர்க்கச் சரக்குகள்.

5. கோஷ்டியந்திரம் 9ம் அத்தியாயம் பார்க்க.

6. கோஷம் வெண்கலம் அதிலிருந்து இறக்கப்பட்டது கோஷாக்ருஷ்டம் எனப்படுகிறது.

தீக்ஷ்ணலோஹம் நீலாஞ் நம் இவற்றுடன் கூடிய நாகத்தைப் பலமுறை பலமாக ஊதி யெரிக்க அது மிருதுத் தன்மையையும் கருநிறத்தையும் பெறும். பிறகு எளிதிலும் உருகும். அவ்விதமெடுத்த நாகம் வரநாகம என்று வழங்கப்படும். 38.

வரநா ம்.

மாரணம் அல்லது பஸ்மம் செய்த சரக்குக்கு மீண்டும் சுய நிலைமை யுண்டுபண்ணும் முறை உத்தாபநா என்று கூறப்படுகிறது. 38½.

உத்தாபநா.

உருகிய சரக்கை வேறு திரவவஸ்துவிற் சேர்க்கும் முறைக்கு டாளநம் எனப் பெயர். 39.

டாளநம்.

முப்பது பலம் நா த்தை எருக் ம்பால் விட்டு அரைத்துப் புடமிடவும்; இவ்விதமே அவ்வளவு நாகமும் கால்பலமாகக் குறையும் ரையில் புடமிடவே டும். அப்பால் அது ஆயிரம் புடமிட்டாலும் குறை வதில்லை. சாஸ்திர பரிசீலனம் செய்த மூத்தோர்கள் இதை நாக த்திலிருந்துண்டான சபலம் என்பார்கள். நாகசபலத்தைப் போலவே வ கசபலத்தையும் செய்து முடிக்கலாம். முற்கூறிய சபல ளைப் பரிசித்து அதே கையால் இரஸத்தைப் பரிசிக்க அந்த இர ம் வேறு எவ்வஸ்துவின் சேர்க்கையுமில்லாமலே கட்ட ப்பட்டுப்போம். ஆனால் அவ்விதம் கட்டப்பட்ட இரஸம் இரஸவாத வேலைகளில் உபயோகப்படும். இரஸாயனமாக அது உபயோ ப்படுவதில்லை. இந்த சபல முறைகள் கர்ப்பணர் என் னும் ஸித்தர் பரிசீலனை செய்து கூறியவை.[1] 40 43.

நாக சபலம்.
வங் சபலம்.

நாகப்பூச்சிகளின் மலத்தைக் கிரஹித்து, அதைத் தண்ணீர் கொண்டு நன்றாகக் கழுவி யெடுத்து அதிலிருந்து வரும் பஸ்மரூபமான ஸாராப்சத்தை யெடுத்துக் கொள்ளவும். அது துலக்கமாகக் கருநிறமாகக் காணப்படும். இதை இரஸவாதிகள் தௌதம் என்பார்கள். 44.

தௌதம்.

இரண்டு சரக்குகளைக் கூட்டி நன்றாக அரைத்து கும்மட்டியி லிட்டு ஊதும் வேலை த்வந்த்வாநம் எனப் படு கிறது. 44½.

த் ந்த் ா ம்.

---

1. " ாகத்துடன் ஆ ு மடங்கு பரியைக் கூட்டி புடமிடவும்; அ விதம் அறுபதுமுறை புடமிட்டு, அதில் ாலிலொரு பங்கு வெள் ளியைக் கூட்டி தே மு றப்படி பக்குவம் செய்ய, அது ஸ்வர்ண மாகும்" "நாகம் நிருத்திதம் ருத்வா கர்ப்பரைஷ் ஷட்குணை ஸஹ. ஷஷ்டிச் சதுர்த்தவேதேந தாரமாயாதி காஞ்சநம்" என்கிறஒரு ச்லோகம் 43-வது ச்லோகத்திற்குப் பிறகு சில புஸ்த களில் ா ப்படுகிறது.

2. "விஷ்டாம் பூ ா ஸம்பூதாம் ப்ரக்ஷாள்ய பஹுபிர் ஜலை: ஸமாஹ்ருத்ய ா : க்ருஷ் ம் தௌதா யம் ரஸவாதிபி:" என்று இதே விஷயமா வேறொரு லோகமும் கேள்விப்படுகிறோம்.

பஞ்ஜரி. உருக்கிய பொன்னில் அதுபோன்ற நிறமுள்ள வேறு சரக்கை அதிக அளவாகக் கூட்டியாவது திராவக வர்க்காதிகளைச் சேர்த்தாவது பொன்னின் மாற்றைக் குறைத்துப்போடும் வேலை இரஸவாதி ளால் பஞ்ஜரி யென்று வழங்கப்படுகிறது. 45½.

சுல்லகா. வெள்ளியாவது வேறு எந்த உலோஹமாவது அடியிற் கூறப்படும் பதங்கியென்னும் வர்ணகல்கத்தின் சேர்க்கையினுல் பொன்னுருவத்தைப் பெறுகிறது. ஆனுல் அந்த நிறம் சில நாட்கள் இருந்து அழிந்துவிடும். இந்த முறைக்கு சுல்லகா [2] எனப் பெயர். 46[1].

பத கிராகம். நன்ருக நெடுநேரம் காய்ச்சிச் சிவப்பாகச் செய்யப்பெற்ற அல்லது வெகு நேரம் ஊதியுருக்கப்பெற்ற உலோஹத்திலிருந்து சிவந்த நிறமாக வெளியாகும் பிசின் போன்ற ஒருவித வர்ணவஸ்து பத கிராகம் எனப்படுகிறது. 47 48.

ஆவாபம். உரு கிய உலோஹம் முதலிய வஸ்துவில் மற்றொரு வஸ்து ஏதேனும் போடப்பட்டால் அது ஆவாபம் என்றும் பிரதீவாபம் என்றும் ஆச்சாதநம் என்றும் வழங்கப்படும். 49.

அபிஷேகம். ஒரு உலோஹம் உருக்கப்பட்டு அது அக்கினியில் இருக்கும் போதே எட்டு விநாடிகள் பொறுத்திருந்து அதன் மீது தண்ணீரை வார்க்கும் முறை அபிஷேகம் என்று கூறப்படும். 50.

நிர்வாபம். நன்ருகக் காய்ந்த உலோஹம் முதலியதைத் தண்ணீரில் தோய்க்கும் முறை நிர்வாபம் என்றும் ஸ்நபநம் என்றும் கூறப்படுகிறது. 50½.

ஆவாபாதிக ஞானவிதி. உலோஹமானது உருகி நன்ருகச் சுத்தமான நிலைமயில் இருக்கும்போது தான் பிரதீவாபம் முதலியவை ச் [5] செய்ய வேண்டும். 51.

சுத்தாவர்த்தம். ஔஷத மூஷை முதலியது அடங்கிய அக்கினியானது எப்பொழுது வெண்மையான ஜ்வாலையோடு நன்கு கொழுந்துவிட்டெரிகின்றதோ அது தான் உலோஹாதிகளிலிருந்து ஸத்துவம் வெளிவரும் தருணமாகும். ஸத்துவம்

---

. பஞ்ஜரி அழிப்பது அல்லது குணத்தை குறைப்பது என்று பொரு .

2. சு லகா கில்டு என்று தற் ாலம் வழ கப்படுவது.

3. பதங்கிராகம் நிறமுண்டுபெ ணும் பத ம் எனப் பொருள்.

4. ஆவாபம் பிரதீவாப சேர்ப்பது என்று பொருள். அதாது ஒன்றன் மீது வேறெதையேனு தூவுவது அல்லது போடுவது.

5. பிரதீ ாபம் முதலியவை என்பதால் ஆவ பம் அபிஷே ம் நிர்வாபம் ஆகியவை குறிக்கப்படுகின்றன.

வெளியாகும்போது அக்கினி அவ்விதம் எரியும் நிலைமை சுத்தாவர்த்தம் [1] எனப்படும். 52.

பீஜாவர்த்தம். உலோஹாதிகளைத் திரவமாகச் செய்ய அக்கினியை ஊதி வருகையில், உருக்கப்படும் வஸ்துவுக்குச் சமான நிறமுள்ளதாய் ஜ்வாலை தோன்றுமாயின் அது அவ் வஸ்து திரவமாகும் நிலைமையைக் காட்டுகிறது. அந்நிலைமை பீஜா வர்த்தம் [2] எனக் கூறப்படும். 53.

ஸ்வாங்கசீதம். பக்குவம்செய்யப்பட்ட சரக்கு அக்கினியுள்ள அடுப்பு முதலியதின்மீது இருந்தவாறே அவ்வக்கினி சிறுகச் சிறுகக் குறைந்து அவிந்தபிறகு ஆறிப்போமாகில் அது ஸ்வாங்கசீதம் [3] எனப் படுகிறது. 53½.

பஹிச்சீதம். அக்கினியுள்ள அடுப்பு முதலியதிலிருந்து வெளியிலெடுத்து ஆறிய ஔஷதாதிகள் பஹிச்சீதம் [4] என்று கூறப்படும். 54.

ஸ்வேதநம். க்ஷாரங்கள் அம்லங்கள் இவற்றாலாவது சுத்தி செய்வதற்கான வேறு ஔஷதச்சரக்குகளாலாவது டோலா யந்திரத்திலுள்ள சரக்கைச் சமைப்பது அல்லது பக்குவம் செய்வது ஸ்வேதநம் [5] எனப் படும். இம்முறையால் ஸ்வேதநம் செய்யப்படும் சரக்குகளிலுள்ள தோஷங்கள் நீக்கப் படும். 55.

மர்த்தநம். உலோஹாதிகளை ஆங்காங்கு கூறியுள்ள ஔஷதங்களாலும் எல்லாவிதமான அம்லங்களாலும் காஞ்ஜிகமென்னும் காடியாலும் அரைப்பதற்கு மர்த்தநம் எனப் பெயர். இவ்வித மர்த்தநமானது உலோஹாதிகளிலுள்ள வெளியழுக்குகளைப் போக்கும். 56.

மூர்ச்சனம். மர்த்தநத்திற்காகச் சாஸ்திரத்திற் குறித்துள்ள ஔஷதச் சரக்குகளைக் கொண்டு பாதரஸத்தை அரைப்பதால் அதற்குள்ள ஓடுந்தன்மை நீங்கி அது பிசைந்த மாவைப்போல் கட்டப்பட்டால் அது மூர்ச்சநம் எனப் படும். இதனால் இரஸத்திலுள்ள வங்க நாகாதி ஸம்பந்தமான கலப்புத் தோஷங்கள் நீங்கும். 57.

---

1. சுத்தாவர்த்தம் துலக்கமான ஜ்வாலை எ ப் பொருள்.
2. பீஜாவர்த்தம் பீஜம் என்றால் திராவ மாக்கு தற் ான சரக்கு; அதற்குச் சமான நிறமுள்ள ஜ் ாலை பீஜாவர்த்தம் எனக் ரு தப்படுகிறது.
3. ஸ் ாங்கசீதம் தனக்குத் தானே ஆறு து.
4. பஹிச்சீதம் வெளியிலெடுத்த பின்பு ஆறுவது.
5. ஸ்வேதநம் ஆவியைக்கொண்டு பக்குவம் செய்வது.
6. க்ஷாயம் முதலிய திரவௌஷதங்கள் இதனால் குறிக் ப்படு கின்றன.

உத்தாபநம். முற்கூறிய மர்த்தநாதிமுறைகளால் உருவத்தில் மாறுத லடைந்த சரக்கை ஸ்வேதநம் வெயிலில் வைப்பது முதலிய உபாயங்களைக்கொண்டு மீண்டும் சுயத் தன்மைக்குக் கொண்டுவரும் முறைக்கு உத்தாபநம் என்று பெயர். இது மூர்ச்சநத்தினல் ஏற்படக்கூடிய உருமாறுபாடு முத லியதைப் போக்கும். 58.

ஷ்டபிஷ்டி. மர்த்தநம் முதலியதால் இரஸத்தைப் பிஷ்டமாகச்[1] செய்வ தால் அது இயற்கையான ஓடுந்தன்மையை பிழந்து ட்டப்பட்டுப் போகிறது. அவ்விதம் ஓடிப் பெரு கும் சக்தியைத் தடுத்து இரஸத்தைக் கட்டும் முறையை அறிஞர் நஷ்டபிஷ்டி என்பார்கள். 59.

பாத ம். இரஸத்தை ஆ காங்கு கூறப்படும் ஔஷதங்களால்[2] அரை த்து யந்திரத்திலிட்டு ஆவியாகச் செய்து அடியி லிருந்து மேற்புறமாகவாவது மேலிருந்து கீழ்ப்புற மாகவாவது பக்கவாட்டமாகவாவது இறக்கும் முறை பாதநம் எனப்படுகிறது. இம்முறையினல் இரஸத்திற்கு வங்கம்-நாகம் இவ ற்றின் ஸம்பந்தமான கஞ்சுகமென்னும் தோஷம் ஒழியும். 60.

ரோதநம். மர்த்தநாதிகளால் கட்ட ப்பட்ட இரஸத்தை அதற்கு இரஸாய நாதி குணங்களை ஆப்யாயநம் செய்வதற்காக[4] இந் துப்பு கலந்த தண்ணீரடங்கிய குடத்தில் மூன்று நாள் வைத்திருப்பதுண்டு. இம்முறைக்கு ரோதநம்' என்று பெயர். 61.

நியம ம். முற்கூறிய ரோதநத்தினல் இரஸம் வீர்யத்தை விசேஷமாகப் பெற்று மீண்டும் அதற்கியல்பான சபலத்தன் மையையும்[5] அடையும். வீர்யத்தை ஸ்திரப்படுத்தி சபலத்தன்மையை மாத்திரம் நிவ்ருத்தி செய்வதற்காக அதை ஸ்வே தநம் செய்வதுண்டு[6]. அம்முறை நியமநம் எனக்[7] கருதப்படும். 62.

1. பிஷ்டம் ம்ருது ான பிசைந்த மாப்பண்டம் போன்ற ரூபம்.

2. ஸ்வரஸம், கஷாயங் ள் முதலிய த்ரவ் என்று பொருள்.

3. மேலே ஆவியாகப் போகச் செய்வது ஊர்த் ப தநம என்றும், மேலிரு து கீழ்முகமாக ஆவி ரூபமாயிறக்குவது த ப தநம என்றும் குறுக்கா க் குழாய் முதலியதால் இறக்குவது தி ய ப நம என்றும் வழங்கப்படும்.

4. ஆப்யாயநம் இயற்கை க் குணங்களைச் செழிக்கச் செய் வது. வீர்யத்தை அதி ப் படுத்தல்.

5. சபலத்தன் ம நிலைத்து நிற்காமல் அசைந்தோடுந்தன் ம.

6. வேதநம் யந்திராத்யாயத்திற்கூறியபடி யந்திரத்திலிட்டு ஆவியினல் பக்கு ம் செய்தல்.

7. நியமநம் நிலையில்லாத் தன்மையைப் போ கி கட்டுதல். [ஸர்ப்பாக்ஷி குன்றுமணி கற்று ழ ரிசிலாங்க ணி, ஊமத் த இவற்றின் சாற்றி இரஸத்தை ஒரு ாள் முடியவும் ஸ்வேதநம் செய்ய அது சபலத்தன்மையை விட்டு ட்டப்பட்டுப் போம். அது நியம ாம். இரஸேந்திர சிந்தாமணி.]

தீபநம். இரஸத்தை தாதுக்கள் பாஷாணம் மூலிகை முதலியவற்று டன் கூட்டி அச்சரக்குகளின் வீர்யத்தை இரஸம் கிராஸம் செய்வதன் பொருட்டு[1] ஒரு பாத்திரத்தில் டோலா யந்திரத்தில் வைத்து ஸ்வேதநம் செய்யவேண்டும். இவ்விதம் செய்யு முறையை தீபநம் என்பார்கள். 63.

கிராஸ மாநம். இவ்வளவு நிறையுள்ள இரஸம் இவ்வளவு நிறை திரவ்யத்தை கிரஹிக்குமென்று பரிமாணங்களைக்கொண்டு நிர்ணயிப்பதற்கு கிராஸமாநம் என்று[2] பெயர். 64.

ஜாரணாத்ரயம். கிராஸத்திற்கு சாரணம் கர்ப்பத்திராவணம் ஜாரணம் என்று மூன்றுவிதமான ஜாரணா முறைகள் சாஸ்திரஞ்ஞரால் கூறப்பட்டிருக்கின்றன இம்மூன்றும் முறையே கிர ஸம் பிண்டம பரிணமம் என்று கூறப்படும். 65 65½.

ஜாரணாத்வயம். மீண்டும் ஸமுக ஜாரணா என்றும் நிர்மு ஜாரணா என்றும் ஜாரணை இருவகைப் படும். (1) அநந்த ஜாரணாமுறைக்குக் கூறப்படும் அளவை அநுஸரித்து இரஸத்தில் பீஜத்திரவ்யத்தைச் சேர்ப்பது நிர்முகஜாரணா எனப்படும்[4]. சுத்தமான ஸ்வர்ணமும் சுத்தமான வெள்ளியும் பீஜம் எனப்படும். (2) இரஸத்தில் அதற்கு அறுபத்திநாலிலொரு பா கு பீஜத் தக் கூட்டும் முறை மு ம் எனக் கூறப்படும். இவ்விதம் செய்வதால் இரஸமானது கிராஸத்தில் அதிக நாட்டமுள்ளதாகும். அதனால் அது மு முள்ள இரஸம் எ பதாய் ஆகும். கடினமான உலோஹங்களையும் தனக்குள் சேர்த்துக் ொள்ளும் ச தி இதனால் இரஸத்திற்குண்டாகும். இதைத்தான் மிருகசாரி யென்னும் ஸித்தர் ஸமு ஜாரணா[5] எனக் கூறுகிறார். 66 69.

---

1 கிராஸம் செய்தல் மற்றத் திரவியங்களிலுள்ள ஸாரம்சங்களை அல்லது வீர்ய களை இழுத்து கொள்ளுதல். [கிராஸமுறைக்கும் இரஸே திரசிந்தாமணி முதலியதில் சிலஅவசியமான சரக்குகளும், முறையும் கூறப்பட்டிருக்கின்றன. "அன் பேதி, பஞ்சலவணங் ள் ெ கடுகு மிளகு,முருங்க வி த வெங்காரம் ஆகியவற்றைக் கூட்டி அ ரத்து ாஞ்ஜி மென்னும் ாடியுள்ள பாத்திரத்தில் டோலாய திரத்தில் மூன்று ாள் எரித்துப் பக்கு ம் செய்ய அக்கூட்டுச் சரக்கு ஜாரணா வேலைகளில் உதவும்."]

2, இ ளவு நி றயுள்ள இரஸம் இ வளவு நி ற ஸ்வர் த் த அல்லது வேற த து :வத் தன்னுடன் சேர்த்துக்ெ ா ளும் ன்பதற் ான அளவு 'கிராஸமா ம்' எ ப்படுகிறது.

3. சார ம், கர்ப்பத் திராவ ம், ஜாரணம் என்னும் இவற்றைப்பற்றி அடுத்தாற்போல் வி ரணம் காணலாம்.

4. நிர்மு ஜாரணா மு ற்ற ஜாரணா முறை.

. ஸமு ஜாரணா மு த்துடன் கூடிய ஜாரணா மு ற.

இராக்ஷஸமுக ரஸம். இரஸத் த திவ்ய ஓஷதிகளுடன்[1] கூட்டி பெரிய கோஷ்டீ யந்திரத்திலிட்டு வைக்க உலோஹம் முதலிய ஸகலத்தையும் அது கிரஸிக்கும்; இது இராக்ஷஸ முகயந்திரம் எனப்படும். 70.

சாரணை. இரஸத்திற்குள்ளே கிராஸம் செய்யவேண்டிய சரக்கைப் போட்டு மறையச் செய்வது சாரணை எனப் படும். 70½.

கர்ப்பத்ருதி. அவ்விதம் இரஸத்திஞல் கிரஸிக்கப்பெற்ற சரக்கை இரஸத்தி னுள்ளே உருக்கி லயிக்கச் செய்யும்[2] முறை கர்ப்பத்ருதி என்று வழங்கப்படும். 71.

பாஹ்ய த்ருதி. அப்ரகஸத்துவம் முதலியதை[3] வெளியிலேயே[4] உருகச் செய்து இரஸத்தின் ஜாரணத்திற்காக உபயோகிக்கும் முறை பாஹ்ய த்ருதியாகும். 72

த்ருதிலக்ஷணம். (1) பாத்திரம் முதலியதில் ஒட்டிக்கொள்ளாமை உருகி திரவ மாயிருத்தல் இயற்கையினும் அதி பளபளப்புடன் கூடியிருத்தல் அதிக இலகுத்தன்ம இரஸத்து டன் ஒன்று சேராமை ஆகிய ஐந்தும் த்ருதியின் இலக்ஷணங் ளாம். (2) ஸ்வர்ணம் முதலிய உலோஹங்களும் இதர தாதுக் களும் அவசியமான ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து அக்னியி லிட்டு ஊதப்பட்டு நீர்க்கும்; அவ்விதம் திரவமாக நிலைத்திருக்கும் நிலைமை த்ருதி எனப்படுகிறது. 73 74.

ஜாரணை. பிடம்[5] யந்திரம்[6] முதலியவற்றின் பிரயோகத்திஞல் இரஸ மானது உருகி திரவமாயுள்ள கிராஸவஸ்து வா வே மாறுதலடைந்தால் அம்முறை ஜாரணை

---

1. ஜீவநீயகணத்தைச் சேர்ந்த ஓஷதிகள். திவ்ய ஓஷதி யென்பதற்கு மனச்சிலையென்றும் பொருளுண்டு; ஆகவே மனச்சிலையோடு கூட்டி யென்றும் பொருள் கூறலாம். ஹேமௌஷதி யென்றால் ஸ்வர்ண மாக்ஷிகத்திற்கும் பெயர்.

2. லயிக்கச்செய்தல் ஸூக்ஷ்மமான அம்சங்களாகப் பிரித்து மறையச்செய்தல்.

3. ஸ்வர்ண ஸத்துவம் வெள்ளி ஸத்துவம் முதலானவையும் 'முதலியது' என்பதால் குறிக்கப்படுகின்றன.

4. கர்ப்பத்ருதிக்குச் செய்வதுபோல இரஸத்தினுள்ளேயே உருகச் செய்யாமல் அடுப்பு முதலியதில் வைத்து முதலில் உருக்கி அப்பால் இரஸாதிகளில் சேர்க்கவேண்டும் என்பது வெளியில் என்பதற் குப் பொருள்.

5. பிடம் அடுத்து வரும் விவரத்தைப் பார்க்க.

6. யந்திரம் 9ம் அத்தியாயத்திற் கூறப்படும் கோஷ்டீயந் திரம் முதலியது.

எனப்படுறது. இதில் பல வேறு வகையான முறைகளுண்டு. 75.

பிடம். க்ஷாரங்களாலும்[2] அம்லங்களாலும்[3] கந்தகம் முதலானவற்றாலும்[4] மூத்திரங்களாலும்[5] இலவணங்களாலும் இரஸத்திற்குக் கிராஸமாக வேண்டிய சரக்கை ஜீர்ணம் செய்வதற்காகச் செய்யப்படும் முறைக்கு பிடம்' எனப் பெயர். 76.

இரஞ்ஜநம் நன்றாகப் பக்குவம் செய்து ஸித்தமான பீஜாதாதுக்கள் முதலியவற்றை ஜாரணம் செய்வித்து இரஸத்திற்குப் பசுமை நிறம் முதலான நிறமாறுபாட்டையுண்டுபண்ணும் முறை இரஞ்ஜநம் என்று வழங்கப்படும். 77.

ஸாரணை. இரஸமானது தைலம் நிரம்பிய யந்திரத்தில்[9] இருக்கும்போது லோஹத்திற்கு விசேஷ வேதையை விருத்தி செய்வதற்காக அதிற் பொன் முதலியதைச் சேர்க்கும் முறையானது ஸாரணை என்று மொழியப்படுகின்றது 78.

---

1 "கெட்டியான பொன்முதலியவற்றை கிராஸம் செய்வித்து, பந்தமான இரஸத்திற்கு மீண்டும் இயற்கைத் தன்மையை யுண்டுபண்ணும் முறை ஜாரணை' எனப்படும். ஆனால் இம்முறை பாதஜாரணம் என்பவற்றைச் சேர்ந்ததல்ல" என்று இரஸேந்திர சிந்தாமணி.

2. க்ஷாரங்கள் அபாமார்க்க க்ஷாரம், யவக்ஷாரம் முதலியன.

3. அம்லங்கள் எலுமிச்சம்பழத்தின் அம்லம், காடி முதலியன.

4. கந்தகம், தாளகம், மனச்சிலை முதலியன.

5. மூத்திரங்கள் பசு ஆடு முதலியவற்றின் மூத்திரங்கள்.

6. இலவணங்கள் இந்துப்பு, அட்டுப்பு, கடலுப்பு முதலியன.

7. 'முத்துசிப்பி, சங்கு, கோழிமுட்டையோடு இவற்றைச் சூர்ணம் செய்து கஜபுடத்தில் பக்குவம் செய்யவும். பிறகு நன்றாக அதைப் பொடித்து வஸாரமும், கந்தகமும் கூட்டி மல்லயந்திரத்தில் வைத்து புடமிடவும், இவ்விதம் எழு முறை செய்து எடுத்து, இதை உலோஹங்களைத் திரவமாக்குவதற்கு உபயோகிக்கலாம் ; இது சிறந்த 'பிடம்' என்னும் முறையாகும். இரஸ வேலைகளில் மிகவும் உபயோமானது." இரஸேந்திரசிந்தாமணி. [ லலயந்திரம் இரண்டு மடக்குகளை ஒன்றன் மேலொன்றாக சேர்த்து செய்யப்படும் புடயந்திரம்.] "ஸர்ஜக்ஷாரம், இந்துப்பு, அன்னபேதி படிக்காரம் இவற்றை அம்லவர்க்கங்களாலும் பசுமூத்திரத்திலும் ஆட்டி, புடமிடவும்; இவ்விதம் எழு புடமிட்டு எடுக்கப்படுவது அப்ர ஜாரணத்திற்கு உபயோகமான பிடம்.' இரஸ ஸாரம்.

8. பீஜதாதுக்கள் -பொன், வெள்ளி முதலியவை.

9. தைலம் நிரம்பிய அந்த மூஷை யென்னும் கருவியில் என்று பொருள். [பவின் முலைபோன்று நீண்டிருக்கும் குழல் அந்த மூஷை].

வேதமுறைகள்.

பொன்முதலியதாக மாற்றப்படவேண்டிய உலோஹத்திரவ்யத்தில் வியவாயிகுணமுள்ள [1] ஔஷதச்சரக்குக் கூட்டிய இரஸத்தை யிடும் முறையை வேதம் என்று அவ்விஷயமறிந்தவர் கூறுவர். அவ்வேதமுறையும் அநேக விதமாம்: அவை லேபம் க்ஷேபம். குந்தம் தூமம் சப்தம் என்பனவாம். (1) வேதந குணம் ஏற்றப்பட்ட இரஸத்தை உலோஹத்தின்மேல் பூச, அதனாலேயே அந்த உலோஹம் பொன்னாகவோ வெள்ளியாகவோ மாற்றப்படும்; ஆனால் இவ்விதம் பூசிய பின்பு ஒருமுறை அவ்வுலோஹத்தை வராஹபுடத்தில் [2] எரித்தெடுக்கவேண்டும். இது லேபநம் எனப்படும். (2) பொன் முதலியதாக மாற்றப்படவேண்டிய உலோஹத்தை உருக்கி அதில் முற்கூறிய விதமான இரஸத்தைப் பிரக்ஷேபம் செய்தால் அது க்ஷேபவேதம் எனப்படும். (3) மூர்த்திபத்தமாயுள்ள இரஸத்தைக் குறட்டினால் எடுத்து உருகியுள்ள உலோஹத்தினுள் அதைப்பொன் முதலியதாக மாற்றுவதற்காகச் சேர்க்கும் முறையானது குந்தவேதம் என்று வழங்கப்படுகிறது. (4) அக்னியிலிடப்பெற்ற இரஸமானது புகையுருவமாகக் கிளம்பும்போது அதனால் அக்னியும் புகையும் அப்புகையில் உலோஹத்தை யிட்டு பொன் முதலியதாகச் செய்யப்படும் முறை தூமவேதம் எனப் படுகிறது. (5) வேதநத்திற் கேற்றவாறு பக்குவம் செய்த இரஸ குளிகையை ஒருவன் வாயில் வைத்துக்கொண்டு ஒரு சிறு உலோஹத்துண்டின்மேல் துப்புவதால் அல்லது ஊதுவதால் அவ்வுலோஹத்தைப் பொன்னாகவோ வெள்ளியாகவோ மாற்றும் முறை சப்தவேதம் என்று கூறப்படுகிறது. 84.

உத்காடநம்.

இரஸத்தைச் சேர்த்துப் பக்குவம் செய்து முடிக்கப் பெற்ற உலோஹம் முதலிய சரக்கிலுள்ள அழுக்கு முதலியதைப் போக்கவும் அதன் நிறத்துக்கு அதிக பிரகாசமளிக்கவும் தகுந்த யாதொரு முறையுண்டோ அது உத்காடநம் [3] எனப் படுகிறது. 85.

---

1. வியவாயி உட்கொண்ட எச்சரக்கின் வீர்யம் அல்லது குணம் உடலெங்கும் முதலில் பரவி, பிறகு குடலில் பக்குவமடைகிறதோ அச்சரக்கு 'வியவாயி' எனப்படுகிறது.

2. மூலத்தில் 'ஸௌகரபுடம்' என்றிருக்கிறது. அதற்கு வராஹபுடம் என்பது பொருள். ஆனால் வேறொரு புஸ்தகத்தில் 'ஸௌரம்' என்று பாடம் காணப்படுகிறது. அதன்படி ஸௌர்யபுடம் என்று பொருள் கூறவேண்டும்.

3. உத்தாபநம் என்றும் இது கூறப்படும். ['முறைப்படி பக்குவம் செய்து முடித்த சரக்கைக் கொண்டு இரஸத்தின் தோஷங்களைப் போக்கவும் அதற்குச் சிறந்த நிறத்தை விருத்தி செய்யவும் பிரயோகிக்கப்படும் முறையை உத்காடநம் என்பார்கள்' என்றும் வேறொரு பாடமுண்டு.]

ஸ்வேதநம். இரஸம் முதலிய சரக்குகளை ஒரு மட்பாத்திரத்தில் சேர்த்து உஷ்ண வீர்யமுள்ள க்ஷாரங்களையும் அம்லங்களையும் அதிற்கூட்டி அப்பாண்டத்தின் வாயைச் சீலை மண் செய்து வெகு நன்றாக மூடி பூமிக்குள் புதைத்து வைக்கும் முறை ஸ்வேதநம் என்று[1] வழங்கப்படுகிறது. 86.

ஸந்நியாஸம். ஒரு பாத்திரத்தில் இரஸத்தைச் சேர்த்து அதில் ஏதேனும் குறிப்பிட்ட முறையிற் கூறிய மூலிகைகளைக் கூட்டி ஸ்வேதநத்திற்கு கூறியபடி பாத்திரத்தின் வாயை நன்றாக மூடி மிருதுவாகத் தீயிட்ட அடுப்புக்குள் அப்பாத்திரத்தை வைப்பதற்கான முறை ஸந்நியாஸம் எனப்படுகிறது. 87.

ஸ்வேத - ஸந்நியாஸங்களின் பயன். ஸ்வேதநம் ஸந்நியாஸம் என்கிற இவ்விரண்டு முறைகளும் இரஸத்தின் குணங்களையும் பிரபாவத்தையும் உண்மையில் அதிகப்படுத்துகின்றன. அதன் குணங்களைச் சீக்கிரம் தேஹத்தில் பரவச்செய்யக் கூடிய சக்தியையும் இரஸத்திற்கு இவை உண்டு பண்ணுகின்றன.[2] 88.

இரஸ பரிபாஷை - முடிவுரை. ஸோமதேவன் என்னும் ஸித்தர் இரஸசாஸ்திரமாகிற மஹா ஸமுத்திரத்திலிருந்து வஸ்துக்கள் விஷயமான சிறந்த அறிவாகும் ஒளியை யளிப்பவையான இப்பரிபாஷைகளாகிற இரத்தினங்களைத் திரட்டியெடுத்து வெகுப் பிரயாஸத்துடன் இந்த நாமாவளியாகிற மாலையைத் தொடுத்தார். இதை ஒவ்வொரு வைத்திய சிரேஷ்டரும் அறிவாளிகளின் ஸபையிற் பெருமை பெறுவதற்குக் கண்டபூஷணமாகச் செய்துகொள்ளக்கடவர்.[3] இரஸவாதம் செய்பவரும், இரஸத்தைக் கொண்டு பல வேறு முறைகளைப் பக்குவம் செய்பவரும் இவ்வத்தியாயத்தை நன்கு உருப்போட்டு வரப்படுத்திக் கொண்டால் எவ்வித இரஸவேலையிலும் கலக்கமுறமாட்டார். 89 90.

---

1. மட்பாண்டத்தினுள் ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து மூடி பூமியினுள் புதைத்து வைப்பதால் உள்ளே தகதப்பா ஆவிமயற்பட்டு அவ்வௌஷதம் ஒரு ஆறு பக்குவமாகும். அக்னியில்லாமல் செய்யப்படும் இப்பக்குவத் த அந ஸ்வேதநம என்பார்கள்.

2. சீக்கிரத்தில் தேஹத்திற் பாவுமெ பதிலிருந்து இப்பக்கு முறைகளால் இரஸம் விய ஃபி என்னும் விசேஷகு த்தைப் பெறுகின்றது என்பது பொருள்.

3. டபூஷ மாச் செய்துகொள்வதென்றால் இவ்வத்தியாயத்திற் கூறியுள்ள பரிபாஷைகளை கண்டபாடமாச் செய்து கொள்ளல் வேண்டுமென்றும் கருத்து.

## ஒன்பதாம் அத்தியாயம்.
### இயந்திரங்கள்.

இயந்திரங்களின் மூவுரை.

(1) இனி இரஸசாஸ்திரங்கள் அனைத்தையும் ஆராய்ந்து இயந்திரங்களைப்பற்றி ஸோமதேவனால்[1] இங்ஙனம் சுருக்கமாக விஷயங்கள் மொழியப்படுகின்றன. அவை ஸ்வேதநம் முதலிய[2] முறைகளைச் செய்ய உபயோகமானவை. (2) வார்த்திகாசிரியர்கள்[3] பெருமுயற்சியுடன் இரஸத்தைக் கட்டுவதற்கு இவற்றையுபயோகித்ததால் இவை இயந்திரங்கள் எனப்படுகின்றன. 1 2.

டோலா யந்திரம்.[4]

ஒரு பாண்டத்தில் பாதியளவுக்கு அவசியமான திரவத் திரவ்யத்தை வைக்கவும். அப்பாத்திரத்தின் கழுத்துக்கு மேற்புறத்தில் நேருக்கு நேராக இரு புறங்களிலும் சிறு துவாரங்களிடவும். அத்துவாரங்களில் ஒரு மெல்லிய கழியை வைத்து அதில் இரஸம் அடங்கிய பொட்டளத்தைத் தொங்கவிடவும். அப்பால் அத்திரவத்தைக் காய்ச்சி அதிலிருந்து எழும் ஆவியினால் இரஸம் பக்குவம் செய்யப்படும். இந்த முறை டோலா யந்திரம் எனப்படும். 3 4.

ஸ்வேதநீ யந்திரம்.[5]

ஒரு பாத்திரத்தில் ஜலத்தை வைத்து அதன் வாயை ஒரு வஸ்திரத்தினால் கட்டவும். அவ்வஸ்திரத்தின்மேல் பக்குவம் செய்யவேண்டிய வஸ்துவை வைத்து மேலே ஏதேனும் பாத்திரத்தைக் கவிழ்த்து மூடவும். பிறகு கீழே தீயிட்டு எரிக்க அந்த நீரிலிருந்தெழும் ஆவி

1. [illegible] ஸோமதேவன் என்கிற ஸித்தர் இயற்றிய இரஸக்கிரந்தத்திலிருந்து இவ்வத்தியாயம் வந்ததனால் எடுக்கப்பட்டதென்பது இதனால் விளங்கும். இரஸேந்திர சிந்தாமணி' என்னும் பிரதானக் கிரந்தம் ஒன்று ஸோமதேவனால் இயற்றப்பட்டிருக்கிறது.

2. ஸ்வேதநம் மர்த்தநம் மூர்ச்சநம் முதலியவை இதனால் குறிக்கப்படுகின்றன.

3. சாஸ்திரகிரந்தங்களில் அவசியமான வேறுவிஷயங்களையோ விஷயங்களை விளங்கச்செய்தோ, முறைப்பட்டவைகளைச்சரிப்படுத்தியோ வரையப்பட்ட சாஸ்திர வாக்கியங்கள் வார்த்திகங்கள் எனப்படும்.

4. 'அவசியமான ஔஷதங்களோடு இரஸத்தைக் கூட்டி அதை பூர்ஜபத்திரத்தில் சுற்றி அதன்மேல் மூன்று மடிப்புள்ள வஸ்திரத்தைச் சுற்றி, நன்றாய் பொட்டளமாகக் கட்டி, ஒரு பாத்திரத்தில் மெல்லிய கயிற்றால் கட்டித்தொங்கவிடவும்; அப்பாத்திரத்தில் அதற்கு அவசியமான திரவத்திரவ்யம் நிரப்பப்பட்டிருக்கவேண்டும். அதன் கீழே முறைப்படி தீயிட்டு எரிக்கவும். இது டோலா யந்திரம் என்றும் ஸ்வேதநயந்திரம் என்றும் வழங்கப்படும்.' இரஸேந்திர சூடாமணி.

5. இரஸேந்திர சூடாமணி முதலியதில் டோலா யந்திரமே ஸ்வேத யந்திரமெனக் கூறப்படுகிறது.

யினால் அவ்வஸ்து பக்குவமாகும். இது ஸ்வேதநீ யந்திரம் எனக் கூறப்படும். 5.

அதஃபாதந யந்திரம்.[1] எட்டுஅங்குலம் உட்புறச் சுற்றளவும் பத்துஅங்குலம் ஆழமும் நான்கு அங்குலம் பருமனும் உள்ளதாய் நீருக்கு ஆதாரமான பாத்திரம் ஒன்று செய்துகொள்ளவும். பதினாறு அங்குலம் விஸ்தீர்ணமுள்ள அடிப் பாகத்துடன் கூடியதாய் மற்றொரு பாத்திரம் மேலே மூடுவதற்கு அமைக்கப்படவேண்டும். கீழுள்ள பாத்திரத்தின் முகம் அதன் கழுத்துவரையில் மேல் பாண்டத்திற்குள் நுழையும்படி யமைத்து எருமைப்பால் சுண்ணாம்பு மண்டூரம் பாணிதம்[2] இவற்றைக் கூட்டி அச்சாந்தினால் இரண்டு பாத்திரங்களின் வாய்க்கூட்டைச் சுற்றிலும் நன்றாகப் பூசி யுலர்த்தவும். இவற்றுள் அடியிலுள்ள பாத்திரத்தில் ஜலம் வைத்து மேல் பாத்திரத்தினுள் இரஸம் இறக்குவதற்கான சரக்கைப் பூசவும். இவ்விதம் செய்து ஜலம் அடங்கிய பாத்திரத்தை அடுப்பில் வைத்து எரிக்க மேல் பாத்திரத்திற் பூசியுள்ள சரக்கிலிருந்து தண்ணீர்ப் பாத்திரத்தில் இரஸம் கிரமமாக இறங்கும். இது அதஃபாதநயந்திர முறையாம். 6—9.

---

1. ஊர்த்வபாதநயந்திரம்: "ஆறு அங்குலம் உயரமும், வாய்ப்புறத்தில் ஏழு அங்குலம் குறுக்களவும் முப்பது அங்குலம் சுற்றளவுமுள்ளதாய் ஒரு மட்பாண்டம் அமைக்கவும். இதே அளவாக மற்றொரு பாண்டமும் செய்யவேண்டும். யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம் காயம், பஞ்சலவணங்கள் இவற்றை இரஸத்துடன் சேர்த்து, அம்லவர்க்கத்தினால் ஆட்டி, அடியிலுள்ள பாத்திரத்தினுள் பூசவும்; மற்றொரு பாத்திரத்தை இப்பாத்திரத்தின்மேல் விழ்த்து மூடவும்; இரண்டின் கூட்டுவாயைச் சாம்பலும் உப்பும் கலந்து நன்றாகப் பூசிடவும்; பிறகு அடுப்பில் ஏற்றி எரிக்கவும். மேலேயுள்ள பாத்திரத்தின்மேல் நான்கு யாமகாலம் குளிர்ந்த ஜலத்தில் நனைத்த வஸ்திரத்தை மடித்துப் போட்டு அதை அடிக்கடியும் குளிர்ந்த ஜலம் தெளித்து ஈரமாக்கிக்கொண்டே இருக்கவும். பிறகு தீயை நிறுத்தி, பாத்திரம் தானே ஆறிய பிறகு மேல் பாத்திரத்தில் படிந்துள்ள இரஸத்தை யெடுத்துக் கொள்ளவும். இது 'ஊர்த்வபாதநயந்திரமுறை' யென வழங்கப்படும்.'' **அதஃபாதநயந்திரம்:** "முற்கூறிய வகையிலேயே இரண்டு பாத்திரங்களைச் செய்து, மேல் பாத்திரத்தினுள் சரக்கைப் பூசி அடிப்பாத்திரத்தின் மேல் கவிழ்த்து மூடி சேறு அடங்கிய பள்ளத்தில் அடிப் பாத்திரத்தைப் புதைக்கவும். மேல் பாத்திரத்தின் மேல் அக்னியிட்டு மூன்று யாமகாலம் எரிக்க, மேல் பாத்திரத்திற் பூசியுள்ள சரக்கிலிருந்து இரஸம் அடிப்பாத்திரத்தில் இறங்கும். இது 'அதஃபாதயந்திர முறை' யென்று வழங்கப்படும்'' இரஸப்ரகாச ஸுதாகரம்.

2. **பாணிதம்** இளம்பதமாகக் காய்ச்சிய வெல்லம். பாகு போன்று இளகிய வெல்லம்.

பிறகு கூறப்போகிற கச்சபயந்திரத்தினுள் மண்ணாலாகிய பீடம் போன்ற கப்பரையில் சிறு விளக்கொன்று ஏற்றி அவ்விளக்கின் அருகில் கப்பரையில் இரஸச் சரக்கை வைக்கவும்' அச்சரக்குச் சூடுண்டு அதிலிருந்து இரஸம் கச்சபயந்திரத்தினுள் இறங்கும். இவ்வித முறை தீபிகாயந்திரம் எனக் கூறப்படும். 10.

தீபிகாய'திரம்.

ஒரு பாத்திரத்தின் கழுத்துக்கு அடியில் துவாரம் ஒன்று அமை'கவேண்டும்' அந்த துவாரத்தில் ஒரு மூங்கிற் குழாயை அமைத்து அக்குழாயின் மற்றொரு முனையை ஒன்றன்மேலொன்றாகக் கவிழ்த்து மூடிய இரண்டு பெ'ரகலப் பாத்திரங்களுக்கு இடையில் சேர்த்து அக்குழாயின் இரண்டு முனைகளையும் அசைவின்றி கெட்டிப் படுத்தவும்' அவ் வெண் லப் பாத்திரத்தில் குளிர்ந்த ஜலமும் முதற்பாத்திரத்தில் இரஸம் முதலிய சரக்குகளையும் வைத்து முதற்பாத்திரத்தினடியில் தீயிட்டு எரிக்கவும்; அப்பொழுது முதற்பாத்திரத்திலிருந்து ஜலமுள்ள பாத்திரத்தில் மூங்கிற்குழாய் வழியாய் இரஸம் இறங்கும்' பாத்திரம் முற்றிலும் சூடாய் விடும்வரையில் எரிக்கவேண்டும். இது (டேகியந்திரம்' எனப்படும். 11 14.

டேகிய'திரம்.

உலோஹத்தினால் பன்னிரண்டு அங்குலம் அளவில் இரண்டு மூஷைகள் செய்யவும்' அவற்றுள் ஒன்று நுண்ணிய துவாரமுடையதாயிருக்க வேண்டும்' அதில் கந்தகத்தை அடைக்கவும். மற்றொரு மூஷையில் இரஸத்தைச் சேர்த்து அதனுள் கந்தக மூஷையை நுழைத்து ஜலமுள்ள ஒரு பாத்திரத்தில் இரஸ மூஷை நிற்குமபடி யமைத்து அப்பாத்திரத்திற்குக் கீழேயும் மேலேயும் தீயிட்டெரிக்கவும். இது ராரணயந்திரம்[1]. 1ം 16.

ஜாரணா யந்திரம் (முதல்).

வெள்ளுள்ளியை இடித்துப் பிழிந்து அச்சாற்றை வஸ்திரத்தினால் நன்றாக வடிக்கட்டிக்கொள்ளவும்' ஒரு கலயத்தில் இரஸத்தையும் கந்தகத்தையுட் வைத்து, அவற்றின்மீது அவ்வெள்ளுள்ளிச் சாற்றைத் தாராளமாக ஊற்றி அதன்மேல் மற்றொரு கலயத்தை நிமிர்த்து வைத்துச் சேர்த்து மூடி அ'கலயங்களின் கூட்டுவாயைச் சீலை மண் கொண்டு நன்கு அடைத்துவி' வேண்டும். பிறகு மேலேயுள்ள கலயத்தினுள் வறட்டிகளைக் கொண்டு கபோதபுடம்[2] இடவும்' யந்திரத்திற்கு அடியிலும் வறட்டிகளைக் கொண்டு எரிக்க

ஜாரணா ய'திரம் (இரண்டாவது).

1. இரஸப்ரகாச ஸுதாகரத்தில் ஜாரணாயந்திரமே ஸாரணா ந்திர என்று கூறப்படுகிறது.

2. கபோதபுடம் 10 ட் அத்தியாயம் பார்க்.

வும் அல்லது வேறு எதைக் கொண்டாவது கடுந்தீயிட்டு எரிக்கவும். இவ்விதமாக இடைவிடாது மூன்று நாட்கள் செய்து பிறகு சூடுள்ள அடுப்பின் மீதுள்ள வெந்நீரில் யந்திரத்தை வைத்துப் பிரித்து ஔஷதத்தை யெடுக்கவும். ஆனால் குளிர்ச்சியான இடத்தில் அதைப் பிரித்தெடுக்கக் கூடாது. இவ்விதம் செய்ய இரஸம் அழிவதுமில்லை குறைவதுமில்லை. இம்முறையை அனுஸரித்தே கந்தக ஜாரணமும் செய்யலாம். 17 21.

கச்சப யந்திரம். ஒரு பாண்டத்தில் தண்ணீரை நிரப்பி அதனிடையில் விசாலமான கப்பறையொன்றை வைத்து ஒரு பெரிய மூஷையில் இரஸம் சேர்த்து அம்மூஷையை அக் கப்பறையின்மீது வைத்துள்ள பிடத்தினுள் [1] அமர்த்தி மற்றொரு சிறிய உலோஹ பாத்திரத்தினால் மூடி ஆறு முறை சீலமண்களைக் கொண்டு கூட்டுவாய்களை அடைத்து முற்கூறிய கப்பறையின் இடையில் கருங்காலி-இலந்தை இவற்றின் கட்டைகளாலான கரியை யிட்டெரித்து ஸ்வேதநம் செய்யவும். அந்த யந்திரத்தில் இருக்கையிலேயே அதை மத்தினால் தேய்த்து மர்த்தநமும் செய்யவும். இவ்விதம் செய்ய சூட்டின் வேகத்தினாலேயே கச்சபயந்திரத்திலுள்ள இரஸம் ஜாரணமாய்விடும். இவ்வாறே எல்லாச்சத்துவங்களும் கச்சபயந்திரத்தினுள் பக்குவம் செய்யப்பட அதனுள் திரவத்தன்மையைப் பெறும். 22 24.

வித்யாதர யந்திரம். ஒரு பாண்டத்தை அடியில் வைத்து அதில் அவசியமான ஔஷதத்தைப் போட்டு மற்றொரு பாத்திரத்தினால் அதன் வாயை மூடி சீலை மண் செய்து அதை நாற்புறமும் முகமுள்ளதாய் அமைக்கப் பெற்ற அடுப்பில் வைத்து தீயிட்டெரிக்கவும். இது வித்யாதர

1. பிடம் (1) "இந்துப்பு ய க்ஷாரம் இவற்றை மல்லிகையின் சாற்றில் கரைத்து ஒரு கிதிர மாக்கவும். இந்த பிட எல்லா இரஸவேலைகளிலும் உதவும். (2) நத்தையோடு சங்குப்பொடி கோழி முட்டையோடு, வசார ,கந்தம் இவற்றைச் சூர்ணம் செய்து கஜபுடத்தில் எரிக்கவும். இவ்விதம் ஒரு முறை செய்ய இது சிறந்த பிட ஆகும். இது அயத்தை திரவமாக்கவும், இரஸஜாரணம் முதலியதிலும் உபயோகப்படும். (3) ஸர்ஜக்ஷாரம் இந்துப்பு அன்னபேதி கோபிசந்தநம் இவற்றை அம்லவர்க்கத்தாலும் மூத்திரங்களாலும் ஆட்டியெடுத்து, எழு முறை புடம்போட சிறந்த பிடம ஆகும். இது அப்ர ஜாரணத்துக்கு உபயோகப்படும்" இரஸஸாரம் 8-ம் அத்தியாயத்தில் 76-ம் ச்லோகத்தின் மொழிபெயர்ப்பு பார்க்க.

2. கச்சபயந்திரத்தையே ஜலயந்திரம் என்று இரஸேந்திர சூடாமணி கூறுகிறது.

யந்திரம் எனப்படும். இரஸசாஸ்திரவல்லோர் சிலர் இ தையே கோஷ்டீயந்திரம் என்றும் கூறுவர். 25 26

ஒரு பாத்திரத்தில் ஜலம் நிரப்பி அதன்மீது இரஸாதிகளை ஒரு அகலில் வைத்து மூடி அதன் மேல் மற்றோர் பெரிய அகல் வைத்து அதில் அக்கினியிட்டு எரிக்கவேண்டும். இது ஸோமாநல யந்திரம் எனப்படும். இது அப்ரகம் முதலியதை ஜாரணம் செய்ய உத வும். 27.

ஸோமா ல ய'திரம்.

இனி கர்ப்ப யந்திரத்தைப்பற்றி விவரிப்போம். அது இரஸ பிஷ்டியைக் கொண்டு ஆகவேண்டிய பஸ்மம் செய் வதற்கு உபயோகமாகிறது: நாலு அ'குலம் நீளமும் மூன்று அங்குலம் விஸ்தாரமுமுள்ளதாய் வெகு திடமாக மண் மூஷையொன்று செய்யவேண்டும். அதன் முகம் வட்டமா அமைக்கப்பட வேண்டும். குங்குலியம் ஒரு பாகம் அயப்பொடி இருபது பாகம் உப்பு அதற்கு அரைப்பங்கு களிமண் இவற்றைத் தண்ணீர் ற்றி வெகு மிருதுவாக அரைக்கவும். இதைக்கொண்டு அந்த மூஷைக்கு மேலே தி மாகப் பூச்சிடவும். இம்மூஷையினுள் இரஸௌஷதம் சேர்த்து உமிகளையிட்டு அளவறிந்து மெதுவா எரிக்க ும். இவ்விதம் ஓர் இராப்பகலாவது மூன்று நா'களாவது எரிக்க இரஸேந்திரம் பஸ்மமாகும். 28 31.

ர்ப்பயந்திரம்

ஒரு சட்டியில் மணலை நிரப்பி அதன் மேல் மற்றொரு சட்டியை வைத்து மூடவும். ஐந்து க்ஷாரங்களையும் பிடால லவணத்தையும் ஐந்துவித மூத்திர'களைக் கூட்டி ஆட்டி அக்கல்கத்தை மணல்நிரம்பிய சட்டியில் அமர்த்தி மிருது அக்னியிட்டு எரிக்கவும். இவ்விதம் பக்குவம் செய்யும யந்திரமுறையைச் சாஸ்திரஞர் ஹம்ஸபாக யந்திரம் என்பார்கள். 32 33.

ஹம்ஸ பாக ய'திரம்.

ஈலுகா யந்திரங்கள். (1) நீண்டு குவிந்த முகமுடையதான ஒரு காசிக்குப்பியை யெடுத்து களிமண்ணில் நனைத்த சீலையினால் அதன் மேல் ஓர் அங்குலம் கனம் கவசமிட்டு உலர்த்தவும். அதனுள் மூன்று பாகமளவு இரஸச்சரக்கை நிறப்பவும். பிறகு பன்னிரண்டு அங்குலம் ஆழமுள்ள ஓடு சட்டியில் சிறிது மணலைப் பரப்பி அதில் அக்குப்பியை வைத்து, அதில் மூன்று பாகமுயரத்துக்கு மணலை நிரப்பவும். அப்பால் பாத்திரத்தின் வாயை ஓர் அகலால் மூடி, அவற்றின் கூட்டு வாயை மண்ணைத் தடவி அடைத்து விடவும். பிறகு அச்சட்டியை அடுப்பிலேற்றி எரிக்கவும்; அவ்விதம் அப்பாத்திரத்தின் முகத்தில் மூடியுள்ள அகலின் மேல் ஒரு துரும்பை வைக்க அது எரிந்துவிடும் நிலைமை எப்பொழுது ஏற்படுகின்றதோ அது வரையில் எரித்து வரவேண்டும். இது வாலு ஈயந்திர முறை. (2) இவ்விதமே மணலுக்குப் பதிலாக உப்பைச் சேர்த்து செய்யும் முறைக்கு இலவணயந்திரமெனப் பெயர். (3) ஒரு பாத்திரத்தில் ஐந்து ஆடகம் அளவு[1] மணலை நிரப்பி அம்மணலுக்குள்ளேயே இரஸச்சரக்குகள் அடங்கிய கோளம் முதலியதை வைத்து பக்குவம் செய்யும் முறையும் வாலு ஈயந்திரம்[2] எனக் கூறப்படும் 34—37.

இலவண யந்திரங்கள். (1) வாலுகாயந்திரத்திற்குக் கூறியவாறே உப்பை பாண்டத்தினுள் சேர்த்து இலவணயந்திரம் செய்யலாம். (2) அல்லது ஒரு செப்புப்பாத்திரத்தினுள் இரஸச்சரக்குகளைப் பூசி அதை உப்பு நிரம்பிய அல்லது க்ஷாரங்கள் நிரம்பிய மற்றொரு பாண்டத்தினுள் வைத்து மேலே மூடி பாண்டங்களுடைய கூட்டுவாயை உப்பும் மண்ணும் கூட்டிப் பூசி அடியில் தீயிட்டு எரிக்கவும். இது இரஸங்களைப் பக்குவம் செய்வதற்கு உபயோகமான இலவண யந்திரம்" எனப்படுகிறது. 38—40.

நளிகாயந்திரம். ஒரு பாண்டத்தில் உப்பை நிரப்பி அதனுள் ஒரு இரும்புக் குழாயில் இரஸம் சேர்த்து வைத்து மேலே அகலால் மூடி சீலைமண் செய்து முன்போலவே பக்குவம் செய்யவும்.[3] இது 'நளிகா யந்திரம்' என்று வழங்கப்படுகிறது. 41

---

1. ஆடகம் அறுபத்து நான்கு பலங்கள் கொண்ட அளவு; அதாவது 8-சேர். நான்கு ஆடகங்கள் என்பது 40-சேர்.

2. வாலு ஈயந்திரம் இது ஸ்தாயந்திரம் எனவும் கூறப்படும்.

3. 'முன் போலவே' என்றால் வாலுகா யந்திரத்திற்குப் பக்குவமுறையறிய மேல் அகலில் துரும்பை வைத்து எரியும் நிலைமையைக் கண்டு பக்குவம் அறியும் விஷயம் குறிக்கப்படுகிறது.

ஒரு பள்ளத்தில் அடியில் சிறிது மணல் சேர்க்கவும்; ஒரு மூஷையில் இரஸம் சேர்த்து மூடி அதை அப்பள்ளத்தில் வைத்து அம்மூஷை முற்றிலும் மறையும்படி மணலை நிரப்பி அதன் மேல் வறட்டிகளை அடுக்கித்தீயிட்டெரிக்கவும்; இது பூதர யந்திரம் எனப்படும். 42.

பூதர யந்திரம்.

ஒரு அகலில் இரஸத்தை வைத்து அதன் மேல் மற்றோர் அகலை மூடி சிலைமண் செய்து, அதை வறட்டிகளுக்கு இடையில் வைத்தாவது கரிகளைக்கொண்டு எரிக்கும் அடுப்பில் வைத்தாவது இரண்டு யாமகாலம் எரிக்கவும்; அது 'புட யந்திரம் என்று வழங்கப்படும். 43.

புட யந்திரம்.

பதினாறு அங்குலம் சுற்றளவும் ஒரு முழம் உயரமுமுடைய இரண்டுபாண்டங்களை ஒன்றன்முகத்தில் மற்றொன்றுகச் சமமாகச் சேரும்படி கவிழ்த்து மூடி தாதுத் திரவ்யங்களிலிருந்து ஸத்துவம் இறக்குவதற்காக நிருமிக்கப்படுவது கோஷ்டீ யந்திரம்" எனப்படுகிறது. 44.

கோஷ்டீ யந்திரம்.

காந்தலோஹத்தினால் போதிய அகலமும் உயரமுமுள்ளதாய் ஒரு பாத்திரம் செய்யவும்; அப்பாத்திரத்தின் உட்புறத்தில் மேலே இரு புறத்திலும் இரண்டு வளையங்கள் நன்கு அமைக்கவும்; அதே விதமாகச் சிறிய அளவில் மற்றொரு உலோஹ பாத்திரம் செய்து, அதைப் பெரிய பாத்திரத்தின் வளையங்களில் நுழைத்து வைக்கவும்;[2] சிறிய பாத்திரத்தில் மூர்ச்சநம் செய்த இரஸத்தைச் சேர்க்கவும்; பெரிய பாத்திரத்தில் காடியை நிரப்பவும்; இவ்விதம் அமைத்து அடுப்பிலேற்றி இரண்டு யாமகாலம் உத்தாபநம் செய்வதற்கு எரித்து அதிலிருந்து எழும் ஆவியினால் இரஸத்தை உத்தாபநம் செய்யவும்; சிறிய பாத்திரத்திலுள்ள இரஸம் இதனால் ஷாட்குண்ய குணம் பெற்று மிகச் சிறப்படையும்; இது 'வலபீ யந்திரம்"[3] எனப்படும். 45 46.

வலபீ யந்திரம்.

ஒரு மண் குடத்தில் இரஸச்சரக்கை வைத்து அப்பாத்திரத்தில் பக்கவாட்டில் சிறு துவாரம் செய்து அதில் நீண்ட குழாய் ஒன்றை வைத்து அக்குழாயின் மற்றொரு முனையை வேறொரு பாத்திரத்தில் அவ்விதமே துவாரம் செய்து அமைத்து இரண்டு பாண்டங்களுடைய

திர்யக்பாதந யந்திரம்.

1. "தாது வர்க்காதிகள் நிரம்பிய கீழ் பாண்டத்தை அடுப்பில் ஏற்றி சிறந்த கரிகளைப் போட்டு, அளவறிந்து தீயிட்டெரிக்கவும்" என்று அத்ரிஸம்ஹிதையில் அதிக பாடம் காணப்படுகிறது

2. உள்ளே வளையங்களில் மாட்டிவைக்கும் சிறிய பாத்திரத்தின் அடிப்புறம் பெரிய பாத்திரத்தினுள்ளே அடிப்புறத்தைத் தொடாமல் இருக்கவேண்டும்

3. வலபீ யந்திரம் இது பல பலீயந்திரம் என்று இரஸேந்திர சூடாமணி. ஷாட்குண்யங்கள் வித்யை யோசனை, சில்பஞ்ஞானம் நினைவு அதே விஷயத்தில் கருத்தாயிருத்தல் காரியம் என்பனவாம்.

வும் முகங்களை மூடி சீலை மண் செய்து பிறகு இரஸச்சரக்குள்ள பாத்திரத்தின் அடியில் கடுந்தீயிட்டெரிக்கவும். மற்றொரு பாத்திரத்தில் குளிர்ந்த ஜலம் வைத்து இரஸம் இறக்கவும். சாஸ்திரஞ்ஞரால் இது திர்யக் பாதந யந்திரம் என்று கூறப்படுகிறது. 48 50.

பாலிகா யந்திரம். இரும்பினாலாகிய வட்டமான பாத்திரத்தில் முனை வளைந்தவொரு நீண்ட குழாயை அமைத்து அப்பாத்திரத்தினுள் கந்தகத்தைச் சேர்த்துத் தீயிடவும். இந்த யந்திரம் கந்தக ஜாரணம் செய்ய உபயோகமாகிறது. 51.

கட யந்திரம். பதினாறு சேர் நீர்ப்பொருள் கொள்ளக்கூடிய உள்ளாழமுடையதாய், நான்கு அங்குலம் விசாலமான முகமுடையதாய் அமைக்கப்படும் பாத்திரம் கடயந்திரம் எனப் படுகிறது. இது இரஸத்திற்கு ஷாட் குண்யம் தருவதற்கு உபயோகமானது. 52.

இஷ்டகா யந்திரம். ஓரிடத்தில் வட்டமாக ஒரு பள்ளம் தோண்டவும். அதன் மேல் ஓர் அகலை வைத்து இடையில் துவாரம் செய்த ஒரு மெல்லிய செங்கலை அவ்வகலின் மேல் மூடவும். அத்துவாரத்தைச் சுற்றிலும் ஓர் அங்குலம் உயரமான வரம்பு ஒன்று களிமண்ணால் கட்டவும். அத்துவாரத்தில் இரஸத்தைச் சேர்த்து அவ்வாயின் மேல் ஒரு வஸ்திரத் துண்டைப் போட்டு அவ்வஸ்திரத்தின் மேல் கந்தகத்தை வைக்க வேண்டும். பிறகு மற்றோர் அகலால் அவ்வாயை மூடி அகலுடையவும் வரம்பினுடையவும் கூட்டு வாயை நன்றாகச் சீலைமண் கொண்டு அடைத்து அடிக்குழியிலும் மேலேயும் வறட்டிகளை அடுக்கி கபோத புடமிடவும். இது "இஷ்டகா யந்திரம்' எனப் படுகிறது. இதனால் கந்தகத்தை ஜாரணம் செய்யலாம். 53 56.

ஹிங்குலாக்ருஷ்டி வித்யாதர யந்திரம். ஒரு பாத்திரத்தில் சரக்குகளை வைத்து அப்பாத்திரத்தில் மற்றொரு பாத்திரத்தை வைத்து பிறகு கூட்டுவாயைச் சீலைமண்கொண்டு நன்றாக அடைத்துவிட்டு, மேல் பாத்திரத்தில் ஜலம் வைத்து கீழ்ப் பாத்திரத்திற்கு அடியில் தீயிட்டு எரிக்கவும். இது 'வித்யாதர யந்திரம் எனப்படும்.[1] லிங்கத்திலிருந்து இரஸம் எடுக்க இது உபயோகப்படுகிறது. 57 58.

1. முன்பு ஒரு வித்யாதர யந்திரம் கூறப்பட்டிருக்கிறது. இங்கு கூறப்படுகிற ஹிங்குளாக்ருஷ்டி வித்யாதர யந்திரத் தயே ஊர்த்வ பாதநயந்திரம் என்று வழங்குவர். பளமனச்சிலை யென்னும் லிங்கத்தை ஊமிச்சம்பழச்சாற்றால் ஆட்டி, அடையாகத் தட்டி, ஒரு மட்பாண்டத்தில்வைத்து மேலே ஒருபாத்திரதால் மூடி சுற்றிலும் கூட்டுவாயச் சீலை மண்ணால் அடைத்து மேல் பாத்திரத்தில் குளிர்ந்த ஜலம் சேர்த்து அடியில் எரித்தல் போடவும். மேல் பாத்திரத்து நீர் சூடாகும்போதெல்லாம் அதை இறுத்துவிட்டு மீண்டும் குளிர்ந்தஜலம் சேர்த்து வரவும்; இவ்விதம் 30 அல்லது 40 தடவை செய்ய லிங்கத்திலிருந்து இரஸம் இறங்கும்.

ஒரு பாத்திரத்தில் இரஸாதி சரக்குகளை வைத்து அதன் மேல் மற்றொரு பாத்திரத்தைக் கவிழ்த்து மூடி கூட்டுவாயைச் சீலைமண் கொண்டு நன்ருக அடைத்து அடியில் தீயிடவும். இது டமருகயந்திரம் எனப்படுகிறது' இது இரஸபஸ்ம புறைக்கு உபயோகமானது. 59.

ட ருக ய'திரம்.

ஒரு சட்டியினுள்ளே பிறகு கூறப்படும் ஜலம்ருத்திகையை வைத்து அதில் பள்ளமிடவும்' அப்பள்ளத்தில் இரஸமும் கந்தகமும் வைத்து அப்பள்ளத்தைச் சுற்றிலும் மூன்று அங்குலம் உயரமாக வரம்பு க'டவும்' பசுவின் மூலைக்காம்பு உருவமுள்ள மூஷையை அவ்வரம்பின்மேல் விழ்த்து மூடவும்' அவ்வரம்பினுடையவும் மூஷையினுடையவும் கூட்டு வாய்களை அடியிற்கூறப்படும் ஜலம்ருத்திகையினுல் பூசி நன்ருக அடைத்துவிடவும். பிறகு அக்னிம்ருத்திகையினுலும் ஒரு கவசம் செய்யவேண்டும். இந்த ம்ருத்திகைகளால் மூடப்பட்டால் இரஸம் ஆவியாக வெளியே போக முடியாது. பிறகு அப்பாத்திரத்தில் ஜலம் சேர்த்து அடியில் தீயிடவும் நாபியந்திரம் என்கிற இந்த இயந்திரம் எல்லாம் அறிந்த நந்திதேவஞல் மொழியப்பட்டது. இதனுல் கந்தகம் சுத்தமடைந்து இரஸமும் புகையாமல் நன்கு பக்குவமாகிறது. (1) பழைய இரும்பு கிட்டத்தை வெகு மெல்லிய பொடியாகச் செய்து வெல்லமும் சுண்ணும்பும் அத்துடன் கூட்டி லேஹ்யம் போல் பக்குவம் செய்த வேலம் பட்டைக்கஷாயத்தினுல் அக்கூட்டுச் சூர்ணத்தை நன்ருக ஆட்டியெடுக்கவும்' இது 'ஜலம்ருத்திகை யெனப் படுகிறது' இது ஜலத்தினுல் எவ்வகையிலும் கரைகமுடியாதது. (2) மாக்கல் ப்பு இரும்புக்கிட்டம் இவற்றை எருமைப்பாலால் நன்ருக ஆட்டி யெடுக்கவும். இது அக்னிம்ருத்திகை' எனப்படுகிறது' இந்த ம்ருத்திகை மிகக் கடுமையா அனலின் வேகத்தைபும் தாங்கி நிற்கக்கூடியது. 60 67.

நாபி ய'திர'.

ம்ருத்தி.

அக்னி ம்ருத்திகை.

ஒரு மூஷை மற்றொரு மூஷையினுள் நுழையும்படி இரண்டு மூஷைகளைச் செய்டவும்' அவை அடிமுதல் நுனி வரையில் சுற்றளவில் ஸமமாயிருக்க வேண்டிய தோடு அடித்தடம் தட்டையாயமைந்திருக்க வேண்டும். இது கிரஸ்தயந்திரம் எனப்படும்' இரஸசாஸ்திரஞர் இதை இரஸத்தைப் பக்குவம்செய்வதற்கு உபயோகிப்பர்: 68 68½.

கிரஸ்த ய'திரம்.

ஒரு சிறு பாத்திரத்தில் தாம்ரம் முதலியதைப் போட்டு, அதன் வாயை ஓர் அகலால் மூடி சீலை மண்செய்து அப்பாத்திரத்திற்கு அடியில் தீயிட்டு எரிக்கவும். இது 'ஸ்த்தாலீ யந்திரம்' என்று வழங்கப்படுகிறது 69.

ஸ்த்தாலீ ய'திரம்.

தூபயந்திரம். (1) எட்டு அங்குலம் விஸ்தீர்ணமும் எட்டு அங்குலம் உயரமுமுடையதாய் இருப்புப் பாத்திரம் ஒன்று செய்யவும்; அதனுள் கழுத்துக்கு இரண்டு அங்குலம் கீழே உட்புறமாகப் பிதுங்கியதாய் சுற்றிலும் வரம்பு ஒன்று அமைக்கப்பட வேண்டும்; மெல்லிய இரும்புக் கம்பிகளை அவ்வரம்பின் மீது குறுக்கும் நெடுக்குமாகப் பரப்பி அக்கம்பிகளின் மேல் மெல்லிய பொன்ரேகுகளைப் பரப்பவும். அடியிற் கூறப்படும் தூபனச் சரக்குகளைப் பொன் ரேக்குகள் பரப்பியுள்ள கம்பிகளுக்கு அடியில் போடவும். [தூபனச்சரக்குகள்: கந்தகம் தாளகம் மனச்சிலை இவற்றைக் கஜ்ஜளியாகச் செய்து தூபனத்திற்கு உபயோகிக்கலாம்; அல்லது நாகபஸ்மத்தையாவது உபயோகிக்கலாம்; மேற்கூறியவற்றால் பொன் ரேக்குகளுக்கு தூபம் போடுவது சிறந்த முறையாம்.] மற்றொரு பாத்திரத்தை முற்கூறிய பாத்திரத்தின் மேல் கவிழ்த்து மூடி அவற்றின் கூட்டு வாயை மண்பூசி நன்றாக அடைத்து அடியில் நன்கு தீயிட்டு எரிக்கவும்; இவ்விதம் எரிப்பதால் முற்கூறிய தூபனவஸ்துக்களிலிருந்து கிளம்பும் தூமம் ஏறி அப்பொன் ரேக்குகள் கருநிறமாகப்போய் பஸ்மமாகும்; இரஸமும் துரிதமாகப் பொன்னை ஜாரணம் செய்து அப்பொன்னும் உருகி பஸ்மமாகிறது (2) இவ்விதமே வெள்ளிரேக்குகளை வங்கபஸ்மத்தினால் தூபமிடலாம்; அல்லது யுக்தப்படி வேறு உபரஸங்களாலும் தூபமிடலாம். ஜாரணம் செய்யவேண்டிய சரக்குகளைப் பக்குவம் செய்வதற்காக தூபயந்திரம்" என்கிற இம்முறை கூறப்பட்டது. 70 76.

ந்துக யந்திரம். (1) பெரியதொரு பாத்திரத்தில் ஜலம் சேர்த்து அப்பாத்திரத்தின் முகத்தில் திடமாக வஸ்திரமொன்று ட்டவும்; அவ்வஸ்திரத்தின் மேல் ஆவியிற்பக்குவம் செய்ய வேண்டிய வஸ்துவை வைத்து அம்முகத்தை மூடிவிட்டு அப்பாத்திரத்தின் அடியில் தீயிடவும். இதற்கு கந்துயந்திரம் எனப்பெயர். இதையே வேறு சிலர் வேதநீயந்திரம் என்றும் கூறுவர். (2) அல்லது ஒரு பாத்திரத்தில் லம் சேர்த்து சுத்தமான வைக்கோல் முதலிய திருணங்களை அப்பாத்திரத்தின் வாயில் அடைத்து ஆவியிற் பக்குவம் செய்வதற்கான வஸ்துக்களை அதன்மேல் வைத்து பாத்திரத்தின் வாயைமூடி அடியில் தீயிடவேணும். இதையும் கந்துயந்திரம்' என்பர். 77 80.

கல்வங்கள். ல்வத்திற்கு உபயோகமான சிலை கருப்பாகவும் அல்லது வெண் கருப்பாகவும் ஸ்நிக்தமாகவும் திடமாகவும் பாரமுள்ளதாகவும் இருக்கவேண்டும். (1) பெரிய ல்வத்தின் அளவு பதினாறு அங்குலம் உயரம் ஒன்பது அங்குலம் அகலம் இருபத்தினாலு அங்குலம் நீளம். கர்ஷணியென்னும் குழவியானது பன்னிரண்டு அங்குலம் அல்லது இருபது அங்குலம் நீளமும் சுற்றளவில் பத்து அங்குலமும் உள்ளதாயிருக்கவேண்டும்

இது பெரிய ல்வத்தின் அளவாகும்' இரஸச் சரக்குகளை அரைப் பதற்கு இது சிறந்தது. இரஸம் முதலிய சரக்குகளை அரைப் பதற்கு மிகவும் அனுகூலமான மூன்றுவித கல்வங்கள் உ 'டு. அவற்றுள் மேலே கூறிய பெரிய கல்வம் ஒன்று' இரண்டாவது பின்வருமாறு: (2) இது உயரத்தில் பத்து அங்குலமும் நீளத்தில் பதினறு அங்குலமும் விஸ்தாரத்தில் பத்து அ 'குலமும், ஆழத்தில் எழு அங்குலமும் அளவுள்ளதாய் அமைக்கப்பட வேண்டும்' மேலும் இதன் விளிம்பு இரண்டு அங்குலம் கனமுடை 'பதா யிருக்க வேண்டும் உருவத்தில் அர்த்த சந்திரனைப் போலும் வெகு மழமழப்பாகவும் அமைக்கப்பட வேண்டும் இதன் குழவி பன்னிரண்டு அ 'குலம் . யரமுடையதா யிருக்கவேண்டும். இது இரஸச் சர 'குகளை அரைப்பதற்கு வெகு உபயோகமாயிருப்பதுடன் மேற்கூறிய இரண்டு கல்வங்களும் வெகு வழுமுண்டும் அரைக்கப்படும் சரக்கு வெளியில் சிந்திவிழாமலும் இருக்கும். மேலும் இரண்டாவது கல்வத்தில் ஐந்து பலம் இரஸம் சேர்த்து சுத்தி முதலிய வேலை 'கு அரைக்கலாம். அன்றியும் சரக்குகளின் பரிமாணத்துக்குத் தகுந்தவாறு அவற்றை வேறு கல்வங்களிலும் அரைக்கலாம். (3) வழுமுண்ட சிலையினல் மற்றொரு கல்வம் செய்து கொள்ள ம்' இது உருவத்தில் வட்டமாயிருக்க வேண்டும்; மத்தியில் மிக் ழவழுப் பாய் அமை 'கப்பட வேண்டும்' சுற்றளவில் பன்னிரண்டு அ 'குலமும் ஆழத்தில் நான்கு அங்குலமும் இதன் அளவு. அரைக்கும் குழவி அடிப்புறம் தட்டை யாகவும் தலைப்புறம் நல்ல கைப்பிடியுடையதா வும் அமைக்கப்பட வேண்டும். இந்த வர்த்துள ல் ı

ஈ அரைப்பதற்கு வெகு ஸௌகரியமானது. ஒன்பது அ 'குலம் விஸ்தாரமும் ஆறு அ 'குலம் ஆழமும் உள்ளதாய் இரும்பினல் ஒரு கல்வம் செய்யவேண்டும் அரைக்கும் குழவி எட்டுஅங்குலம் உயரமுள்ளதாயிருக்கவேண்டும். இதுவே தப்த ல்வம் என்றும் கூறப்படுட். இக்கல்வத்தின் உரு மா வே ஓர்அடுப்பை அமைத்து இவ்விருப்புக் கல்வத்தை வைத்து அடுப்பின் பக்கவாட்டில் துருத்தியைக் கொண்டு ஊதவும். இதில் இரஸபிஷ்டியைச் சேர்த்து க்ஷாரங்களையும் அம்ல 'களையும் கூட்டி அரைக்க அனலால் வாட்டப்பட்டு அது வெகு துரிதமாக உருகிவிடும். இக்கல்வமே காந்தலோஹத்தினல் செய்து உபயோகி 'கப்பட்டால் இதில் பக்குவம் செய்ய ்படும் இரஸௌஷதம் அநேக மடங்கு குணத்தில் அதிகரிக்கும். 81 91.

மூன்றுவித ல்வங் ள்.

லோஹ ல்வம்.

## பத்தாம் அத்தியாயம

### மூஷைகள் கோஷ்டிகள் புடங்கள் ஔஷதவர்கங்கள்.

### மூஷைகள்

மூஷையின் விவரணம்.

(1) மூஷையென்பதே கிரௌஞ்சிகா[1] என்றும் குமுதமென்றும் கரஹாடிகா என்றும் பாசநீயென்றும்[2] வஹ்நிமித்ரா என்றும் பல பெயர்களைக் கொண்டு இரஸ சாஸ்திரவல்லோரால் வழங்கப்படுகிறது. (2) சரக்குகளுடைய தோஷங்களை நீக்குகின்றது என்னும் காரணத்தினால் மூஷை என்று வழங்கப்படுகிறது. (3) மூஷையைச் செய்வதற்கு முக்கியவஸ்துக்கள் மண்ணும் உலோஹமுமேயாம். (4) மூஷையினுள் பக்குவம் செய்தெடுக்கப்படும் சரக்கு மிகச் சொற்பமாயினும் அது சிறப்புடையதாகும்.

மூஷையின் ஸந்தி பந்தனம்.

(5) மூஷையையும் அதன் மூடியையும் சேர்த்துச் செய்யும் சீலை மண் பூச்சானது பந்தநம் என்றும் ஸம்ச்லிஷ்டம் என்றும் ஸந்திலேபநம் என்றும் அந்திரணம் என்றும் ரந்திரணம் என்றும் பல பெயர்களால் வழங்கம்படும். 1 4.

மூஷைக்கான ம்ருத்திகை முதலியன.

(1) வெண்மையாகவும் பெருங்கற்கள் அற்றதாகவுமுள்ள மண் மூஷை செய்வதற்கு ஏற்றதாகும் (2) அல்லது வெண் சிவப்பான பெரு மணல்களைப் போன்ற மண்ணும் உபயோகமானது. இந்த மண்கள் வெகு நேரம் அக்னியில் எரித்தாலும் எவ்விதக் கொஞ்சூட்டையும் தாங்கக் கூடியன. அவை கிடைக்காவிட்டால் (3) புற்றுமண்ணையாவது (4) குயவன் உபயோகிக்கும் களிமண்ணையாவது மூஷை செய்ய உபயோகிக்கலாம். (5) சாம்பலாக எரித்த உமிகளையும் சணற்கந்தைகளையும் கரியையும் குதிரைச் சாணத்தையும் மண்ணையும் இரும்புலக்கையினால் இடித்துக் கூட்டி அதைக் கொண்டு மூஷைகளைச் சாதாரணமாகச் செய்வதுண்டு. (6) வெள்ளை மாக்கற்கள் எரித்துச் சாம்பராக்கிய உமிக்கரிகள் சணல் பானையோடுகள் குதிரைச் சாணம் இரும்புக்கிட்டம் இவைகளும் மூஷைக்கான மண்ணுடன் கூட்டியுபயோகிக்க ஏற்றவையாம். 5 7.

வஜ்ர மூஷை.

மண் மூன்று பங்கு சணல் ஒரு பங்கு குதிரைச் சாணம் ஒரு பங்கு எரித்தெடுத்த உமி மாக்கல் இவை முதலியவை வகைக்கு ஒரு பங்கு இரும்புக்கிட்டம் அரைப் பங்கு ஆகியவைகளை உடைத்துப் பொடியாக்கி வஜ்ர மூஷை

---

1. கிரௌஞ்சிகா கோவிகா என்று கூறப்படும்.
2. பாசநீ பாதிநீ என்றும் கூறப்படும்.
3. மூஷை முஷ்ணாதி ரஸாதிகதா தோஷாந்'இதி மூஷா. (இரஸம் முதலியதிலுள்ள தோஷங்களைப் போக்குவது என்கிற பொருளில் மூஷா' என்று பெயர் வந்தது).

என்கிற மூஷையைச் செய்யவும். இது ஸத்துவங்கள் எடுப்பதற்கு உபயோகமானது. 8

யோக மூஷை. எரித்த மரக்கரி எரித்த உமி மணற்கலந்த மண் புற்றுமண் இவைகளை அந்தந்த பிடங்களோடு[1] கூட்டி மூஷை செய்யவும். அம்மூஷையின் மேல் அதே பிடவஸ்துக்களைக் கொண்டு மேற்பூச்சு பூசவேண்டும். அவ்வாறு செய்த யாதொரு மூஷையுண்டோ அது யோகமூஷை என்று கூறப்படுகிறது. இம்மூஷையினால் பக்குவம் செய்யப்பட்ட இரஸமானது வெகு சிறந்ததாயிருக்கும். 9 10.

வஜ்ர த்வாவ மூஷை. மணலும் சுண்ணாம்பும் கலந்த நரை கழுவியெடுத்த பூநாகம் சணல், எரித்தெடுத்த உமி இவை ஸமபாகம் மூஷைக்கான களிமண் ஒரு பங்கு இவற்றை எருமைப்பாலால் ஆட்டியெடுத்து, இம்மூஷை யுருவான யந்திரத்தைச் செய்யவும். இதில் பலவகை யுண்டு. இவ்வாறு செய்யப்பட்ட மூஷை வஜ்ரத்தைத் திரவமாக்கும் வேலைக்கு உபயோகமாகும்[2]. 11 12.

காரமூஷை. எரித்தெடுத்த காரைப்பொடி[3] ஆறு பங்கு இரும்புக்கிட்டம் கரி சணல் றப்புக் களிமண் இவை வகைக்கு எட்டு பங்கு ஆக இவற்றைக் கூட்டி அரைத்து மூஷை செய்யவும். இது காரமூஷை எனக் கூறப்படுகிறது. இரண்டு யாமகாலம் தொடர்ந்து கடுந்தீயில் எரித்தாலும் இம்மூஷை உருகுவதில்லை. 13 13½.

---

1. பிடங்கள் விவரணம் 108-ம் பக்கம் பார்க்க.

2. வஜ்ர த்வாரண மூஷை இதுவே 'வஜ்ர மூஷை' என்று இரஸப்ரகாச ஸுதாகரம். "குளவிக்கூடு, பூநாக ஸத்துவம் உமி கரி சணல் மணல் கலந்தமண் இவற்றை எருமைப்பாலால் மூன்று நாட்கள் அரைத்து, அப்பால் பதினைந்து நாட்கள் வைத்திருந்து அதனால் மூஷை செய்யவும். பிறகு மூட்டைப் பூச்சிகளின் இரத்தத்தினால் மேலே பூச்சிடவும்; அவ்விதமே பிறகு சிற்றுமுட்டி ஸ்வரஸத்தினாலும் பூசி, பிறகு நான்கு யாம காலம் எரித்து அதினாலும் அது அக்னியில் உருகுவதில்லை; இது வஜ்ர மூஷை யெனப்படுகிறது. வஜ்ரத்தை உருக்குவதற்கு உபயோகமானது." இரஸப்ரகாச ஸுதாகரம். இதே மூஷையைப் பற்றி பிறகு 19 21ம் ச்லோகங்களின் மொழிபெயர்ப்பையும் பார்க்க.

3. காரை சுண்ணாம்பு, மணல் முதலியது கலந்து செய்யப்படும் ஒருவித கலப்பு மண். ஆனால் குளவி கூட்டின் அரக்குபோன்ற வஸ்து காரையெனப்படுவதாகச் சிலர்.

4. 'காரை, பூநாகஸத்துவம் சணல் எரித்த உமி இவைகளை மண்ணுடன் கூட்டி எருமைப்பால் விட்டு ஒரு பக்ஷம் நாட்கள் அரைத்து அதனால் செய்யப்படும் மூஷை வஜ்ர மூஷை யெனப்படும்.' இரஸப்ரகாச ஸுதாகரம்.

**வர மூஷை.** வஜ்ரம் கரி உமி இவை ஸமபா ம்· அவற்றிற்கு நான்கு மடங்கு களிமண்· மண்ணுக்குச் சம அளவு கா ர· இவ்வனைத்தையுங் கூட்டி யரைத்து நிர்மிக்கப்படும் மூஷை வரமூஷை என மொழியப்படும். இது ஒரு யாமகாலம் கடுந்தீயைத் தாங்கக்கூடியது. 14 15.

**வர்ண மூஷை. ரூப்ய மூஷை.** (1) இடித்துப் பொடியாக்கிய கற்கள் சிவந்த மண் இவற்றை இரக்தவர்க்கச் சரக்குகளாலான[2] கஷாயத்தைச் சேர்த்து அரைத்து மூஷை செய்யவும்· மண்ணை யும் அன்னபேதியையும் கூட்டியிழைத்து அம் மூஷையின் மேல் பூசவேண்டும். இது வர்ணமூஷை என்று வழ கப்படுகிறது; இது இம்மூஷையிற் பக்குவம் செய்யப்படும் சரக்கு களுக்குச் சிறந்த சிவப்பு வர்ணத் தைக் கொடுக்கும். (2) இவ்வித மாகவே ச்வேத வர்க்கச் சரக்குகளால்[3] ரூப்ய மூஷையும்[4] செய்ய லாம். 16 17

**பிட மூஷை.** அந்தந்த ம்ருத்திகைகளால் மூஷையைச் செய்து பிறகு அந் தந்த பிடச்சரக்குகளால் அம்மூஷையின் மேலே பூச்சிடவேண்டும்· தேஹத்தை உலோஹம் போலே திடப்படுத்துவதற்குரிய ஔஷதமுறைகளைப் பக்குவம்செய்வதற்கு உபயோகமானது இம்மூஷை; இது பிடமூஷை என்று[5] வழங்கப் படுகிறது. 18.

**ஜ்ரத்ரா ண மூஷை. இரா டா து.** காரைப்பொடி சுத்தமாக்கிய பூநாகம் தேய்த்துச் சுத்தப் செ ய்த உமி சணல் இவை ஸமபாகம் அவற்றிற்குச் சம பா மாக மூஷைக்கான மண்· ஆகியவற்றை எரு மைப்பாலால் பதினைந்து நாள் ஆட்டியெடுத்து மூஷை செய்யவும்· பிறகு அதன்மேல் மூட்டை ப்பூச்சிகளின் இரத் தத்தையும் இளசான அம்மாம்பச்சரிசி யிலைச்சாற் றையும் நன்று கப் பூசவும்· பிறகு வேறு ஏற்ற திரவவர்க் ச் சரக்குகளையும் பூசி

1. 'தணிக் ந் த அதற்குச் சமஅளவு உமி கரி அவற்றிற்கு ந லு மடங்கு ம ', ம ணுக்குச் சம அளவு காரை இவற்றை கூட்டி செய்யப்படுவது மூஷை யெ ப்படும்· இது கடுந்தீயை ஒரு யாம நேர தா கும்'' இரஸப்ரகாச ஸுதாகரம்.

2. இர த வர்க் ் -இதே அத்யா ம் 92 ம் ச்லோ த்தின் மொழி பெயர்ப்பு பார் க.

3. ச்வே த ர்க்கம்---இதே அத்யாயம் 95-ம் ச்லோகத்தின் மொழி பெயர்ப்பு பார்க்க.

4. ரூப்யமூஷை வெள் ளியைப் போல் வெ மையாயிருப்ப தால் இப்பெயர் வந்தது.

5. பி மூ ஷ பிடத்திலுலேயே முற்றிலு ஆக்கப்பட்டு பிடத்திலுலேயே மேலே லேபநம் செய்யப்பட்டதும் தேஹத்திற்கு உலோஹம் போன்ற வன்மையுண்டுபண் த் தகுந்ததுமான மூஷை பிட மூஷை யெனப்படுகிறது" இரஸப்ரகாச ஸுதாகரம். [பிட என்டதைப்பற்றி 8 ம் அத்தியாயம் பார்க்க.]

ஞல் இந்த மூஷை நாலு யாமகாலத்திற்குக் குறையாமல் டுந் தீயைத் தாங்கும். இது வஜ்ரத்ராவணமூஷை எனப்படு கிறது. 19 21.

மூஷாப்யாயம். மூஷையை நெருப்பில் வைத்து நன்ருக ஊதிவரு யில் அதில் சேர்த்துள்ள திரவமாக வேண்டிய திரவ்யம் உருகும் தருவாயில் அம்மூஷையை ஒரு நொடிப்பொழுது வெளியிலெடுத்து அ சத்து கொடுக்கும் முறை மூஷாப்யாயநம் எனக் கூறப்படுகிறது. 22.

வ்ருந்தா மூஷை. கத்திரிக்காய் போன்றதோர் மூஷையைச் செய்யவும். அதன் சுற்றளவும் உயரமும் எட்டு அங்குலம் அளவுள்ளதாயிருக்கவேண்டும். அதில் ஒரு புறத்தில் சிறிது துவாரம் அமைத்து அதில் ஊமத்தம் பூவைப் போன்ற உருவமுள்ளதாய் பன்னிரண்டு அங்குலம்[2] நீளமுள்ள குழாயொன்றை இணைத்து அவற்றின் கூட்டு ரயைச் சிறிதும் சந்தில்லாமல் திடமாய் அடைத்துவிடவும். இது வ்ருந்தாக மூஷையெனப்படும். இம்மூஷையின் உதவியினுல் கர்ப்பரம் முதலிய மிருதுவான தாதுத்திரவ்யங்களிலிருந்து ஸத்துவ மெடுக்கலாம் 23 24.

கோஸ்த மூஷை. எந்த மூஷயானது பசுவின் முலைக்காம்பு போன்றதாய் அமைக்கப்பட்டு நடுவிற் காம்புள்ள மூடியுடன் கூடியதாகச் செய்யப்படுகின்றதோ அது கோஸ்தநமூஷை எனப்படும். அது ஸத்துவங்களை உருக்குவதற்கும் சரக்குகளைச் சுத்தி செய்வதற்கும் உபயோகமானது. 25.

மல்ல மூஷை. இரண்டு குறுகிய அகல்களை ஒன்றன்மேல் மற்ருென்ருகக் கவிழ்த்து மூடிச் செய்யப்படுவது மல்ல மூஷை என்று வழங்கப்படுகிறது. இரஸபர்ப்படி முதலியவற்றை ஆவியிற் பக்குவம் செய்யும் முறைக்கு இம்மூஷ யுபயோகமாகின்றது 26.

ப மூஷை. குயவனுடைய கலயம் போன்றதாய் மூடியுடன் வெகு கெட்டியாகச் செய்யப்படும் மூஷையை பக்வமூஷை என்பார்கள். இது போடலீரூபமான இரஸௌஷதங்களைச் செய்ய உபயோகப்படும். 27.

---

1. இதற்கு முன் 1 - 2-ம் ச்லோக மொழி பெயர்ப்பு ஊயும் பார்க்கவும்.

2. இக்குழாய் பத்து அங்குலம் நீளமாயிருக்கவேண்டுமென்று இரஸப்ரகாச ஸுதாகரம்

3. கர்ப்பரம் 22 23-ம் பக்கங்களைப் பார்க்க.

4. 'எந்த மூஷையானது ன்கு உலர்த்தப்பட்டு நெருப்பிலிட்டு சுடப்பட்டு பக்குவம் செய்யப்படுகிறதோ அது பக்வமூஷையெனப்படும்': இரஸப்ரகாச ஸுதாகரம்.

கோளமூஷை. புடமிடவேண்டிய திரவ்யம் உள்ளே அடக்கப்பெற்றதாய் மூடப்பெற்ற முகமுடையதாய் கோளம் போன்ற உருவமுடையதான மூஷை 'கோளமூஷை' என்று கூறப்படுகின்றது. இது வெகு துரிதமாகத் திரவமாகக்கூடிய திரவ்யத்தை அவ்விதம் ஆகாமல் தடுக்குந்தன்மையுடையது. 28.

மஹாமூஷை. யாதொரு மூஷையானது அடிப்புறத்தில் குவிந்தும் கிரமமாக மேற்புறம் அகன்று விரிந்தும் பெரிய கத்திரிக்காய் போன்று பருத்தும் இருக்கின்றதோ அது 'மஹாமூஷை' என்று கூறப்படும். அது அயம் அப்ரகம் இவற்றின் ஸத்துவம் முதலானவைகளைப் புடம் போடுவதற்கும் திராவகமாக்குவதற்கும் உபயோகப்படுகின்றது.[1] 29 - 91.

மஞ்ஜூஷ மூஷை. உருவத்தில் ஸம்புடம் போன்றதாய் ஆழத்திலும் நீளத்திலும் அகலத்திலும் ஆறு அங்குலம் அளவுள்ளதாய் அமைக்கப்படும் மூஷைக்கு மஞ்ஜூஷ மூஷை எனப் பெயர். இம்மூஷையை நிலத்திற் புதைத்து அதன்மேல் புடமிடுவது முறை.[2] 30 31.

முஸலமூஷை. யாதொரு மூஷையானது அடியில் தட்டையாகவும் சுற்றிலும் வட்டவடிமாகவும் உயரத்தில் எட்டு அங்குலம் அளவுடையதாகவும் அமைக்கப்படுகின்றதோ அது முஸலமூஷை என்று கூறப்படும். இது சக்ரிபத்தரஸம்[5] தயார் செய்ய உபயோகப்படுகின்றது. 32.

---

1. 'மிகப் பருமனுகவும், மிக்க நீளமாகவும், முகத்தில் சிறிது அகன்றதாகவும் செய்யப்பட்டுள்ள மூஷை வஜ்ரமூஷையெனப்படும். இது சீக்கிரம் உருகக்கூடிய சரக்குகளைச் சுத்தம் செய்ய உதவும்.'' இரஸப்ரகாச ஸுதாகரம்.

2. 'உயரமும் ஆழமும் உள்ளதாய், நன்கு சதுரமுள்ளதாய் மூஷையொன்று செய்யவும். அதன் நீளம் ஆறு அங்குலம். இது மஞ்ஜூஷ மூஷையெனப்படும்; இரஸத்தை மாரணம் செய்ய இது உபயோகப்படும்.'' இரஸப்ரகாச ஸுதாகரம். [இங்கு கூறப்படுகிற மஞ்ஜூஷமூஷைக்கான விஷயமே மஞ்ஜூஷமூஷை' என்றும் ...பமூஷையென்றும் இரண்டுவகையாக இரஸப்ரகாசஸுதாரத்தில் கூறப்படுகிறது. 'மூஷையை பூமியிற் புதைத்து, மேலே மணலை மூடி புடமிடப்பட்டால் அது ...பமூஷையெனப்படும். இது இரஸத்தைக் கட்டுவதற்கு உபயோகமாகும்.'']

3. இரண்டு அங்குலம் அளவென்று இரஸப்ரகாசஸுதாரம்.

4. பஸ்மமூஷையென்று ற்றொரு மூஷை இரஸார்ணவத்திற் கூறப்படுகிறது. அது பின்வருமாறு "எள்ளுத்தட்டுகளையெரித்த சாம்பல் இரண்டு பங்கு; செங்கற்பொடி ஒரு பங்கு; இவற்றைக் கூட்டி செய்யப்படுவது 'பஸ்மமூஷை' யெனப்படுகிறது. இது வெள்ளியைச் சுத்தம் செய்வதற்கு உபயோகமானது.'

5 சக்ரிபத்தரஸம் ஸ்த்ரீ ரோகாத்யாயத்தில் (22 ம் அத்தி.) விவரிக்கப்படும் ஒரு ஔஷதமுறை.

## கோஷ்டிகள்[1]

கோஷ்டிகளின் பொது உபயோகம்.

ஸத்துவங்களை இறக்குவதற்காகவும் இறக்கியவற்றைச் சுத்தம் செய்வதற்காகவும் பலவகையான உருவமமைந்த கோஷ்டிகள் அமைக்கப்படுவதுண்டு. அவற்றிற்கு இலக்ஷணங்கள் அடியிற்கூறப்படுகின்றன. 33.

அங்கார கோஷ்டி.

இரண்டு முழம் உயரமும் அதிற் பாதியளவு நீளமும் அகலமும் உடையதாய் நான்குமூலைச் சதுரமும் உள்ளதாய் மண்ணால் ஒரு கோஷ்டியை நிருமிக்கவும். அதன் மேற்புறத்தில் நாற்புறமும் சுவர் ஏற்படுத்தவேண்டும். ஒரு பக்கத்துச் சுவரில் பன்னிரண்டு அங்குலம் சுற்றளவுள்ளதாக ஒரு துவாரம் ஏற்படுத்தவேண்டும். சுவருக்கு அடிப்புறத்தில் ஆறு அங்குலம் விஸ்தீர்ணமுள்ளதாய் திடமாகவும் ஒழுங்காகவும் அதேப்படி மற்றொரு துவாரம் அமைக்கப்படவேண்டும். அத்துவாரம் அக்கினியை ஊதுவதற்காக அமைக்கப்படுகிறது. திண்ணை அல்லது சுவருக்கு மேற்புறமாக ஒற்றைச் சாண் அளவில் சுற்றிலும் ஒரு சுவர் அமைக்கப்படவேண்டும். அதன் மேலே ஒற்றைச்சாண் சுற்றளவுள்ளதாய் மற்றொரு துவாரம் அதில் அமைக்கப்படவேணும். அடியிற் செய்துள்ள துவாரங்களில் இரண்டு துருத்திகளின் குழாய் முனைகளை வைத்து கூட்டுச் சந்துகளை நன்றாகச் செங்கல்லைக்கொண்டு அடைத்து மண்ணையும் நன்கு பூசிவிடவேண்டும். இக்கோஷ்டியைக் கரிகளால் நிரப்பி நன்றாக இரண்டு துருத்திகளாலும் ஊதவேண்டும். கரிகளையும் ஊதிப் பக்குவம் செய்யவேண்டிய சரக்குகளையும் மேலேயுள்ள துவாரத்தினாலேயே கோஷ்டியினுள் செலுத்தவேண்டும்; ஸத்துவ பாதநத்திற்கான கோவிகளையும் ஐந்தைந்தாக அடிக்கடியும் சேர்க்கவேண்டும். இது அங்காரகோஷ்டி யெனப்படும். இது கடினமான வஸ்துக்களிலிருந்து ஸத்துவமெடுப்பதற்கு உபயோகப் படுகின்றது. 34 39.

பாதாள கோஷ்டி.

திடமான நிலத்தில் பன்னிரண்டு அங்குலம் குறுக்களவு உள்ளதாய் அவ்வளவு ஆழமுள்ளதாய் வட்டமான குழியொன்றை ஒழுங்காய் அமைக்கவும். அதன் மத்தியில் நான்கு அங்குலம் விஸ்தாரமும் அதே அளவு ஆழமுமுடையதாய் மற்றொரு குழியையும் அமைக்கவேண்டும். இவ்வுள்ளடங்கிய சிறு குழியின் அடியிலிருந்து பூமி மட்டம் வரையில் மற்றொரு மார்க்கமாய் சாய்வாகக் கீழிருந்து மேல் நோக்கியதாய் மெல்லிய துவாரம் செய்து அதனுள் ஒரு

குழாயைச் செலுத்தி இக்குழாயின் பூமிமட்ட முனையில் ஒரு தோல் துருத்தியை இணைக்கவும். ஐந்து கண்களுடையதாக மண்ணால் ஒரு சக்கிரம் செய்து அதை உட்புறத்திலுள்ள சிறு குழியின் மேல் மூடினாற்போல் வைத்து அதற்கு மேல் கரிகளை நிரப்பி தீயிட்டுத் துருத்தியினால் ஊதவேண்டும். மிருதுவான சரக்குகளிலிருந்து ஸத்துவம் இறக்குவதற்கு உபயோகப்படும் இது பாதாள கோஷ்டி எனப்படுகின்றது. சரக்குகளைத் துருத்தியினால் ஊதி பக்குவம் செய்யவேண்டியதற்காக நந்தி யென்பவரால் இது ஏற்படுத்தப்பட்டது. 40 43½.

காரகோஷ்டி. (1) பன்னிரண்டு அங்குலம் ஆழமும் ஒற்றைச் சாண்[1] குறுக்களவும் உள்ளதாய் ஒரு குழியை அமைக்கவும். குழியின் அடித்தடத்திலிருந்து நான்கு அங்குலம் உயரத்தில் உட்புறச் சுவரைச் சுற்றிலும் வரம்பு ஒன்று அமைத்து அவ்வரம்பின்மேல் அநேகம் கண்ணறைகளுள்ளதாய் ஒரு மண் சக்கிரத்தை வைத்து அதன் மேல் கரிகளை நிரப்பி நெருப்பிட்டு வங்கநாளத்தினால் ஊதவேண்டும். சுத்தி செய்த உலோஹத்தைப் பஸ்மம் செய்வதற்கு உபயோகமான இது கார

வங்க நாளம். கோஷ்டி எனப்படுகிறது. (2) மூஷை செய்வதற்கான மண்முதலியவற்றால் ஒரு சாண் சுற்றளவுள்ளதாய் ஒரு குடுவை செய்து அதன் கீழ்வாயில் ஐந்து அங்குலம் நீளத்தில் குழாய் ஒன்றை அமைக்கவும். இது வங்கநாளம் எனக் கூறப்படும். திடமாக அக்கினியை ஊதுவதற்கு இது உபயோகமாகும். 44 47½.

கோஷ்டியின் பொதுலக்ஷணம். ஸித்தரஸம் முதலியவைகளைத் தயார் செய்வதற்காக கோஷ்டி யென்பது நிருமிக்கப்படுகிறது. அதன் பொதுவான உருவம் உயரத்தில் பன்னிரண்டு அங்குலமும் குறுக்களவில் நாலு அங்குலமும் அளவுள்ளதாயிருக்கும். அதற்குப் பக்கவாட்டில் ஊதுவதற்காக குறுக்காய் முகமும் அமைக்கப்பட்டிருக்கும். இவ்வித கோஷ்டிகள் மிருதுவான திரவ்யங்களைச் சுத்தி செய்வதற்கு அனுகூலமானது. 48 49.

## புடங்கள்.

புடமிடுவதால் உண்டாகும் பலன். (1) இரஸம் முதலான வஸ்துக்கள் பக்குவமாவதற்குப் புடமே மிகப் பிரதானமாயுள்ளது. எச்சரக்கையும் ஏற்றக் குறைவான அளவில் பக்குவம் செய்வது விரும்பத் தக்கதல்ல. முறைப்படி நன்றாகப் பக்குவம் செய்த ஒளஷதமே ஹிதமானது. (2) உலோ

(1) ஒற்றைச் சாண் பெருவிரலையும் ஆள்காட்டிவிரலையும் நீட்டிப் பிடிப்பதால் ஏற்படும் ஓர் அளவு. இது சுமார் 6 அங்குளம் அளவு.

ஹம் முதலியவற்றிற்கு அபுநர்ப்பவம் குணத்திற் சிறப்பு அத ஞல் உபயோகத்தில் மேன்மை நீரில் அமிழ்ந்து போகாமை இரேகாபூர்ணத்வம்" என்கிற தன்மைகள் அவற்றைப் புடமிடுவதா லேயே ஏற்படுகின்றன. சில முதலியவைகளும் புடமிடுவதால் எடையிலும் குணத்திலும் இலகுத் தன்மையைப் பெற்று உப யோகிப்பவருடைய தேஹத்தில் எளிதிற் பரவக் கூடியதாகவும் தீபநம் உண்டுபண்ணுவதாகவும் ஆகிறது. மேலும் உலோஹ களைப் புடமிடுவதால் அவை ஜாரணம் செய்யப்பட்ட இரஸேந்தி ரத்தினும் அதிக குணம் பெறுகின்றன. (3) எரிக்கப்படு ால் சிலைகள் கூட அவற்றின் வெளிப்புறத்திற்படும் அக்கினியின் கடும் வேகத்தைப் பெற்றுச் சூர்ணம் முதலிய நிலைமைகளைப் பெறுவது போலே உலோஹங்களிலும் அக்கினியிற் புடமிடுவதாலே உண்மை யில் விசேஷ குணா கள் ஏற்படுகின்றன. 50 53.

மஹாபுடம். ஆழம் நீளம் அகலம் இவற்றில் இரண்டு முழம் அளவுள்ள தாய் ஒரு பள்ளம் தோண்டவும்; அது உருவத்தில் நான்கு மூலைச் சதுக் மாயிருக்கவேண்டும். அதில் ஆயிரம் காட்டுவறட்டிகளை அடியில் அடுக்கி புடமிடவேண்டிய ஔஷதச் சரக்கை மூஷையில் அடக்கம் செய்து அவ்வறட்டிகளின் மேல் மூஷையை வைத்து அம்மூஷையின்மீது ஐந்நூறு வறட்டி களை அடுக்கி உள்ளே தீயிட்டு எரிக்கவும். இது மஹாபுடம் என்று கூறப்படும். 54 55½.

ஜபுடம் ராஹபுடம். (1) இராஜஹஸ்தப்பிரமாணங்கொண்ட [4] அகல நீளங்களும் ஆழமுமுடையதாய் நான்கு மூலைச் சதுக்கமாக ஒரு பள்ளட் அமைக்கவும். அதில் கழுத்து வ ரயில் றட்டிகளை அடுக்கி புடமிடவேண்டிய சரக்கு நிரம்பியுள்ள மூஷையை அதன்மேல் வைத்து முன் அடுக் கிய வறட்டிகளுக்குப் பாதியளவு வறட்டி ளை மீண்டும் அதன் மேல் அடிக்கித் தீயிடவும். இது கஜபுடம் என்று வழ ப்படும். இப்புடம் சரக்௱களுக்கு மிகச் சிறந்த குண களை புண்டு

1. அபு ர்ப்ப ம் 100 ம் பக்கம் பார்க் .

2. இரே ாபூர்ணத் ம் இரேகை ள் பதியும் தன்மை. [ெ கு மிருதுவாகப் பக்குவமான எந்த பஸ்மத்தையும் ஒரு சிறிது எடுத்து விரல் ளால் அழுத்திப் பார் , அவ்விதம் அழுத்தி பஸ்மத்தின்மீது விரல் ளின் இரேகைகள் பதியும்.]

3. சிலை இது மநச்சிலை முதலிய கற் ளை குறிப்பிடுகின்றது. இரத்தினங்களும் இதில் அட கும்.

4. இராஜ ஹஸ்தம் இதுவே ஜஹஸ்தம் என்றும் சொல் லப்படும். ஒ றே கால் முழம் அல்லது 30 அ குலம் அளவு என்று பாவப்ரகாசம் 6-ம் ப மம் பார் க.

பண்ணும். (2) அகல நீளங்களிலும் ஆழத்திலும் ஒரு சாண் அளவுள்ளதாய் முன்போலவே அமைக்கப்படும் புடம் வராஹ புடம் என ' கூறப்படும். 56 59.

குக்குட புடம். பூமியின்மீது ஒரு முழம் உயரமாக ஒரு மேடை யமைக்கவும். அம்மேடையின் அகல நீளங்களும் அதே அளவாய் அமைக்கப்படவேணும். அதன்மீது வறட்டிகளை அடுக்கியிடப்படும் புடம் கு 'குட புடம் எனப்படும்[2]. 60.

கபோத புடம். பூமியின்மீது எட்டு வற' டிகளை ' கீழும் மேலுமாகப் பரப்பி அதனுள் மூஷையில் சரக்கை வைத்துப் புடமிடவும். இது போதபுடம் எனக் கூறப்படும் இர ப மம் செய்யவும் தாம்ரபஸ்மம் செய்யவும் உதவுகின்றது. 61.

கோவரமு ' - ம்கா ர புடமும். (1) பசுக்களைக் கட்டும் தொழுவத்தில் பசுக் ளிட்ட சாணம் உலர்ந்து போய் பசுக்களின் குளம்புகளால் மிதிக் கப்பட்டுப் பொடியாக்கப்பட்டுப்போனால் அது கோவரம் என்று வழங்கப்படும். இரஸௌஷ த 'களைப் பக்குவம் செய்வதற்கு அது சிறந்தது. (2) இக்கோவரங்களாலாவது, உமிகளாலாவது எப்புடம் இடப்படு கிறதோ அது கோவரபுடம் என்று கூறப்படுகிறது[5]. இரஸ பஸ் மம் நன்கு நிறைவேறுவதற்கு இப்புடம் உபயோகமானது. 62 63

பாண்ட புடம். பெரியதொரு மட்பாண்டத்தில் உமியை நிரப்பி அதற்குள் மூஷையை அடக்கம் செய்து அடுப்பிலேற்றித் தீயிட்டு எரிக்கவும். இது பாண்' புடம் என்று மொழியப்படுகின்றது. 64.

1. ' நீளம்-அ லம்-ஆழம் இ ற்றில் $1\frac{1}{4}$ முழம் அளவுள்ளதாய் குழியமைத்து ஆயிரம் ரட்டுவறட்டி ளை அதில் அடுக்கி புடமிட வேண்டிய சரக்கு அ' 'கியதா மூ ஷ மு த் . த மூடி அதில் வைத்து முன் அடுக்கிய வறட்டிகளில் பாதியளவு அதன்மேல்மூடி தீயிடவும். இது ஜ புட எ ப்படும்; எ 'லாப் புடங் ளிலும் இது சிற 'தது." பாவப்ர ரசம்.

. 'இர ' டு விதஸ்திகள் (ஒரு முழம்) அ ல-நீள-ஆழமுள்ள தாய் ர 'கு மூலைச் சதுரமாய் பள்ளம் தோ ' டி அதி ' றட்டி ள் அடு 'கி இடப்படுவது க் ட ட இரஸப்ர ரச ஸ தா ரம்.

3. இரஸபஸ்மம் செய் தற்கு ாத்திரம் கபோதபுட ' உபயோ மாகிறது என்று பாட பேத 'களால் தெரிகிறது.

. கோவரம் இது ோர்வரம் என்றும் ோ யம் என்றும் கூறப்படும்.

5. "பெரியதொரு பா ' டத்தில் கோவரத் த நிரப்பி அதில் மூ ஷயில் இரஸச்சரக்ை த்து பஸ்மம் செய்வதற் ாகப் புடமிட அது கோவரபுடம் எனப்படு '."- பாவப்ரகாசம்.

6. பாண்டபுடமே நுத்ப டபுட ' எ ' று இரஸப்ர ரச ஸ தா ர '. உமிக்குப் பதிலா ம ' ணை வுப்பா ' டத்தில் நிரப்பவேண் டு ' என்று கூறப்படுகிறது

வாலுகா புடம். ஔஷதம் அட ்கிய மூஷையானது அடிப்புறத்திலும் மேற்புறத்திலும் வெகு சூடான மணலால் மூடப்பட்டுப் புடமிடப்படுமானால் அது வாலு ாபு ம் என்று வழங்கப்படுகிறது . 65.

பூதர புடம். ஔஷதச் சரக்கு அடங்கிய மூஷையை பூமியில் இரண்டு அ ்குலம் ஆழத்திற்குக் கீழே நன்ருகப் புதைக்கவும். அதன்மீது வறட்டிகளை அடுக்கிப் புடமிட்டால் அது பூதரபுடம் எனக் கூறப்படும். 66.

லா க புடம். கர்ஷப்பிரமாண ் கொண்ட உமிகளைக் கொண்டாவது கோவரங்களைக் கொண்டாவது பூமியின்மீதே யாதொரு புடம் இடப்படுமோ அதை லாவகபுடம் என்பார்கள்.[2] இது மிகவும் மிருதுவான சரக்கைப் புடமிட்டுப் பக்குவம் செய்ய ஏற்றதாகும். 67.

புடங்களை நிர்யிப்பதில் பொது விதி. மேலும் புட ்களுடைய உருவப் பிரமாணங்கள் கூறப்படாதவிடங்களில் புடமிட்டுப் பக்குவம் செய்யவேண்டிய சரக்குகளு டய வன்ை ம மென்மைகளுக்கிணங்க இவ்விஷய ்களில் திறமையுள்ளவர்கள் நன்கு ஆலோசித்து ஏற்ற அளவு முதலியவற்றைத் தெரிந்து எல்லாப் புடங்களையும் இடவேண்டும். 68.

வறட்டியின் பெயர் ள். பிஷ்டகம் சகணம் சாணம் உத்பலம் உபலம் கிரிண்டம் உபலசாடீ வராடீ ஆகிய இச்சொற் ள் வறட்டியைக் குறிப்பிடும் பர்யாய பதங்களாம். 69.

ஔஷதாதி வர்க் ங்கள்.

அஷ்ட லோஹங்கள். (1) பொன் வெள்ளி தாம்ரம் வங்கம் ராகம் அயம் இந்த ஆறும் ஸஹஜ லோஹங்கள் (2) வெண்கலமும் பித்தளையும் க்ருத்ரிம லோஹங் ள் எனப்படும் . 70.

ஆறு லவ ங்கள். ஸாமுத்ரலவணம் ஸைந்தவ லவணம் பிடால லவணம், ஸௌவர்ச்சல லவணம் ரோமக லவணம் சூலிகாலவணம் என்று இயற்கை உப்புகள்[4] ஆறு வகைப்படும். 71.

---

. ' ஒரு பாண்டத்தில் அடியில் ம லைப் பரப்பி, அத ்மேல் மூஷையை வைத்து, அதன்மேலும் மணலைக் கொட்டி நிரப்பி, அதற்கு அடியிலும் மேலும் தீயிட்டு எரித்தால் அது லு பு னப்படுகிறது'': இரஸப்ரகாச ஸு தாகாரம்.

2. ஷோடசிகா என்பதற்குக் கர்ஷம் (கால் பலம்) என்று பொருள். அதன்படி லாவகபுடம் இடுவது எவ்விதமோ யோசிக்க ே ண்டிய விஷ ம்.

3. உலோஹ ்களைப் பற்றி 54-ம் பக் மு ் பார்க்க.

4. ஸாமுத்ரம் டலுப்பு, ஸைந்தவம் இந்துப்பு, பிடாலம் ரியுப்பு, ஸௌவர்ச்சலம்—அட்டுப்பு ரோம ம் ழுமன்னுப்பு சூலிகா நவ்சாரம்.

க்ஷாரத்ரயம் க்ஷாரபஞ்சகம்.

(1) யவக்ஷாரம் ஸர்ஜக்ஷாரம் டங்கணக்ஷாரம் ஆகிய மூன்றும் க்ஷாரத்ரயம் என்று வழங்கப்படும். (2) பலாசக்ஷாரம் முஷ்கக க்ஷாரம் யவக்ஷாரம், ஸர்க்ஷாரம் திலக்ஷாரம் ஆகிய இவ்வைந்துக்கும் க்ஷாரபஞ்சகம் எனப் பெயர்.[1] 72.

மதுரத்ரயம்.

நெய் வெல்லம் தேன் இம்மூன்றும் மதுரத்ரயம் என்று[2] வழங்கப்படுகின்றன. 72½.

தைலவர்க்கச் சரக்குகள்.

வாலுழுவை பேய்த்தும்மட்டி சோம்பு மணிப்புங்கங்காய் வில்வ விதை கண்டங்கத்திரி விதை வெண் கடுகு ஆட்லாங்கொடி தான்றிக்காய் ஆளி விதை கருஞ்செமப்பு வேப்பம் வித்து எள் நாயுருவி தேவதாளி[4] நேபாளம் உதியன் ஏறழிஞ்சில் கருவூமத்தை சேருங்கொட்டை முருக்கவிதை ஆகிய இவற்றிலிருந்து தைலம் இறக்கி இரசச் சரக்குகளைப் பக்குவம் செய்ய உபயோகிக்லாம். 73 75½.

வஸா வர்க்கம்.

நரி[5] குவளை ஆமை கோழி சிசுமாரம் என்கிற மத்ஸியம் பசுமாடு பன்றி மனிதர் வெள்ளாடு ஒட்டகம் கழுதை செம்மறியாடு எருமைக்கடா இவற்றின் கொழுப்புகள் இரஸ வேலைகளில் உபயோகிக்க உதவும். இது வஸா வர்க்கம் எனப்படும். 76 77.

மூத்திர வர்க்கம்.

(1) யானை ஒட்டகம் எருமை கழுதை குதிரை பசு, செம்மறியாடு இவற்றின் மூத்திரங்களையும் இரஸௌஷதங்களைப் பக்குவம் செய்ய உபயோகிப்பதுண்டு. (2) அவ்விதமே ஸ்த்ரீகளுடைய புஷ்பமும் புருடர்களுடைய சுக்ரமும் உபயோகமாகும். 78.

பஞ்சமாஹிஷம் பஞ்ச சாகலம்.

(1) எருமையினுடைய தயிர் பால் நெய் சாணம் சிறுநீர் இவ்வைந்துக்கும் பஞ்சமாஹிஷம் எனப்பெயர். (2) அவ்விதமே செம்மறியாட்டினுடைய தயிர் முதலிய ஐந்தும் சாகல பஞ்சகம் என்று கூறப்படும். 79.

---

1. க்ஷாரங்களைப்பற்றி 1 79 101 108 115 இப்பக்கங்களையும் பார்க்க.
2. வெல்லத்திற்குப் பதிலாய் சர்க்கரை கூறப்படும். (88-ம் பக்கம் பார்க்க.)
3. கருங்காலி யென்றும் சிலர். [தைலவர்க்கத்திற்கு இரஸௌஷதங்களில் உபயோகத்தைப்பற்றி 83-ம் பக்கம் பார்க்க.]
4. தேவதாளீ கடற்பாலை யென்றும் கூறுவர்.
5. பெட்டைக்கோழி யென்றும் (நரிக்குப்பதிலாய்) பாடம் உண்டு.
6. யானை குதிரை முதலிய மிருகங்களில் ஸ்த்ரீஜாதிகளுடைய சிறுநீர்களே வீர்யமுள்ளவை யென்றும், ஆகவே அவைகளே உபயோகிக்கத் தகுந்தவை யென்றும் பரிபாஷாப்ரதீபம்.

புளிவஞ்சி எலுமிச்சை கிச்சிலி கொ.மட்டிமாதளை புளியாரை கடலைப்புளிப்பு சரக்கொன்றைப்புளி இலந்தை மாதளை மாசிப்பத்திரி புளி நாரத்தை விளாம்பழப்புளி பெருங்களா இவைகளும் மற்றும் புளிப்பாயுள்ள சரக்குகளும் கூட்டி அம்லவர்க்கம் எனப்படும். இவற்றுள் சணகாம்லம் எனப்படுகிற கடலைப்புளிப்பு ஒன்று மாத்திரம் உத்தமமானது. புளிவஞ்சியும் எல்லாவற்றிலும் மிகச் சிறந்தது. இவை இரஸாதிகளைச் சுத்தி செய்வதற்கும் திராவகமாக்குவதற்கும் ஜாரணம் செய்வதற்கும் ஏற்றனவாம். 80 83.

அம்ல வர்க்கம்.

இலந்தை மாதளை புளி கொடிமாதளை புளிவஞ்சி இவ்வைந்தும் பஞ்சாம்லம் எனக் கூறப்படும். இவற்றை அம்லபஞ்சகம் என்றும் கூறலாம்.[1] 84.

பஞ்சாம்லம்.

செங்கல் காவிக்கல் உப்புமண், சாம்பர் புற்றுமண் ஆகிய இவ்வைந்தையும் இரஸச்சரக்குகளின் வேலைக்கு உபயோகமான பஞ்ச ம்ருத்திகைகள் என்று வழங்குவர்.[2] 85.

பஞ்ச ம்ருத்திகைகள்

ச்ருங்ககம் காலகூடம் வத்ஸநாபம் இவையும் க்ருத்ரிம விஷங்களும் பித்த ஸம்பந்தமான விஷமும் விஷவர்க்கம் என்று கூறப்படும். இவை இர த்தை

விஷ வர்க்கம்.

1. 'எலுமிச்சை, நாரத்தை புளிவஞ்சி, புளி, கொம்மட்டிமாதளை இவ்வைந்தும் ஸமபாகமாகச் சேர்க்கப்படுமானல் அம்லபஞ்சகம்' எனப்படும். வாய்சுத்தமாவதற்கும், ஈவரட்சி உடனே சமமாவதற்கும் உபயோகமானது'' இராஜநிகண்டு.

2. 'சாம்பர்' என்பதற்குப் பதிலாய் ஓட்டடை என்று வேறு இடங்களில் கூறப்படுகிறது. (89-ம் பக்கம் பார்க்க.)

3. ச்ரு ம இது நாபியைப் போ றதோர் அதினும் கொடிய விஷச் சரக்கு. பசுவின் கொம்பில் இச்சரக்கைக் ட்டினல் அதன் பால் சென்னிறமாக மாறும் எனப் படுகிறது. லகூட இவ்விஷம் ஒரு விருக்ஷ ஜாதியைச் சேர்ந்தது; உருவத்தில் அரசு போன்றது; இம்மரத்திலிருந்து கசியும் பிசின் போன்ற சத்து காலகூட விஷம் எனப்படுகிறது; இவ்விருக்ஷம் அஹிக்ஷேத்திரத்திலும் ச்ருங்கபேரத்திலும் ொங் ணத்திலும், மலயபர் தத்திலும் உ டு என்று கூறப்படுகிறது. த்ஸநாபம் வத்ஸநாபியைப் போன்ற இவ்விஷச் சர கின் செடி ஆ ரயிலை போன்றது. இதன் அருகில் வேறு செடிகள் பயிராகா. இம்மூன்றும் ஸ்தாவரவிஷயங்களைச் சேர் தவை. க்ருத்ரி விஷங் ர் சிற்சில சரக்குகளின் சேர் கையால் ஏற்படும் விஷங் ள். இவை ரவிஷம் என்றும் தூஷீவிஷம் என்றும் இருவகைப்படும். பித்தவிஷ சில மத்ஸியட் முதலியவற்றின் பித்தம் விஷகு முள்ளது. ['ச்ருங்ககம், காலகூடம், மு த ம், த்ஸநாபம் ஸக்துகம் என்கிற இவை மஹாபஞ்சவிஷ ' எனப்படும்'' என்று இராஜ நிகண்டு.]

ட்டுவதற்கும் இரஸத்தைப் பக்குவம் செய்வதற்கான வேறு முறைகளுக்கும் உபயோகமாகின்றன. இவ்வர்க்கச் சரக்குகளை முறைதவறாக உபயோகித்தால் பிராணாபாயம் நிச்சயமாய் உண்டாகும். 86, 87.

உபவிஷங்கள். சிவனார் கிழங்கு எட்டிக் கொட்டை அலரி கஞ்ஜா சேராங் கொட்டை ஊமத்தை எருக்கு ஆகியவற்றின் கூட்டுக்கு உபவிஷவர்க்கம் என்று[1] பெயர். 88

க்ஷீரவர்க்கம். (1) யானைப்பேடு குதிரைப்பேடு பசு பெண் கழுதை வெள்ளாடு செம்மறியாடு ஒட்டகப்பேடு இவைகளுடைய பால் (2) அத்திப்பால் அரசம்பால் எருக்கம்பால் ஆலம்பால் உதியம்பால் சிறுபாலையின் பால் கள்ளியினங்களின் பால்கள் காட்டாமணக்குப்பால் இவை க்ஷீரவர்க்கம் என்று வழங்கப்படும்; இரஸாதிகளைப் பக்குவம் செய்வதற்கு இந்தப் பால்கள் உபயோகமானவை[2]. 89 90.

மல வர்க்கம். பருந்து காடை மாடப்புறா மயில் கழுகு கோழி இப்பறவைகளின் மலங்கள் மலவர்க்கம் எனக் கூறப்படும்; இவற்றை மேலே பூசுவதாலும் இவற்றைக் கொண்டு புடமிடுவதாலும் எல்லா உலோஹங்களையும் சுத்தம் செய்யலாம். 91, 91½.

இரக்த வர்க்கம். குசும்பாவிதை கருங்காலி அரக்கு மஞ்ஜிஷ்டி செஞ்சந்தனம் நுணா செம்மரம் கஸ்தூரி மஞ்சள் ஸ்வர்ணமாக்ஷிகம் ஆகிய இச்சரக்குகள் மிகச் சென்னிறங் கொடுப்பவை; இவ்வகுப்புக்கு இரக்த வர்க்கம் என்று பெயர். 92 93.

பீத வர்க்கம். பலாசு சரக்கொன்னை, மஞ்சள் மரமஞ்சள் ஆகிய மஞ்சள் நிறச்சரக்குகள் பீத வர்க்கம் என்று வழங்கப்படும்; இவை இரஸேந்திரத்தைப் பக்குவம் செய்யும் முறைகளில் உபயோகப்படுகின்றன. 94.

ச்வேத வர்க்கம். நந்தியாவட்டை வெட்பாலை குருக்கத்தி குன்றுமணி சிறுபாலை வெண் தாமரைக்கிழங்கு ஆகிய வை ச்வேத வர்க்கம் எனப்படும். 95.

---

1. 'எருக்கம்பால், கள்ளிப்பால், கலப்பைக்கிழங்கு அலரி குன்றுமணிவேர், அபினி ஊமத்தை இவ்வேழும் ஸப்த உப விஷங் எனப்படும்'' என்று வேறு சில நூல்களில் கூறப்படுகிறது. 'கள்ளி, எருக்கு, சிவனார்கிழங்கு, குன்றுமணி அலரி எட்டிக் கொட்டை, நேபாளம், ஊமத்தை அபினி என்கிற ஒன்பதும் நவ உப விஷங்கள் ஆம்'' என்றும் சிலர்.

2. இங்கு குறிக்கப்பட்டுள்ளவைகளே யன்றி பாலுள்ள வேறு எல்லாச் செடி கொடிகளுங்கூட க்ஷீரவர்க்கத்தைச் சேரும் எனப்படுகிறது. [இங்கே முதல் வகுப்பைச் சேர்ந்தவற்றை 'ஜங்கம க்ஷீரவர்க்கம்' என்றும், இரண்டாம் வகுப்பைச் சேர்ந்தவற்றை 'ஸ்தாவர க்ஷீரவர்க்கம்' என்றும் கொள்க.]

வாழை, பாகல் த்ரிபலே அவுரி தட்டைக்கோரை சேறு அன்னபேதி மாம்பிஞ்சு ஆகியவை கிருஷ்ணவர்க்கம் எனக் கூறப்படும். 96.

கிருஷ்ண வ க்கம்.

இரக்தவர்க்கம் முதலிய நான்கு வகையான வர்க்கங்களில் அடங்கிய சரக்குகளால் ஜாரணம் செய்ய வேண்டிய திரவ்யத்தை முறை தவறாமல் பாவனை செய்ய அவ்வர்ணச்சரக்குகளின் நிறத்தை அந்த திரவ்யம் அடையும். 97.

இரக்தாதி ர்க்க களின் உபயோகம்.

காசம் வெங்காரம் நத்தையோடு இவற்றின் கூட்டுக்கு சோதநீயகணம்' எனப் பெயர். இவ்வர்க்கம் ஸத்துவங்களுடையவும் கட்டப்பெற்ற இரஸத்தினுடையவும் உலோஹங்களுடையவும் களிம்புகளைப் போக்கடிக்கக் கூடியது. மேலும் காபாலிக கணத்வம்ஸ எ ும் இவ்வர்க்கத்தை இரஸவாதிகள் வழங்குவர். 98.

சோதநீய ர்க்கம்.

பெரு கிழங்கு ஆடுதீண்டாப்பாளை வாலுழுவை பலாச வித்து முயலெலும்புகள் ஆகிய இவை 'லோஹகாடிந்ய நாசநவர்க்கம் எனக்[2] கூறப்படும். 99.

லோஹ காடிந் யநாசிவர்க்கம்.

வெல்லம் குங்குலியம் குன்றுமணி நெய் தேன் வெங்காரம் இச்சரக்குகள் திராவணவர்க்கம் எனப்படும். இவை எளிதில் உருக்கமுடியாத எல்லா லோஹம் முதலியவைகளையும் எளிதில் உருக்க உபயோகப்படும். 100.

திராவண வர்க்கம்.

( ) க்ஷாரங்கள் அனைத்தும் தோஷத்தை நீக்குந்தன்மையன. (2) அம்லங்கள் சுத்தியும் ஜாரணமும் செய்ய உபயோகப்படுகின்றன. (3) விஷங்கள் சரக்குகளின் மந்தத் தன்மையைப் போக்கி வீர்யத்தை விருத்தி செய்யும். (4) ஸ்நேஹங்கள் என்னும் எண்ணெய்ப் பசையுள்ள சர குகள் சரக்குகளுக்கு ஸ்நிக்த்தத் தன்மையை யுண்டுபண்ணு . 101.

க்ஷாராதிக ளின் பொது உபயோகம்.

---

1. உலோஹங்களிலும் இரஸச்சரக்கு ளிலுட் உள்ள தோஷங்களை இரஸவாதி ள் ாபாலிகணம்' என்றும் அத்தோஷங் ளைப் போக்கும் சரக்கை ' பா ிகணத்வம்ஸி' என்றும் வழ குகின்றனராம்.

2. லோஹகாடி ய நாச ம் உலோஹங் ளுக்கு இயல்பாயுள் கடினத்தன்மை யப் போக்குந்தன் ம.

## பதிமூன்றாம் அத்தியாயம்

### இரஸ ஸம் ாரதிகள்.

### மா பரிபாஷை.

நிறைகள் அல்லது அளவுகள்.

[1] அணுக்கள் ஆறு சேர்ந்தது ஒரு த்ருடி. ஆறு த்ருடிகள் கூடியது ஒரு லிக்ஷை. ஆறு லிக்ஷைகள் கூடியது ஒரு யூகம். ஆறு யூகங்கள் சேர்ந்தது ஒரு இரஜஸ். ஆறு இரஜஸ்ஸுகள் சேர்ந்தது ஒரு ஸர்ஷபம். ஆறு ஸர்ஷபங்கள் கூடியது ஒரு யவம். யவங்கள் ஆறு கூடியது ஒரு குஞ்ஜா. இரண்டு குஞ் ாக்கள் சேர்ந்தது ஒரு நிஷ்பாவம். மூன்று குஞ்ஜாக்கள் சேர்ந்தால் ஒரு வல்லம். இரண்டு ல்லங்கள் சேர்ந்தால் ஒரு மாஷம். இரண்டு மாஷங்கள் கூடியது ஒரு தரணம். இரண்டு தரண கள் கூடியது ஒரு சாணம்· சாணத்திற்கே நிஷ்கம் கலை என்றும் பெயர்களாம். இரண்டு சாண கள் சேர்ந்தது ஒரு வடகம்· அதுவே கோலம் எனப்படும். கோல கள் இரண்டு கொண்டது [2] ஒரு தோலம்· அதாவது நான்கு நிஷ்கங்கள் கொண்டது· தோலத்திற்கே கர்ஷம் உதும்பரம் பாணிதலம் ஸுவர்ணம் கவலக்கிரஹம் அக்ஷம் பிடாலபதகம் என்றும் பெயர். இரண்டு தோலங்கள் கொண்டது ஒரு சுக்தி. சுக்திகள் இரண்டு கூடியது ஒரு பலம் என்று சிலர்· மூன்று சுக்திகள் கூடியது ஒரு பலமென்று வேறு சிலர் வழங்குவர்· பலமே முஷ்டியென்றும் பிரகுஞ்சமென்றும் பில்வமென்றும் கூறப்படும். இரண்டு பல கள்

---

1 'ஆறு த்ருடிகள் சேர்ந்தால் ஒரு லிக்ஷை எனப்படும். ஆறு லிக்ஷை ள் ஒரு யூ . ஆறு யூ ங் ள் ஒரு இரஜஸ். ஆறு இரஜஸ்ஸு ள் ஒரு ஸர் ஷபம்; ஸர்ஷபமே ஸித்தார்த்தம் என் ரும் கூறப்படு . ஆறு ஸித்த ர்த்தங்கள் ஒரு யவம் எனப்படும். ஆறு ய ங்கள் சேர் தா ஒரு குஞ்ஜா. மூன்று குஞ்ஜாக் ள் ஒரு ல்லம். ஆறு குஞ்ஜா ள் ஒரு மாஷம். ப னிர டு மாஷ க ஒரு தோலம். எட்டுத் தோலங் ள் சேர்ந்து ஒரு பலமாகும்." [இந்த மா பரிபா ஷ பூனா பதிப்பு மூலத்தில் ஒன்பதாம் அத்தியாயத்தின் முடிவில் இருக்கிறது. இதே விஷயம் 10-ம் அத்தியாயத்தின் ஆர பத்திலும் மொழியப்படுவதால் பிச ாக இவ்விஷயம் 9 ம் அத்தியாயத்தின் முடிவில் சேர்க்கப்ப டிருப்பதா த் தெரியவருகிறது. வேறு பதிப்புகளில் இவ்விஷயத்தையும் 10-ம் அத்தியாயத்தி ஆரம்பத்தில் சேர்த்துப் படி கிறார்கள்.]

2. ே ாலங்கள் மூன்று கொண்டது ஒரு தோலம்' என்று ஒரு பாடம். ஆனா இதர கிர தங் ளில் கோலங்கள் இர டு கொண்டது ஒரு தோலம் எ று கூறப்படுவதாலும் 'நான்கு நிஷ்கங்கள் கொ டது ஒரு தோலம்' என்று இங்கேயே அடுத்தாற்போலே மொழியப்படுவதாலும் "இர டு கோலங்கள் ஒரு தோலம்" எ கிற பாடமே சரியானது எ க் கருதுகிறோம்.

ஸ்வேதநம் மர்த்தநம் மூர்ச்சநம் உத்தாநம் பாதநம் ரோத நம் நியமநம் தீபநம் அப்ரககிராஸமாநட ஸஞ் சாரணம் கர்ப்பத்ருதி பாஹ்யத்ருதி ஈரணம் கிராஸம் ஸாரணம் கிராமணம் வேதநம் சரீர யோகம் என்று இர ஸம்ஸ்காரமு றகள் பதி னெட்டு வகைப்படும். 11 12.

இரஸ ஸ கார மு ற ள் பதினெ வகை.

(1) மர்மஸ்த்தாநம் சிதைவுபட்டிருக்கையிலும் க்ஷார ளா லாவது அ னியினலாவது சுடப்பட்டிருக்கை யிலும் இரஸத்தை பயோகிக் க் கூடாது. (2) இரஸம் நன்கு சுத்தியடைந்திருந்தால் அது மிருதுவான தீ யத் தா கும் இயல்புடையது. (3) மூர்ச்சநம் அடைந்த இரஸம் பிணிகளைப் பரிஹரிக்கவல்லது. (4) மாரணமடைந்த இரஸம் கடுந்தீயிலும் சிறிதும் பறந்துவிடாமல் நிலைத்திருப்பதுட ஆ ராக்கியத்தையும் ஆயுளையும் அபிவ்ருத்தி செய்யுந்த ரமையது. 13 13½.

இரஸத்திற்குப் பல வேறு நிலை ம களிலுள்ள கு ங்கள்.

(1) விஷம் அக்னி மலம் எ பவை இரஸத்திற்குள்ள மூன்று விதமான இயற்கை த்தோஷ ள ம அவை முறை யே மரணம் அழற்சி மூர்ச்சை என்பவை ரு குக் காரண களாம். (2) நா தோஷம் வ க தோ ஷம் என்று வேறிரண்டு தோஷ கள் இரஸத்திற்கு உ டு அவ்விரண்டும் ள கி தோஷ ள் எனப்படும் இத் தோஷ ள் விரைத்தல் பொருமல் குஷ்டம் ஆகிய கோளாறு ளை புண்டுபண்ணும் (3) இரஸம் உற்பத்தியாகிற பூமியிலிருந் தும் மலைகளிலிருந்தும், லத்திலிருந்தும் ஸம்பந்தித்த ஞ்சு தோ ஷ ள் எனப்படும் வேறு ஏழுவித தோஷங்களும் இரஸத்திற்கு உண்டு அவற்றிற்கு பர்ப்பட பாடீ சேதீ த்ராவீ மல ரீ

இரஸத்தின் ப ணிர டு தோஷங்

(மு ப த் த ட ச்சி.)

4 மாஷங் ள் 1 சாணம்
2 ச ங் ள் 1 கோலம்.
2 கோலங் ள் 1 கர்ஷம்.
2 கர்ஷங்கள் 1 தி.
2 சுத்தி ள் 1 பலம்.
2 பலங் ள் 1 பிரஸ்ருதம்.
2 பிரஸ்ருதி ள் 1 குட ம்
2 குடவ ள் ம நி .
2 மாநி கள் 1 பிரஸ்த்தம்.
4 பிர த்த ள் 1 ஆட ம்.
4 ஆட ங் ள் 1 திரோ ணம்.
2 திரோ ங் 1 கும்பம்.
2 கும்பங் ள் 1 திரோணீ
4 திரோணி ள் 1 காரி.
100 பல கள் துலாம்.
2000 பல கள் 1 பாரம்.

1. பதினெ ட்டு விதமான இரஸ ஸம்ஸ்கார மு றகள் இனி விவ ரிக்கப்படும்.

2. யௌகிக தோஷங்கள் சில சரக்குகளின் சேர்க்கை யாலான தோஷங்கள்.

3. ஞ்சுக தோஷங்கள் இரஸத்தின் வீர்யத் த ம றத்துப் போடும் தோஷ ள்.

